# இராமலிங்கர் பாடல்களில்
# சமய நல்லிணக்கச் சிந்தனைகள்

ஆசிரியர்
'செந்தமிழ்ச் செல்வர்', 'தமிழாகரர்'
'நல்லாசிரியர்'
முனைவர் *ச. சாம்பசிவனார்* எம்.ஏ., பிஎச்.டி.,

வளவன் வெளியீடு
அ.பெ. எண் 35
67/1, பாரதவங்கி அலுவலர்
1வது குடியிருப்பு
புறவழிச்சாலை, மதுரை—625 016

பதிப்பு ஆண்டு : 2004
உரிமை : ச. சாம்பசிவனார்
படிகள் : 1000
அச்சகம் : அமுதச்சகம், மதுரை–16
தாள் : 13.7 கே.ஜி. சேசாயி
எழுத்து : 11 புள்ளி
விலை : ரூ. 50/–

RAMALINGAR PADALKALIL SAMAYA NALLINAKKA CHINTHANAIGAL

*By*

DR. S. SAMBASIVANAR, M.A., Ph.D.,

This book is published with the financial assistance of Tirumala Tirupati Devasthanams under their scheme to publish religious books. My sincere thanks to T.T.D. - Author

Published by

Dr. S. Sambasivanar
Valavan Veliyeedu
Post Box No. 35
67/1, State Bank Staff Ist Colony
Bye Pass Road
Madurai - 625 016 (Ph : 2384246)

**Amuthachakam, Madurai - 625 016. (Ph : 2382029)**

# முன்னுரை

*"வாடிடும் பயிரைக் கண்டு*
*வாட்டமும் கொண்டா யன்றோ?*
*நாடிய பசிவந் தோர்க்கு*
*நல்லுணா யளித்தா யன்றோ?*
*கூடியே தொழுகை செய்யக்*
*குரல்கொடுத் தாயே யன்றோ?*
*பாடியே பக்தர் காணப்*
*பரனடி சேர்ந்தா யன்றோ?" (சிவனார் 'விடு பூக்கள்')*

என்பதற்கேற்பக் கருணையே ஓர் உருக்கொண்டு வந்தாற்போல இத் தெய்வத் தமிழ்நாட்டில் தோன்றியவர் இராமலிங்க அடிகளார்! 'சமரச சுத்த சன்மார்க்க சங்கம்' – 'சத்திய தருமச் சாலை', 'சத்திய ஞான சபை' முதலாயினவும், தங்கியிருந்த 'சித்தி வளாகத் திருமாளிகை'யும் ஆகிய அனைத்துமே, உயிர்கள்பால் அடிகளார் வைத்த பெருங்கருணையால் உருவானவை!

போரும், பிணக்கும், பூசலும், சமய–சாதி வெறிகளும் நிறைந்த இன்றைய உலகிற்கு மிகமிகத் தேவை, இராமலிங்க அடிகளாரின் 'சமய நற்சிந்தனைகள்'! "சமயங்கள் என்னும் ஆறுகள் அனைத்துமே கலக்கின்ற இடம், இறைவனாகிய பெருங்கடலில் தான்!" என்பது அடிகளார் வாக்கு!

மதுரைக் காமராசர் பல்கலைக்கழகச் சைவசித்தாந்தத் தத்துவத்துறையில், 'ஓய்வுபெற்ற ஆசிரியர் ஆய்வுத் திட்டத்'தின் கீழ்ச் செய்யப்படும், 'இராமலிங்கர் பாடல்களில் சமய நல்லிணக்கச் சிந்தனைகள்' எனும் இவ் ஆய்வு, காலத்திற்கு ஏற்றது; தேவையானதுமாகும்!

இத்தகு ஆய்வினை மேற்கொள்ளச் செய்த, பல்கலைக்கழகத் துணைவேந்தராக இருந்த பெருமைமிகு பேராசிரியர் மு. சாலிகு; பதிவாளராக இருந்து, இப்போது காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழகத் துணைவேந்தராக இருக்கும் பெருமை மிகு முனைவர் அ. இராமசாமி; துறை ஒருங்கிணைப்பாளராக இருந்த பேராசிரியர் முனைவர் திரு. எ. புஷ்பராஜன்; துறைத் தலைவராக இருக்கும் பேராசிரியர் முனைவர் திரு. ச. கங்காதரன்; துணைவேந்தரின் உதவிப்பதிவாளர் திரு. தே. வில்லியம்ஸ், மற்றும் ஆட்சிக்

குழு உறுப்பினர்கள், தொடர்புடைய அலுவலர்கள் ஆகிய அனைவர்க்கும் என் நன்றியை உளப்படுத்துகின்றேன்.

இராமலிங்க அடிகளாரின் அருள்வழி நிற்பவர்; சன்மார்க்க நெறி உலகமெங்கும் பரவப் பாடுபடுபவராகிய 'அருட்செல்வர்' பெருமைமிகு டாக்டர் நா. மகாலிங்கம் அவர்கட்கு இந்நூலைக் காணிக்கையாகப் படைப்பதில் பெருமகிழ்வு கொள்கின்றேன்.

இந்நூல் வெளிவர நிதி உதவியளித்த திருமலை – திருப்பதி தேவத்தானத்தினர்க்கு என் நன்றி!

இதனை விரைவில் கணினி மூலம் ஆப்செட்டில் அச்சடித்துக் கொடுத்த அமுதச்சகத்தார்க்கு என் நன்றி!

தமிழ்ப்பெருமக்கள் இதனை வாங்கிப் படித்து, வள்ளலார் நெறிபரப்ப வேண்டும் என்பது என் ஆவல்.

என்னை இப்பணியில் ஈடுபடுத்திய–தோன்றாத் துணையாயிருக்கும் எம்பெருமான் திருவருளை நினைந்து வழுத்துவன்.

வாழ்க தமிழ்!

மதுரை – 16<br>தி. வ. ஆண்டு 2035<br>28–06–2004

அன்பன்<br>முனைவர் *ச. சாம்பசிவனார்*



# படையல்!

"உலகம் உய்ய உயர்தமிழ் நாட்டில்
பலரும் வியக்கும் பரமன் அடியார்
இராம லிங்கர் எனும்தவச் சீலர்
குராமணம் கமழும் குரவரின் அன்பர்!
அருட்பா என்னும் அமிழ்தம் ஈண்டு
இருட்கணம் ஓட இன்புடன் தந்தார்!
அவரின் நெறியே அனைவரும் கொள்ளும்
தவநெறி என்று தகவுடன் வாழும்
தொண்டின் தலைவர்; தூயநற் பணிகள்
எண்டிசை போற்ற எழிலுடன் ஆற்றும்
மகாலிங் கம்எனும் மாண்பார் செல்வர்!
மகாலிங் கன்அருள் மன்பதை உய்யப்
பெற்றிட வேண்டும் பெரிதும் விரும்பி
இன்றமிழ் நூலை இவர்திரு வடியில்
நன்றாய்ப் படைப்பேன் நம்நா டுய்யவே!"

- சிவணார்

# உள்ளுறை

பக்கம்

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | |
|---|---|
| அ. ப. க. | – அண்ணாமலைப் பல்கலைக்கழகம் |
| உ. ஆ. | – உரை ஆசிரியர் |
| உ. வே. சா. | – உ. வே. சாமிநாதையர் |
| கழகம் | – சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் |
| ச. சு. ச. ச. சங்கம் | – சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கம் |
| த. ப. க. | – தமிழ்ப் பல்கலைக் கழகம் |
| திரு. வி. க. | – திரு. வி. கலியாண சுந்தரனார் |
| ப. | – பக்கம் |
| பக். | – பக்கங்கள் |
| ப. ஆ. | – பதிப்பு ஆசிரியர் |
| ம. பொ. சி. | – ம. பொ. சிவஞானம் |
| மு. கா. நூ. | – முன்னர்க் காட்டிய நூல் |
| மேலது | – மேலே காட்டிய நூல் |
| வி. உ. | – விளக்க உரை |
| A. U. | – Annamalai University |

# பாடல் எண்கள் விளக்கம்

1. திருவருட்பா முதல் 5 திருமுறைகள், ந. ரா. ஊரன் அடிகள் புதுப்பித்த – சென்னை இராமலிங்கர் பணிமன்றம் வெளியிட்ட (1981) நூலையும்; 6ஆவது திருமுறை, சென்னை அருட்சோதி அச்சகம் வெளியிட்ட (1942) நூலையும், பெரும்பாலும் அடிப்படையாகக் கொண்டவை.

2. சில பாடல்கள், கிரிதாரி பிரசாத் தொகுத்த – சென்னை இராமலிங்கர் பணிமன்றம் வெளியிட்ட (1994) நூலை அடிப்படையாகக் கொண்டவை.

3. படங்கள், திருச்சி மாவட்ட சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கம் வெளியிட்ட நூற்றாண்டு விழா மலரில் (1967) உள்ளபடி.

1

# தோற்றுவாய்

## முன்னுரை

*"சன்மார்க்க சங்கம் கண்ட*
*சால்புடைப் பெரியோய்! நீதான்,*
*துன்மார்க்கம் நீங்கு தற்குத்*
*தூயதொண் டாற்றி நின்றாய்!*
*பன்மார்க்கத் தால்,திண் டாடும்*
*பாமரர் துயரைத் தீர்த்தாய்!*
*உன்மார்க்கம் வழிநின் றாலே*
*உயர்ந்திடும் உலகம் உண்மை!"*

*"சத்திய ஞான சபையும்*
*கண்டது நீயே யன்றோ?*
*சத்திய தருமச் சாலை*
*அமைத்ததும் நீயே யன்றோ?*
*சத்தியம் சொல்லி நீதான்*
*சங்கடம் தவிர்த்தா யன்றோ?*
*சத்தியம் நிலைத்து நிற்கும்*
*தருமமே வெல்லும் அன்றோ?" (சிவனார் 'விடுபூக்கள்')*

என்பது 'வள்ளலார்' எனப்படும் இராமலிங்க அடிகளாரைப் போற்றித் துதிக்கும் பாடலாகும். இத்தகைய அருள்ஞானி அடிகளார் திருவாய்மலர்ந்தருளிய 'திருவருட்பா' என்னும் தெய்வத் தமிழ்ப் பாடல்களில் 'சமய நல்லிணக்கச் சிந்தனைகள்' குறித்து ஒருசிறிது ஆராய்வதே இவ் ஆய்வுத் திட்டமாகும்.

## ஆய்வின் நோக்கம்

சமயங்களாலும், சாதிகளாலும், இனங்களாலும், அரசியலாலும் உலகமே தடுமாறித் திணறிக் கொண்டிருக்கிறது. எங்கு நோக்கினும், இனப்போர்–வர்க்கப் போர்; கொலை–கொள்ளைகள்; சாதிச் சண்டைகள்–அரசியல் சூதாட்டங்கள்! இக் கொடுமைகளினின்று மக்கள் விடுபட்டாக வேண்டும்; பிறவி எடுத்ததன் பெரும்பயன் யாது எனத் தெரியாமலேயே பலர் தங்கள் வாழ்வைச் சீர்குலைத்துக் காலன்வாய்ப் படுகின்றனர்.

இவையெல்லாம் நீங்கிப் பிறவி பெற்றதன் உண்மையான பயனை அடையவேண்டும். அதற்கு இராமலிங்கர் அருளிய 'திருவருட்பா' பெரிதும் துணைபுரியும். அடிகளாரின் பாடல்களைப் படிப்பவர்தம் நெஞ்சகத்தே 'சமய நல்லிணக்கச் சிந்தனைகள்' கால்கொள்ளும் என்பது உறுதி. அதற்காக உருவானதே இவ் 'ஆய்வு'.

## *ஆய்வு முன்னோடிகள்*

இராமலிங்க அடிகளார் பாடிய 'திருவருட்பா' பல்வேறு வகைகளில் வெளிவந்துள்ளன. ந. ரா. ஊரன் அடிகள் புதுப்பித்த 'திருவருட்பா–முதல் 5 திருமுறைகளை'ச் சென்னை இராமலிங்கர் பணி மன்றம் வெளியிட்டுள்ளது. அவ்வாறே, சென்னை அருட்பெருஞ்சோதி அச்சகம், 'திருவருட்பா – ஆறாவது திருமுறை' நூலை வெளியிட்டுள்ளது. ஔவை சு. துரைசாமிப் பிள்ளை எழுதிய உரை விளக்கங்களுடன் அ.ப. கழகம், 'திருவருட்பா – மூலமும் உரையும்' என்ற தலைப்பில் பல தொகுதிகளாக வெளியிட்டுள்ளது. அ. லெ. நடராசன், 'வள்ளலார் அமுதுமொழிகள் ஆயிரம்' வெளியிட்டுள்ளார். சென்னை இராமலிங்கர் பணி மன்றம், நா. கிரிதாரி பிரசாத் தொகுத்த 'திருவருட்பா – திருவமுதத் திரட்டு' என்ற நூலை வெளியிட்டுள்ளது. புரசு. பாலகிருஷ்ணன் எழுதிய 'ஞானக்கவி இராமலிங்கர்', திரு. வி. கலியாண சுந்தரனார் எழுதிய, 'இராமலிங்க சுவாமிகள் திருவுள்ளம்', குங்குலியம் பழ. சண்முகனார் எழுதிய 'தயவுருவ அருளாளத் தமிழ்மகனார்'; எம். ஏ. கந்தசாமி எழுதிய 'அருட்பா அமுது–600'; க. வ. திருவேங்கடநாயுடு எழுதிய, 'திருவருட்பா – இங்கிதமாலை உரை', கழக வெளியீடுகள் எனப் பலநூல்கள் வெளிவந்துள்ளன. அனைத்திற்கு மேலாக ம. பொ. சிவஞானம் எழுதிய 'வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு' என்னும் நூல் மிகச் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது. இவ்வாறே, சென்னை 'சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்க நூற்றாண்டு விழாச் சிறப்பு மலர்' (1965); திருச்சி மாவட்ட 'சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கம்' வெளியிட்ட மலர்கள் (1965, 67) ஆகியனவும் 'திருவருட்பா'க் குறித்த ஆய்வு நூல்களுள், பா. அருள்செல்வி எழுதிய 'சமரச சுத்த சன்மார்க்க நெறி' என்ற நூலும் இராம. மலர்விழி மங்கையர்க்கரசி எழுதிய 'ஒப்பியல் சமய நோக்கில் திருவருட்பா' என்ற நூலும் குறிக்கத் தகுவன.

## *ஆய்வின் அடிப்படை*

இவ் ஆய்வுக்குச் சென்னை இராமலிங்கர் பணி மன்றம் வெளியிட்டுள்ள, 'திருஅருட்பா – முதல் 5 திருமுறைகள்'; அருட்பெருஞ்சோதி அச்சகத்தார் வெளியிட்டுள்ள 'திருவருட்பா–ஆறாவது திருமுறை'; 'சமரச சுத்த சன்மார்க்க சங்க நூற்றாண்டு விழாச் சிறப்பு மலர்'; நா. கிரிதாரி பிரசாத் தொகுத்த 'திருவருட்பா –

திருவமுதத்திரட்டு'; திரு. வி. கலியாண சுந்தரனார் எழுதிய 'இராலிங்க சுவாமிகள் திருவுள்ளம்'; ம. பொ. சிவஞானம் எழுதிய 'வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு' ஆகிய நூல்களும், இராமலிங்கரின் திருவருட்பாப் பற்றி ஏனையோர் எழுதிய நூல்களும் இவ் ஆய்வுக்கு அடிப்படை எனலாம்.

## *ஆய்வு எல்லை*

'இராமலிங்கர் பாடல்களில் சமய நல்லிணக்கச் சிந்தனைகள்' எனும் இவ் ஆய்வு, பரந்துபட்டது; விரிந்தது. அடிகளார் பாடிய ஒவ்வொரு பாடலிலிருந்துங்கூட இத்தகைய கருத்தைக் காண்டல் கூடும். எனினும், 'ஓராண்டு' எனும் கால எல்லை கருதி, இன்றைய சமுதாயத்திற்கு உடனடித் தேவையாகக் கருதப்படும் சமய நல்லிணக்கச் சிந்தனைகள் ஆராயப்பட்டுள்ளன. இது குறித்து மேலும் ஆராய இடமுண்டு.

## *அணுகுமுறை*

இவ் ஆய்வு, 'பகுப்புமுறை', 'விளக்கமுறை', 'ஒப்பீட்டு முறை', 'திறனாய்வு முறை' என்னும் வகைகளில் அமைந்துள்ளது.

## *ஆய்வுப் பகுப்பு*

இவ் ஆய்வு, பின்வருமாறு இயல்களைக் கொண்டுள்ளது:

1. தோற்றுவாய்
2. இராமலிங்க அடிகளார் வரலாறு
3. திருவருட்பா – ஒரு பார்வை
4. இராமலிங்கர் பாடல்களில் சமய நல்லிணக்கச் சிந்தனைகள்
    - 4.1 இராலிங்க அடிகளாரின் சமயம்
    - 4.2 சமரச சன்மார்க்க சங்கம்
    - 4.3 சத்திய தருமச்சாலை
    - 4.4 சித்திவளாகம்
5. முடிவுரை

'தோற்றுவாய்'எனும் இவ்இயலில், 'ஆய்வுநோக்கம், ஆய்வு முன்னோடிகள், ஆய்வின் அடிப்படை, ஆய்வு எல்லை, ஆய்வு அணுகுமுறை' முதலாயின இடம் பெறுகின்றன. 'இராமலிங்க அடிகளார் வரலாறு' எனும் இயலில், அடிகளாரின் வாழ்க்கை வரலாறு இயம்பப்படுகின்றது. 'திருவருட்பா – ஒரு பார்வை' எனும் இயலில் அவர் அருளிய, ஏறத்தாழ 5818 பாடல்களில், ஒரு சில மட்டும்

விளக்கப்படுகின்றன. 'இராமலிங்கர் பாடல்களில் சமய நல்லிணக்கச சிந்தனைகள்' எனும் இயலில், சமயங்கள், சமய ஒற்றுமை, இதற்காக அடிகளார் காட்டிய சமய நல்லிணக்கச் சிந்தனைக் கருத்துக்கள் எனும் இயல், 4 உட்பிரிவுகள் கொண்டது. (1) 'இராமலிங்க அடிகளாரின் சமயம்' என்பதில் அடிகளார் சைவ சமயத்தைச் சார்ந்தவர் என்பது விளக்கப்படுகின்றது; (2) சமரச சன்மார்க்க சங்கம்; (3) சத்திய தருமச் சாலை (4) சித்தி வளாகம். 'சமரச சன்மார்க்க சங்கம்' என்பதில், 'சாதி – சமயம் – மொழி – நாடு' எனும் வேற்றுமைகளையெல்லாம் கடந்து, உலக உயிர்க்குலம் அனைத்துமே உய்திபெற வேண்டும் எனும் நோக்கத்துடன் அடிகளாரால் நிறுவப்பட்ட இச்சங்கத்தின் பணிகள் விரித்துரைக்கப்படுகின்றன; **'சத்திய தருமச் சாலை'** என்பதில், 'பசித் துன்பம் போக்குதல் பேரறம்'; பசியை நீக்குவதனால்தான் ஆன்மநேய ஒருமைப்பாட்டுணர்வைப் பெறமுடியும் என்ற நன்னோக்கத்தால் அடிகளார் நிறுவிய இச் 'சாலை' குறித்தும், அதன் பணிகள் குறித்தும் விரித்துரைக்கப்படுகின்றன. **'சித்தி வளாகம்'** என்பதில், அடிகளார் நிறுவிய 'சத்திய ஞான சபை', எம்மதத்தினர்க்கும் எவ்வர்க்கத்தினர்க்கும், எத் தேசத்தவர்க்கும் பொது எனும் தமது கொள்கையையும், 'அருட்பெருஞ்சோதி தனிப்பெருங் கருணை' எனும் தமது முழக்கத்தையும் நாள்தோறும் பரப்புதற்கெனத் தங்குமிடமாக அடிகளார் வைத்துக் கொண்ட 'சித்திவளாகத் திருமாளிகை' குறித்து விரிவாக இயம்பப் படுகின்றன. 'முடிவுரை' என்னும் இறுதி இயலில், ஆய்வு முடிபுகள் தொகுத்துச் சுருக்கமாகத் தரப்படுகின்றன. 'பின்னிணைப்'பில், 'முதன்மை ஆதாரம், துணைமை ஆதாரம்' என நூற்பட்டியல்; வள்ளலார் திருக்கரத்தினால் எழுதப்பட்ட மூல ஏட்டின் படம், சத்திய தருமச் சாலை, சித்தி வளாகம், அடிகள் வரலாறு – கால அட்டவணை, முதலாயின தரப்பட்டுள்ளன. இவ் ஆய்வேட்டின் தொடக்கத்தில், அடிகளாரின் திருவுருவப் படம் தரப்பட்டுள்ளது.

## *மேற்கோள் விளக்கம்*

இவ் ஆய்வில், இராமலிங்க அடிகளார் அருளிய பாக்கள், திருக்குறள், மணிமேகலை முதலானவற்றிலிருந்து எடுக்கப்பட்ட பாடல்கள், அடிகளாரைப் பற்றிப் பல்வேறு அறிஞர்கள் கூறிய கருத்துக்கள் ஆகியன, தேவையான இடங்களில் மேற்கோள்களாக எடுத்தாளப் பட்டுள்ளன. சில இடங்களில் முழுமையான பாடல்கள்; சில இடங்களில் பாடல் அடிகள் இடம் பெற்றுள்ளன.

2

# இராமலிங்க அடிகளார் வரலாறு

## முன்னுரை

"கடவுள் எல்லா உயிர்களுக்கும் பொதுவான, தாயும் தந்தையும் ஆனவர்; அருள் வடிவாக விளங்குபவர்; உலக வாழ்க்கை ஒழுங்காக நடைபெறும் பொருட்டு, ஒழுங்கான விதிகளின் - படியாவும் நடைபெறுமாறு ஆட்சிபுரியும் தலைவர்; உயிர்களை எல்லாம் குழந்தைகள் போல் கருதி, யாதொரு வேறுபாடும் இல்லாமல் நலம் செய்பவர்; செல்வர் - வறியர், உயர்ந்தோர் - தாழ்ந்தோர் என்ற வேறுபாடுகளைப் பொருட்படுத்தாத அருளாளர் அவர். உண்மை அவரே; அறிவு அவரே; அன்பும் இன்பமும் அவரே. இவ்வாறெல்லாம் திரும்பத் திரும்ப உணர்த்தி, உலகை உய்விக்க வந்த ஞானியர் திருக்கூட்டத்தைச் சார்ந்தவர் 'அருட் பிரகாச வள்ளலார்' இராமலிங்க அடிகளார்!"[1]

என்பது மு. வரதராசனார் கூற்று. இத்தகு அருளாளரின் வாழ்க்கை வரலாற்றை ஒரு சிறிது எடுத்துரைப்பதே இவ் இயலின் நோக்கம்.

## தோற்றமும் இளமைப்பருவமும்

தமிழகத்தில், திருக்கோயில்களின் எண்ணிக்கை, மிகப்பலவாம்! எனினும், 'கோயில்' என்றாலே, நடராசப் பெருமான் எழுந்தருளியிருக்கும் சிதம்பரத்தைத் தான் குறிக்கும். உலகமெலாம் வியக்கும்படி, ஆனந்தத் திருநடனம் புரியும் நடராசப் பெருமானின் திருக்கோலம் கண்டு, உள்ளம் உருகிப் பாடிய அடியார்கள் பலர். அவருள் ஒருவர் திருநாவுக்கரசர்.

"குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயிற்
குமிண் சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல் மேனியில்
பால்வெண் ணீறும்

*இனித்தமுடைய எடுத்தபொற் பாதமும்*
*காணப் பெற்றால்*
*மனித்தப் பிறவியும் வேண்டு வதே*
*இந்தமா நிலத்தே!"*[2]

என, இத்திருக்காட்சியைக் காண, மனிதப் பிறவி தமக்கு வேண்டும் என்கின்றார் அவர்!

இத்தகு பெருமை பெற்றது சிதம்பரம். இதற்கு வடமேற்கே ஏறத்தாழப் பத்துக்கல் தொலைவில் உள்ள மருதூரில் சுபானு ஆண்டு, புரட்டாசித் திங்கள் 21 ஆம் நாள் (5-10-1823) ஞாயிறன்று இம் மண்ணுலகில் தோன்றினார் 'அருட்பிரகாச வள்ளல்' இராமலிங்க அடிகளார்! அந்த நாள், 'அருட்சோதி' தோன்றிய புண்ணியத் திருநாள்!

அடிகளாரை மகனாகப் பெறுதற்குரிய பேறு பெற்ற பெற்றோர்கள், கருணீகர் குலத்தைச் சார்ந்த, இராமையா பிள்ளை - சின்னம்மாள்!. இராமையா பிள்ளைக்குச் சின்னம்மாள் ஆறாம் தாரம்! ஐந்து மனைவியரை ஒருவர்பின் ஒருவராக மணந்து மணந்து, அவர்கள் அடுத்தடுத்து இறந்து போக, ஆறாம் மனைவியாகச் சின்னம்மாளை மணமுடித்தார் இவர்! சின்னம்மாள், 'சபாபதி, பரசுராமன், சுந்தரம்மாள், உண்ணாமுலை' என நான்கு குழந்தைகளைப் பெற்ற பின், ஐந்தாம் குழந்தையாக இராமலிங்கரை ஈன்றெடுத்தார்!

இராமையா பிள்ளை, ஊர்க்கணக்கர். தம்மூரிலுள்ள பிள்ளைகளுக்குக் கல்வி கற்பித்தும், வணிகர்களுக்குக் கணக்கெழுதிக் கொடுத்தும் வாழ்க்கையைக் கழித்தார். ஆனால், இராமலிங்கர் பிறந்த அடுத்த ஆண்டிலேயே இராமையா பிள்ளை இயற்கை எய்திவிட்டார்! குடும்பத்திற்கு வேறு ஆதரவு இன்மையால், சின்னம்மையார், தம் குழந்தைகளுடன், தாம் பிறந்து வளர்ந்த ஊராகிய 'பொன்னேரி' என்ற ஊருக்குக் குடிபெயர்ந்தார். சில ஆண்டுகள் கழித்து, மூத்த மகன் சபாபதிப்பிள்ளையின் தலைமையில், குடும்பம் சென்னைக்குக் குடியேறியது.

சபாபதிப்பிள்ளை, காஞ்சிபுரம் மகாவித்துவான் சபாபதி முதலியாரிடம் முறையாகத் தமிழ்க் கல்வி பயின்று புலமை பெற்றார்; தாம் வாழ்ந்த பகுதியில், பிள்ளைகளுக்குக் கல்வி கற்பித்தும், புராணச் சொற்பொழிவுகள் நிகழ்த்தியும் குடும்பத்தை நடத்திவந்தார்!

இராமலிங்கருக்குப் பள்ளிக் கல்வியில் சிறிதும் நாட்டமில்லாமை உணர்ந்த சபாபதிப்பிள்ளை, தம் தம்பிக்குத் தாமே கல்வி கற்பித்தார்; ஆயினும் அதுவும் பலனளிக்கவில்லை! உலகியற் படிப்பில் இராமலிங்கருக்கு நாட்டமில்லை. கற்க

வேண்டுவனவற்றை இறைவனிடமே கற்றார்; கேட்க வேண்டுவனவற்றையும் இறைவனிடமே கேட்டுத் தெளிந்தார். இவ்வகையில் ஓதாமல் உணரும் ஞானம் பெற்றார் எனலாம்.

சுவாமி இராமகிருட்டிண பரமஹம்சரும் தொடக்கப்பள்ளியில் 2 ஆவது வகுப்புவரைதான் படித்தவர்; ஆயினும் ஆன்ம ஞானத்தில் மிகச் சிறந்து விளங்கியவர் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.[3]

இராமலிங்கர், தாம் ஓதாது உணர்ந்த அருட்செயலைக் குறித்துப் பாடுவது வருமாறு:

*"ஓதா துணர்ந்திட ஒளியளித் தெனக்கே*
*ஆதார மாகிய அருட்பெருஞ் சோதி!"*[4]

இராமலிங்கரின் உள்ளொளியை அறிந்து கொள்ள இயலாத அண்ணன் சபாபதி பிள்ளை, 'கல்வியில் நாட்டமில்லாத முரடன்' எனக் கருதி, வீட்டைவிட்டே துரத்தி விட்டார். ஆனால் கருணையுள்ளம் கொண்ட சபாபதிப்பிள்ளையின் மனைவியார் பாப்பாத்தி அம்மாள், தம் கணவருக்குத் தெரியாமல் உணவளித்து வந்தார்!

ஒரு நாள், தந்தையாரின் நினைவுநாள் வந்தது; அன்று அண்ணனும் தம்பியும் எதிர்பாராவிதமாகச் சந்தித்துக் கொண்டனர். "அண்ணன் சொற்படி கல்வி கற்கிறேன்" என்று இராமலிங்கர் கூற, வீட்டின் மேல்மாடியில் ஓர் அறையில் கல்வி பயில ஏற்பாடாயிற்று!

ஆனால், இராமலிங்கர் பயிலத் தொடங்கியது, உலகியற் கல்வியன்று! 'சாகாக் கல்வி'! அதனைப் பயிற்றுவித்தவர் முருகப்பெருமான்! அடிகளார், தம் அறையில், ஒரு கண்ணாடியைச் சுவரில் மாட்டி, அதற்கு வழிபாடு செய்து வந்தார். முருகப்பெருமான் அக்கண்ணாடியில் காட்சியளித்தார்.

சென்னையில் உள்ள கந்தகோட்டத்தில் எழுந்தருளியிருக்கும் முருகப்பெருமான்பால் அளவிறந்த பக்தியுடையவராய்த் திகழ்ந்தமையால், வள்ளலாருக்கு முருகன் காட்சி தந்ததில் வியப்பில்லை!

முருகக் காட்சிகண்டு வள்ளலார் பாடிய பாடல் ஒன்று:

*"சீர்கொண்ட தெய்வ வதனங்கள் ஆறும் திகழ்கடப்பந்*
*தார்கொண்ட பன்னிரு தோள்களும் தாமரைத் தாள்களும்ஓர்*
*கூர்கொண்ட வேலும் மயிலும்நற் கோழிக் கொடியும் அருள்*
*கார்கொண்ட வண்மைத் தணிகா சலமும்என் கண்ணுற்றதே!"*[5]

இவ்வாறு பாடும் போது, அடிகளாருக்கு வயது ஏறத்தாழ ஒன்பது இருக்கும்!

திருஞானசம்பந்தப் பெருமான் தம் மூன்றாம் வயதில் தேவாரப் பண்பாடியதும்; குமரகுருபர அடிகளார் தம் ஐந்தாம் வயதில் கந்தர்கலிவெண்பாப் பாடியதும் அனைவரும் அறிந்ததே. இராமலிங்க அடிகளாருக்குப் பின்னர்த் தோன்றிய சுப்பிரமணிய பாரதியார், தமது 7-ஆம் வயதிலேயே கவிதை புனைந்தார் என்பது வரலாறு![6]

இத்தகு வியப்புறு செயல் நிகழ்ந்தமை குறித்து அடிகளாரே, வியந்து போற்றுகின்றார்:

*"வெம்மாலைச் சிறுவரொடும் விளையாடித் திரியும்*
*மிகச்சிறிய பருவத்தே வியந்துநினை நமது*
*பெம்மான்என் றடிகுறித்துப் பாடும்வகை புரிந்த*
*பெருமானே! நான்செய்த பெருந்தவமெய்ப் பயனே!"*[7]

என்பது வள்ளற்பிரானார் வாக்கு!

சபாபதிப் பிள்ளை, சிறந்த புராணச் சொற்பொழிவாளர். அவர், சென்னை முத்தியாலுப்பேட்டையில், சோமு செட்டியார் என்பவரது வீட்டில், வாரந்தோறும் புராணச் சொற்பொழிவு நிகழ்த்துவார். ஒரு நாள், நடராசப் பெருமான் விழா ஒன்றை முன்னிட்டுத் 'திருஞான சம்பந்தர் வரலாறு' சொல்ல வேண்டி வந்தது. எதிர்பாராத விதமாக அன்று சபாபதிப் பிள்ளையால் போக முடியவில்லை. எனவே தம் தம்பியை அழைத்து, "நீ சென்று, இரண்டொரு பாடல்களை மட்டும் பாடி, வழிபாடு நிகழ்த்தி- விட்டு வரவும்!" என்றார். அவ்வாறே வள்ளலாரும் ஆங்குச் சென்றார்; இரவு 9 மணிக்குச் சொற்பொழிவு தொடங்கியவர் 12 மணிவரையும் நிகழ்த்தினார். அந்த 3 மணி நேரமும், ஞானசம்பந்தர் புராணத்தில் 1 பாட்டில் 2 அடிகளுக்குமட்டுமே பொருள் சொல்ல முடிந்தது! கேட்டவர்கள், வள்ளலார்பால் தம் உள்ளத்தைப் பறிகொடுத்தனர்! பின்னர்த் தொடர்ந்து வள்ளலாரே, சம்பந்தர் புராணம் முழுவதும் சொல்லி முடித்தார். உண்மை உணர்ந்த சபாபதிப் பிள்ளை, இதுகாறும் தம் தம்பியை மதிக்காதிருந்த தம் செயலுக்கு வருந்தினார்!

வள்ளலார், ஞான வாழ்வைத் தொடங்கிய தம் 12ஆம் வயதிலிருந்து, நாள்தோறும், திருவொற்றியூர் சென்று, அங்கு எழுந்தருளியிருக்கும் தியாகராசப் பெருமானையும், இறைவி வடிவுடை அம்மையையும், ஒற்றி முருகப் பெருமானையும் வழிபட்டு வந்தார். ஒற்றியூர், வள்ளலாருக்குப் பெரிதும் விருப்பமான இடமாக அமைந்திருந்தது. சென்னையில் தாம் வாழ்ந்த காலம் வரை, நாள்தோறும், ஏறத்தாழ 10 கி.மீ. தொலைவிலிருக்கும் இவ்விடத்திற்கு நடந்தே வருவார்;

நிந்தியாசிரமத்தில் தியானம் செய்வார்; திருச்சந்நிதியில் நின்று தேவார, திருவாசகங்களைப் பாடி உருகுவார்; தாமாகவும் பல பாடல்களைப் பாடி நெகிழ்வார்.

ஒரு நாள், அடிகளார், திருவொற்றியூரிலிருந்து சென்னையில் உள்ள தம் தமையனார் இல்லத்திற்குத் திரும்பிவர, நெடுநேரமாகிவிட்டது. இரவில் தூங்கிக் கொண்டிருந்த தம் அண்ணன், அண்ணியாரை எழுப்ப விரும்பாமல், வெளித் திண்ணையிலேயே படுத்து, அயர்ந்து உறங்கி விட்டார்! சிறிது நேரத்தில், எழுப்பப்பட்டதாக உணர்ந்து, எழுந்தார். தம் அண்ணியார், உணவுண்கலத்தைக் கொடுக்க, அதனை வாங்கி, உணவருந்தி, மீண்டும் அவ்விடத்திலேயே கண்ணயர்ந்தார்! சிறிது நேரத்தில், மீண்டும் எழுப்பப் பட்டார்! வந்த அண்ணியார், "வீட்டிற்குள் வந்து உணவருந்தவும்!" என்று அழைத்தார்! ஒன்றும் புரியாமல் தவித்தார்! அடிகளாரை முதலில் எழுப்பியவர் அண்ணியாரில்லை என்பது தெளிவாயிற்று! வடிவுடை அம்மையே, அண்ணியார் உருவில் வந்து, அடிகளாருக்கு உணவு வழங்கிய உண்மை புலப்பட்டது! இது குறித்து அடிகளார் பாடுவது:

*"தெற்றியிலே நான்பசித்துப் படுத்திளைத்த தருணம்*
*திருஅமுதோர் திருக்கரத்தே திகழ்வள்ளத் தெடுத்தே*
*ஒற்றியிற்போய்ப் பசித்தனையோ என்றுஎனை அங்குஎழுப்பி*
*உவந்து கொடுத்து அருளியஎன் உயிர்க்கினிதாந் தாயே"* *

மற்றுமொரு நிகழ்ச்சி! ஒருநாள் இரவில், அடிகளார், திருவொற்றியூர்க் கோயில் மண்டபத்தில், பசியோடு படுத்து உறங்கிவிட, கோயில் அர்ச்சகர், அவரை எழுப்பி, உணவளித்துச் சென்றார்! ஆனால் உண்மையில், கோயில் அர்ச்சகர், இரு நாட்களாகவே ஊரில் இல்லை என்று தெரியவந்தது. ஒற்றியூர் இறைவனே, அர்ச்சகர் வடிவில் வந்து உணவளித்தான்!

வள்ளலார், சித்துக்களும் அற்புதங்களும் நிகழ்த்த வல்லவரே எனினும், அவ்வாறு செய்வது கூடாது என்று எண்ணியவர்!

அவர், ஒற்றியூரில் உள்ள குளக்கரையில் இளைப்பாறிக் கொள்வது வழக்கம். ஒருநாள், திருக்கோயிலில் பணிபுரியும் மூதாட்டியார், அடிகளாரிடம் வந்து வணங்கி, தமக்கு ஓர் அற்புதம் நிகழ்த்தித் தருமாறு வேண்ட, அடிகளாரும், கடற்கரை மணலில் ஒருபிடி அள்ளி எடுத்து, அம்மூதாட்டி கையில் கொடுத்துக் கையை மூடித் திறக்கச் சொன்னார். அம்மையாரும் அவ்வாறே செய்ய, அவருடைய கையில் இருந்த மணற்பொடி அனைத்தும் சிவலிங்கங்களாக மாறியிருந்தன! *

அடிகளார், பிள்ளைப் பருவத்திலேயே முற்றும் துறந்த ஞானி. எனவே, திருமண வாழ்க்கையை வெறுத்து ஒதுக்கியதில் வியப்பேதும் இல்லை! தம்மைத்

தலைவியாகவும், இறைவனைத் தலைவனாகவும் எண்ணிப் பாடிய பாடல்கள் பலவாகும்!

*"கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளும் வகைகிடைத்த*
*குளிர்தருவே! தருநிழலே! நிழல்கனிந்த கனியே!*
*ஓடையிலே ஊறுகின்ற தீஞ்சுவைத் தண்ணீரே! அத்*
*தண்ணீ ரிடைமலர்ந்த சுகந்த மணமலரே!*
*மேடையிலே வீசுகின்ற மெல்லியபூங் காற்றே!*
*மென்காற்றில் விளைசுகமே சுகத்திலுறும் பயனே!*
*ஆடையிலே எனைமணந்த மணவாளா! பொதுவில்*
*ஆடுகின்ற அரசே! என் அலங்கல் அணிந் தருளே!"*[10]

என்பது அடிகளார் பாடிய அருமைத் திருப்பாட்டு! இதில் தில்லைப் பொதுவில் திருநடனம் ஆடும் நடராசப் பெருமானையே தம் தலைவராகக் கருதிப் பாடுவது காணலாம்.

எனினும், இவரது உளக் கருத்தை உணரா முடியாத உறவினர் சிலரும், அண்ணனும் அண்ணியாரும், இவருக்குத் திருமணம் செய்து வைக்கத் துணிந்தனர். அடிகளார் மறுத்துங்கூட, சிவயோகி ஒருவர்மூலம், மனத்தை மாற்ற முயற்சித்தனர்; "அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை"; "பெண்ணின் நல்லாளொடும் பெருந்தகை இருந்ததே!" முதலான திருவாக்குகள் இயம்பப்பட்டன; அடிகளார் எதுவும் கூறாது மௌனமாக இருக்க அதையே சம்மதம் எனக் கருதித் திருமணம் செய்து வைத்தனர்!

அடிகளாரின் தமக்கை உண்ணாமுலை அம்மையாரின் மகள் தனம்மாளுக்கும் அடிகளாருக்கும் 1850–இல், திருமணம் நிகழ்ந்தது.[11] திருமணம் நிகழ்ந்த முதலிரவு அன்று! ஏனையோர் போல இல்லறவாழ்வில் அடிகளார் தம்மைப் பிணித்துக் கொள்ளவில்லை! மாறாகத் தம் கையில் மணிவாசகர் அருளிய திருவாசகத்துடன் சென்றார்; இரவெல்லாம் அதனையே ஓதிக் கொண்டிருந்தார்! பின்னர் வந்த இரவுகளிலும் அவ்வாறே செய்தார்! அடிகளார், தாம் பாடிய 'பிள்ளைப் பெரு விண்ணப்பப்' பகுதியில், இச்செயல் குறித்துப் பாடுவது வருமாறு:

*"முனித்தவெவ் வினையோ? நின்னருட் செயலோ?*
*தெரிந்திலேன்; மோகமே லின்றித்*
*தனித்தனி ஒருசார் மடந்தையர் தமக்குள்*
*ஒருத்தியைக் கைதொடச் சார்ந்தேன்!*
*குனித்தமற் றவரைத் தொட்டனான் அன்றிக்*
*கலப்பிலேன்; மற்றிது குறித்தே*

*பனித்தனன் நினைத்த தோறும்உள் உடைந்தேன்!*
*பகர்வதுஎன்? எந்தைநீ அறிவாய்!"* [12]

அடிகளாரின் இச்செயலால், குடும்பப் பெண்களையே பழிப்பவர் போலும் என்று எண்ணிவிடலாகாது! தம் சீடர்களை இல்வாழ்க்கையில் ஈடுபடுத்தியவர் அடிகளார் என்பது குறிப்பிடத்தக்கது.

இல்லறவாழ்வில் ஈடுபாடுகொள்ளாத அடிகளார், 'பாடும் பணியே பணி' எனக் கொண்டு, திருத்தலங்கள் தோறும் சென்று வழிபடலானார். அவருடன் அடியார் கூட்டம் சூழ்ந்து கொண்டது. சென்னை வாழ்வு, தம் ஞான வாழ்வுக்கு உகந்ததில்லை என்று எண்ணி, மருதூர் நோக்கிப் புறப்பட்டார். அவ்வூரருகே அமைந்திருந்தது 'கருங்குழி' என்னும் ஊர்! அவ்வூரில் வாழ்ந்த மணியக்காரர் வெங்கடரெட்டியார் என்பவரது வீட்டில் தங்கியிருந்தார். ரெட்டியார், தம் வீட்டின் முன்அறையை அடிகளுக்காக அளித்திருந்தார். 1858 முதல் 1867 வரை, பத்தாண்டுகள் இங்கேயே உறைவிடமாகக் கொண்டிருந்தார் அடிகளார். இக்காலத்தில், சிதம்பரத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்டு, ஆயிரக்கணக்கான அருட்பாடல்களைப் பாடியருளினார்.[13] கடலூரிலும் சிலநாட்கள் தங்கி, அரிய சொற்பொழிவுகளும் நிகழ்த்தி வந்தார்!

சமரச சன்மார்க்கக் கொள்கைகள் அடிகளாரிடத்தே தோன்றி உருப்பெறத் தொடங்கிய காலம் இதுவே எனலாம். சன்மார்க்கக் கொள்கைகளைப் பரப்புதற்கென ஒரு சங்கம் தொடங்கியதும் இக்காலத்திலேதான்!

சங்கம் நிறுவப் பெற்றது 1865இல்! அப்போது அடிகளாரின் வயது 42! சங்கம் அமைப்பதில் அடிகளாருக்கு இருந்த வேட்கை மிகப் பெரிது!

*"தங்கமே அனையார் கூடிய ஞான*
*சமரச சுத்த சன்மார்க்கச்*
*சங்கமே கண்டு களிக்கவும் சங்கம்*
*சார் திருக்கோயில் கண்டிடவும்*
*துங்கமே பெறுஞ் சற்சங்கம் நீடூழி*
*துலங்கவும் சங்கத்தில் அடியேன்*
*அங்கமே குளிர நின்றனைப் பாடி*
*ஆடவும் இச்சைகாண் எந்தாய்!"* [14]

என்னும் பாடலால் அடிகளாரின் கருத்தை உணரலாம்.

அடிகளார், தமது தொண்டினைச் செய்வதற்கும்; கொள்கையைப் பரப்புதற்கும் ஏற்றதோர் இடம் ஒன்றைத் தேர்ந்தெடுக்க விழைந்தார். அவற்றிற்கு ஏற்றது ஓர்

சிற்றூராக இருக்க வேண்டும் என்று முடிவு கட்டினார். அடிகளார்பால் பக்தி செலுத்தி வந்த அன்பர் பலரும், தத்தம் ஊருக்கு வந்து தங்குமாறு வேண்டிக் கொண்டனர். ஆழ்ந்த சிந்தனைக்குப் பின், 'வடலூர்' என்னும் சிற்றூரைத் தேர்ந்தெடுத்தார் அடிகளார்! இதற்குப் 'பார்வதிபுரம்' என்ற வேறு பெயரும் உண்டு![15] இவ்வூரிலிருந்து பார்த்தால், தில்லை அம்பலவாணர் கோயிலின் நான்கு கோபுரங்களும் காட்சி நல்கும்! இது குறித்தே இவ்வூரைத் தேர்ந்தெடுத்தார் அடிகளார் எனலாம்!

இராமலிங்க அடிகளார், வடலூர் செல்லுங்கால், அவரின் தோற்றப் பொலிவு குறித்து, அவரின் தலைமாணவராகிய தொழுவூர் வேலாயுத முதலியார் கூறுவது வருமாறு:

*"உருவத்தில் சாதாரண உயரமுள்ளவர்; மெலிந்த சரீரமுடையவர்; எலும்புகள் தெரியும்; ஆயினும் வீரிய பலமுள்ளவர். நிமிர்ந்த தேகம், தெளிந்த மாநிற (சாதாரண சிவப்பு) மேனியர் நீண்ட மெல்லிய நாசியுடையவர்; பரந்த பொறிபறக்குங் கண்களையுடையவர். இவருடைய முகத்தில் சதா சற்று விசனக்குறி காணப்பட்டிருந்தது.*

*"இவர் கடைசிக் காலத்தில் முடியை நீளமாய் வளர விட்டிருந்தார்!*

*"இவர், யோகிகளுக்கு அடுக்காத வழக்கமாகிய பாதரட்சையைத் (ஆற்காட்டுச் சோடு) தரித்திருந்தார்.*

*"இவருடைய உடை, இரண்டு வெள்ளையாடையை விட வேறு இல்லை. (ஒரே ஆடையை உடுத்தியிருந்ததாகவும் கேள்வி!)"[16]*

சிற்சில நேரங்களில், அடிகளாருடைய இளமைப் பருவத்தில், அவருடைய நண்பர்கள், அவருக்குப் பட்டாடை உடுத்தி மகிழ்ந்ததுண்டு. அப்போதெல்லாம் அடிகளார் மனம் பட்டபாடு எத்தகையது என்பதை அவரே வெளிப்படுத்தியுள்ளார்:

*"நயந்தபொற் சரிகைத் துகில் எனக்கு எனது*
*நண்பினர் உடுத்திய போது*
*பயந்தஅப் பயத்தை அறிந்தவர் எல்லாம்*
*பயந்தனர் . . . !"[17]*

அருட்பா' அளித்த அருளாளராம் இராமலிங்க அடிகளார், தம்மை ஓர் எளிய மனிதராகவே கருதினார். பிற மனிதரைவிட—இன்னும் கூறுவதானால், பிற உயிரைவிடத் தாம் உயர்ந்தவர் என்ற எண்ணம் எக்காலத்தும் அவர்பால் இருந்ததில்லை! எவ்வுயிரையும் தம் உயிர்போல் எண்ணி இரங்கும் அருளாளர் அவர்!

அடிகளார் தோற்றுவித்த 'சமரச சுத்த சன்மார்க்கம்', தொடக்கத்தில் அஃதாவது அது தொடங்கிய 1865இல், 'சமரச வேத சன்மார்க்க சங்கம்' என்ற பெயரில் இருந்தது. இது தவிரச், 'சமரச வேத பாடசாலை' என்ற பெயருடன், ஒரு பாடசாலையையும் அடிகளார் வடலூரில் நிறுவினார். ஆனால் அது தொடர்ந்து நிலைபெறவில்லை. *

இச் 'சங்கம்' தவிர வடலூரில், 'சத்திய தருமச் சாலை' ஒன்றையும் நிறுவினார். அதற்காக வடலூர் வாழ்மக்கள், 90 காணி நிலம் அன்பளிப்பாக வழங்கினர். மற்றும் சிலர், கட்டடம் கட்டப் பணமும் பிற பொருளும் கொடுத்து உதவினர். 22–5–1867இல், 'சத்திய தருமச் சாலை' கட்டடத் திறப்பு விழாவும், 'அன்னதானப் பணி'யின் தொடக்கவிழாவும் நடைபெற்றன.*

வடலூர்ப் பெருவெளிக்கு இரண்டுகல் தொலைவில் உள்ளதும், 1870 முதற்கொண்டே தாம் வாழ்ந்து வந்ததுமான 'மேட்டுக் குப்பம்' என்னும் சிற்றூரில், **'சித்திவளாகம்'** என்ற பெயரில் ஓர் ஓலைக் குடிசை ஒன்றமைத்து 1873 முதல், அதனையே தமது நிலைத்த இருப்பிடமாகக் கொண்டு வாழ்ந்து வந்தார் அடிகளார்.

அடிகளார் ஒரு 'சமயப் புரட்சியாளர்'! அவர் விதைத்த அப் புரட்சிக்குத் தலையாய கருவிகளாய் விளங்கிய நிறுவனங்கள் நான்கு. அவை : (1) சமரச சன்மார்க்க சங்கம் ; (2) சத்திய தருமச் சாலை; (3) சத்திய ஞான சபை; (4) சித்தி வளாகம்.

அடிகளார், "மரணமிலாப் பெருவாழ்வில் வாழ்ந்திடலாம்!" என்றும் கூறினார். சாகாத வாழ்வு பெற அவர், மூன்று மாமந்திரங்களைப் போதித்தார். அவை : பசித்திரு; தனித்திரு; விழித்திரு!

அடிகளார், சென்னையில் வாழ்ந்த போது, தவத்திரு. சங்கராசாரிய சுவாமிகளைக் கண்டு அளவளாவினார். அப்போது, "சமஸ்கிருதமே மாத்ருபாஷை (இந்திய மொழிகளுக்கெல்லாம் தாய் மொழி)" என்று சுவாமிகள் கூற, அடிகளார், "ஆயின், தமிழ் பித்ருபாஷை (இந்திய மொழிகளுக்கெல்லாம் தந்தை மொழி)" என்று வலியுறுத்தினார். அந்த உரையாடலின் போது, அடிகளார். 'தமிழ்', என்ற சொல்லுக்கே மிகப் பெரிய அளவில் விளக்கமளித்தார். "தமிழ்ப் பாஷையே அதிக

கலபமாகச் சுத்த சிவானுபூதியைக் கொடுக்கும்" என்பது அடிகளார் அளித்த விளக்கத்தின் சாரம்! பற்றுக்கள் பலவற்றையும் துறந்த ஞானியாகிய அடிகளார், "தமிழைத் துறக்காத துறவி" யாக விளங்கினார்.[20]

அடிகளார் பாடிய 'அருட்பா'வுக்கு மறுப்பு எழுந்தது; அதில் வெற்றிகண்டார் அவர்!

அடிகளார், தாம் மறைவதற்கு மூன்று திங்களுக்கு முன்பிருந்தே தமது உடம்பைப் பக்குவப் படுத்தலானார்!

> *"சிலநாள் ஒரு வேளையும், பின்னர் ஒரு வேளையிலும் நாளுக்கு நாள் முக்கால்–அரை –கால் ஆகவும் ஆகாரம் கொண்டு, அதனையும் நிறுத்தித் தூதுளங் கீரையைத் தின்று, அதனையும் நிறுத்திச் சுத்த ஜலம் அருந்தி, அதனையும் நிறுத்தித், தேன் அருந்தித் தமது சரீரத்தினை வன்மையற்றதாகச் செய்து வைத் திருந்திருந்தார்!"* [21]

என்பது கொண்டு இவ்வுண்மை அறியலாம். தம் சீடர்களின் மனத்தையும் ஒரு வகையாக ஆறுதல்படுத்தி வந்தார். சமாதியில் இருக்கப் போவதாக முன்னமே சொல்லி வைத்தார்.

அடிகளார், ஒருநாள், தம்மைச் சுற்றியுள்ள அடியார்களிடம் பின்வருமாறு உரைத்தார்:

> *"ஆன்மநேய ஒருமைப்பாட்டுரிமைச் சகோதரர்களே!*
>
> *"நாம் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரின் ஆணைப்படி கடையை விரித்தோம்; கொள்வார் இல்லை; கட்டிவிட்டோம்! ஆதலால் இனி இரண்டரைக் கடிகை நேரம், உங்களுடைய ஊனக் கண்களுக்குத் தோன்றமாட்டோம்! நீங்கள் இந்தத் தீபத்தினைக் கடவுள் எனக் கொண்டு ஜீவகாருண்ய நெறியில் வழிபட்டு உய்யுங்கள்! பிறகு அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் வருவார். அப்போது பல அற்புதச் சித்துக்கள் நிகழ்த்துவார்; திருவருட் செங்கோலாட்சி செலுத்துவார். அகவினத்தார்களுக்குச் சாகா வரமும், ஏனையோர்க்குப் பரிபாக நிலையையும் அளிப்பார்!"* [22]

புத்துலகம் காணத் தோன்றிய புனிதர் இராமலிங்க அடிகளார், இவ்வாறு இறுதி உபதேசத்தைக் கூறிய பின்,

> *"நான் உள்ளே பத்துப் பதினைந்து தினம் இருக்கப் போகிறேன்! பார்த்து அவநம்பிக்கை அடையாதீர்கள்! ஒருகால், பார்க்க நேர்ந்து பார்த்தால் யாருக்கும் தோன்றாது! வெறு வீடாகத்தான் இருக்கும்படி ஆண்டவர் செய்விப்பார்! என்னைக் காட்டிக் கொடார்?"*[23]

என்று கூறித் தாம் இருந்த சித்தி வளாகத்தில் உள்ள ஓர் அறையில் நுழைந்தார்; அறைக் கதவைத் தாழிட்டுக் கொண்டார். அடிகளார், ஆவியோடியைந்த யாக்கையுடன் மறைந்த அப் புனித நாள் : 30–1–1874, வெள்ளிக்கிழமை, தைப்பூசம், நள்ளிரவு 12 மணி! அவர், சோதியில் கலந்துவிட்டதாகவும், இறைவன் திருவடியில் இரண்டறக் கலந்து விட்டதாகவும் உலகோர் கருதினர்!

ஆம்! தமிழினம் முன்னர்ச் செய்த நல்வினைப் பயனாய்த் தோன்றிய அருட்பிரகாச வள்ளலாம் இராமலிங்க அடிகளார், தமிழர்களின் ஆதரவு இன்மையால், "கடை விரித்தேன், கொள்வாரிலை!" என வருந்தி உரைத்துத் தமது ஆன்ம நேய ஒருமைப்பாடு காணும் புனிதப் பணி நிறைவேறுதற்கு முன்பே, மறைந்து விட்டார்!

அடிகளார், கடைசியாகப் பாடியதாகக் கூறப்படும் பாடல் ஒன்று :

> *"பிச்சுலகர் மெச்சப் பிதற்றி நின்ற பேதையனேன்*
> *இச்சையெலாம் எய்த இசைந்தருளிச் செய்தனையே!*
> *அச்சமெலாம் தீர்ந்தேன் அருளமுதம் உண்கின்றேன்!*
> *நிச்சலும்பேர் ஆனந்த நித்திரைசெய் கின்றேனே!"*[24]

உண்மை இவ்வாறிருக்க, "அடிகளார், உடலோடுகூடி மறைந்து விட்டார்! என்பது உண்மையாக இருக்க முடியுமா?" என்று ஐயுற்றோரும் உண்டு! எனவே, தென்னார்க்காடு மாவட்ட ஆட்சியராக இருந்த ஜே. எச். கார்டின்ஸ் என்பவர், மேட்டுக் குப்பம் சென்று விசாரணை நடத்தினார். அவருடன் மருத்துவர், வட்டாட்சியர் (தாசில்தார்) முதலியோர் வந்தனர். வந்தவர்களுள், வட்டாட்சியராக இருந்த வேங்கடராமன் என்பவர்; தம் அதிகார மமதையில், ஆங்கிருந்த அன்பர்களை இழி சொற்களால் கூறிக், "கதவை திறக்க வேண்டும்; இல்லையேல் உங்களுக்கு அபராதம் நேரிடும்!" என்று அதட்டினார். ஆனால் மாவட்ட ஆட்சியரும் மற்றொருவரும், சித்திவளாகத்தைப் பலமுறை சுற்றிப் பார்த்து விட்டுப்,

"பெரியோர்களைப் பற்றி நாம் ஒன்றும் குறைகூறலாகாது!" என்ற எண்ணத்துடன், ஆங்கிருந்த அன்பர்களிடம், "நீங்கள் இங்கே என்ன செய்கிறீர்கள்?" என்றனர். அதற்கு அவர்கள், "ஐயா (அடிகளார்) அவர்கள் ஆணைக்கிணங்க, அன்னதானம் செய்கின்றோம்; ஆண்டவனை வணங்குகின்றோம்!" என்று விடையிறுத்தனர். அதனைக் கேட்டு அவ்வலுவலர்கள் அன்னதானச் செலவுக்காக இருபது ரூபாய் கொடுத்துவிட்டுத் திரும்பினர்.[25]

இதே நிகழ்ச்சி குறித்துப் புரசு. பாலகிருஷ்ணன் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்:

> *"அடிகள் தாம் அறைக்குள் சென்று தாழிட்டுக் கொண்டு, பிறகு வெளியே வராமலே இருந்த செய்தி பரவி மக்களிடையே ஒரு பரபரப்பை உண்டாக்கியது. பல வதந்திகள் எழுந்தன. கடைசியில் போலீஸ் விசாரணை நடந்தது. அடிகள் மறைந்த மூன்று மாதங்களுக்கு பிறகு, தென்னார்க்காடு ஜில்லா கலெக்டராயிருந்த ஜெ.எச். கார்ஸ்டன், ஐ.சி.எஸ்., அவர்களும், ரெவின்யூ போர்டு உறுப்பினர் ஜார்ஜ் பான்பரி, ஐ.சி.எஸ்., அவர்களும் சித்தி வளாகத்திற்கு வந்து, அதைப் பார்வையிட்டனர். அவர்களின் முன்னிலையில் கதவு திறக்கப்பட்டது. வெற்றறையைத்தான் கண்டனர். சந்தேகத்துக்கு இடம் கொடுக்கும் வகையில் ஒன்றுமில்லை! வெளியே ஏழைகளுக்கு அன்னதானம் நடப்பதைத்தான் கண்டனர். இந்தத் தர்மத்திற்கு இருபதுரூபாய் நன்கொடை அளித்துச் சென்றனர்!"*[26]

1906ஆம் ஆண்டில், தென்னார்க்காடு மாவட்டக் கெஸட்டில், அடிகளாரைப் பற்றிய குறிப்பு ஒன்று வெளிவந்துள்ளது. அதன் தமிழ்மொழிபெயர்ப்பை ஊரன் அடிகள் வெளியிட்டுள்ளார். அதில் வரும் ஒரு செய்தி:

> *"1874-இல், கருங்குழியை அடுத்த மேட்டுக் குப்பத்தில், தாம் எப்போதும் சமாதி (தியானம்) கூடும் அறைக்குள் புகுந்து, சில காலம் திறந்து பார்க்க வேண்டாம் எனச் சீடர்களுக்குக் கூறித் தாழிட்டுக் கொண்டார். அதன்பின் அவர் காணப்படவில்லை! அவ்வறை இன்னும் பூட்டப்பட்டே உள்ளது. அவர் கடவுளோடு ஐக்கியமாகி விட்டார் என்று அவர்மீது நம்பிக்கையுடையோர்*

*கருதுகின்றனர். காலம் வரும்போது நம்பிக்கையுள்ளவர்களுக்குத் திரும்பவும் தோற்றமளிப்பார் என்றும் நம்புகின்றனர்!"*[27]

அடிகளார், இரண்டரை நாழிகையில் 'சித்தி' பெற்றிருப்பார் என்பதற்கு அவர் அருளிய பின்வரும் பாடல் சான்று பகர்கின்றது:

*"என்சாமி எனதுரை என்உயிர்நா யகனார்*
*இன்றுவந்து நான்இருக்கும் இடத்தில்அமர் கின்றார்!*
*பின்சாரும் இரண்டரைநாழிகைக்குள்ளே எனது*
*பேர்உடம்பில் கலந்துள்ளே பிரியாமல் இருப்பார்!*
*தன்சாதி உடையபெருந் தவத்தாலே நான்தான்*
*சாற்றுகின்றேன் அறிந்திதுதான் சத்தியஞ்சத் தியமே!*
*மின்சாரும் இடையடவாய் என்மொழிநின் தனக்கே*
*வெளியாகும் இரண்டரைநா ழிகைகடந்த போதே!"*[28]

அடிகளாரின் சீடர்களில் ஒருவரான தண்டபாணி சுவாமிகள், அடிகள்தான் மீண்டும் வரப்போவதாகத் தம்மிடம் உரைத்ததாகக் கூறியுள்ளார்!

"அடிகளார் திரும்பி வருவார்" என்றே சீடர்கள் பலரும் நம்பிக் கொண்டுள்ளனர். ஆனால், "அடிகளார் முத்தி சித்தி பெற்ற சுத்த சன்மார்க்கி; ஆதலின் திரும்பி வாரார்!" என்றும் சிலர் கருதுகின்றனர்!

உண்மை எதுவாயினும், அருட்பிரகாச வள்ளலார் ஏற்றிவைத்த திருவிளக்கு, அணையாச்சுடராய் இன்றும் ஒளிவிட்டுத் திகழ்கின்றது! அவரால் உருவாக்கப்பட்ட 'சத்திய தருமச் சாலை'யில், சாதிவேறுபாடு கருதாமல், பசித்தோர்க்கு உணவு வழங்கப்பட்டு வருகின்றது! அவர் அருளிய 'அருட்பா' முழக்கம் எங்கும் ஒலிக்கின்றது! அவர் உபதேசித்த 'சமய நல்லிணக்கச் சிந்தனைகள்' உலகம் உய்ய வழிகாட்டுகின்றன!

## *முடிவுகள்*

இவ் இயல் வாயிலாக அறியத் தகுவன:

1. இராமலிங்க அடிகளார், மருதூரில், இராமையாபிள்ளை – சின்னம்மையார் செய்தவப் பயனாய், 5–10–1823இல், தோன்றினார்;

2. அடிகளார், இளமையிலேயே தந்தையை இழந்தார்; தமையனார் சபாபதிப் பிள்ளையுடன் சென்னைக்கு வந்தார் அடிகளார்.

3. பள்ளிப்படிப்பில் நாட்டம் இல்லாமையால், தமையனார் சபாபதிப்

பிள்ளையால் வெறுத்து ஒதுக்கப்பட்டாலும், அண்ணியார் பாப்பாத்தியம்மாளின் அன்பும் பரிவும் அடிகளாருக்கு இருந்தன;

4. அடிகளாருக்கு இளமையிலேயே கண்ணாடியில் முருகப் பெருமானின் காட்சி கிடைத்தது;

5. அடிகளார், தமது ஒன்பதாம் வயதிலேயே பாடத் தொடங்கியவர்;

6. தம் தம்பியாம் அடிகளாரின் பெரிய புராண விரிவுரை கேட்டதன்பின், அவர்மீது அன்பு பாராட்டி வந்தார் அண்ணன் சபாபதிப் பிள்ளை;

7. அடிகளார், தமது 12ஆம் வயதிலிருந்து, திருவொற்றியூர் சென்று, தியாகேசரை வணங்கி வந்தார்;

8. திருவொற்றியூரில் எழுந்தருளியிருக்கும் வடிவுடை அம்மையே, அடிகளாருக்கு உணவளித்த அற்புதச் செயல் நிகழ்ந்தது;

9. அடிகளார் 'சித்து விளையாடலு'ம் நிகழ்த்தியதுண்டு!

10. 'திருமணமே வேண்டாம்' என்றிருந்த அடிகளாருக்கு 1850இல், வற்புறுத்தித் திருமணம் செய்வித்தனர்; எனினும் அடிகளார் இறுதிவரை இல்லற இன்பத்தை நாடவில்லை!

11. சென்னை வாழ்வு ஏற்றதில்லை என்றுணர்ந்த அடிகளார், 'கருங்குழி' என்ற ஊரை 1858 முதல் 1867 வரை வாழ்விடமாகக் கொண்டிருந்தார்;

12. இக்காலத்தில் சிதம்பரம் நடராசப் பெருமான் மீது அளவற்ற பக்தி கொண்டு, அருட்பாடல்கள் பாடலாயினார்! 'சன்மார்க்கம்' தழைப்பதற்கென 1865இல், சங்கமும் கண்டார் அடிகளார்;

13. சன்மார்க்கப் பணிகளைத் திறம்படச் செய்தற்கு ஏற்ற இடமாக 'வடலூரை'த் தேர்ந்தெடுத்தார்;

14. வடலூரில், 'சமரச சுத்த சன்மார்க்க சங்கம்' தவிரச் 'சமரச வேதபாடசாலை'; 'சத்திய தருமச்சாலை' முதலானவற்றையும் உருவாக்கினார்;

15. கி. பி. 1873 முதல், 'மேட்டுக்குப்பம்' என்ற ஊரில் 'சித்தி வளாகத் திருமாளிகை' ஒன்றை அமைத்து, அங்கிருந்தே தொண்டாற்றி வந்தார்;

16. அடிகளார், சென்னையிலிருந்த போது சங்கராச்சாரிய சுவாமிகளுடன் உரையாடித் 'தமிழின் பெருமையை எடுத்துரைத்தார்;

17. 'அருட்பா'வுக்கு எதிரான 'மருட்பா'ப் போரில் வெற்றி பெற்றார்;

18. 'மரணமிலாப் பெருவாழ்வு வாழ்ந்திடலாம் கண்டீர்!' என்று கூறிய அடிகளார், அவ்வாறே, தம் அடியார்கட்கு அருளுரை கூறிச் சித்திவளாக அறையில், உள்ளே நுழைந்து, கதவைத் தாழிட்டுக் கொண்டார்; இறைவனுடன் ஐக்கியமானார்; அந்த நாள் 30–1–1874 தைப்பூசம் நள்ளிரவு 12 மணி!

19. அதன்பின், 3 திங்கள் கழித்து, மாவட்ட ஆட்சியாளர் முதலானோர் வந்து பார்த்து, உண்மையறிந்து திரும்பினர்.

20. காலம் வரும் போது, நம்பிக்கை உள்ளவர்களுக்குத் திரும்பவும் அடிகளார் தோற்றமளிப்பார் என்று கருதப்படுகின்றது!

21. அடிகளார் ஏற்றி வைத்த சுடர், இன்றும் ஒளிவிட்டுத் திகழ்கின்றது!

## *சான்றெண் விளக்கம்*

1. மு. வரதராசனார், 'வள்ளலார் திருவுள்ளம்', *சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்க நூற்றாண்டு விழாச் சிறப்பு மலர்*, ப. 19

2. திருநாவுக்கரசர் தேவாரம், 4941.

3. ம. பொ. சி., வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு, ப. 47.

4. திருவருட்பா, அருட் பெருஞ் சோதி அகவல், 12.

5. மேலது, திருத்தணிகைப் பதிகம், பிரார்த்தனை மாலை : 1 (ப. 42).

6. ச. சாம்பசிவனார், நாவலர் சோமசுந்தரபாரதியார், ப. 51.

7. திருவருட்பா, அருள் விளக்கமாலை, 76 (ப. 166).

8. மேலது, 43 (ப. 160).

9. புரசு. பாலகிருஷ்ணன், ஞானக்கவி ராமலிங்கர். பக். 19–21.

10. திருவருட்பா, அருள்விளக்கமாலை, 2 (ப. 151).

11. புரசு. பாலகிருஷ்ணன், மு. கா. நூ., ப. 23 (ம. பொ. சி., தமது நூலில், அடிகளாரின் மனைவி பெயர், 'தனக்கோட்டி' என்பர். மு. கா. நூல், ப. 73; சென்னை அருட்பெருஞ்சோதி அச்சகம் வெளியிட்ட 6ஆவது திருமுறைநூலில் 'தனக்கோடி அம்மையார்' என்றுள்ளது).

12. திருவருட்பா, பிள்ளைப் பெருவிண்ணப்பம், 39 (ப. 99).

13. ந. ரா. ஊரன், *'சன்மார்க்க சங்க வரலாறு', சன்மார்க்க சங்க நூற்றாண்டு விழாமலர்* (1965), ப.4.

14. திருவருட்பா, பிள்ளைச் சிறு விண்ணப்பம், 21 (ப. 90).

15. ம. பொ. சி., மு. கா. நூ. ப. 87.

16. மேலது, ப. 100.

17. திருவருட்பா, பிள்ளைப் பெரு விண்ணப்பம், 47 : 1–2 (ப. 100).

18. ந.ரா. ஊரன், மு. கா. நூ. ப. 7.

19. ம. பொ. சி., மு. கா. நூ. பக். 110–111.

20. மேலது, பக். 280, 295.

21. மேலது, பக். 343 – 344.

22. மேலது, பக். 346–347.

23. புரசு. பாலகிருஷ்ணன், மு. கா. நூ. ப. 107.

24. திருவருட்பா, தனித்திரு அலங்கல், 11.

25. ம. பொ. சி., மு. கா. நூ. பக். 350–351.

26. புரசு. பாலகிருஷ்ணன், மு. கா. நூ. ப. 108.

27. மேலது, ப. 109.

28. திருவருட்பா, வரு தருணப் பாடல், 4 (ப. 380).

3

# திருவருட்பா - ஒரு பார்வை

## முன்னுரை

> *"தமிழ் வழங்கும் நிலம் அருளியலின் பண்ணை; கடவுள் வரலாறுகள் - தத்துவங்கள் தோன்றி வளர்ந்த புகழ்மிக்க நிலம். இயல்பிலேயே வையத்துள் வாழ்வார்க்கு வாழ வேண்டும் என்ற ஆர்வம் மிகுந்த மக்கள் வாழ்ந்த நிலம், வாழ்ந்து கொண்டிருக்கிற நிலம்! இந்த ஆர்வத்தின் எதிரொலியாகத் தமிழகத்தில் நிறையச் சான்றோர்கள் காலத்திற்குக் காலம் தோன்றியிருக்கின்றனர்! . . . 18ஆம் நூற்றாண்டில் தமிழக சமய வாழ்க்கையில் வறட்சித் தன்மையுடைய வைதீகத் தன்மை மேலோங்கிற்று. வேண்டத்தகாத சாதி வேற்றுமைகளும், சழக்குகளும் தழைத்தன. மத வாழ்க்கைக்குப் பதிலாக மதவெறி தோன்றிக் கலகங்கள் வளர்ந்தன. எங்கும் சாரமற்ற வாழ்க்கை. ஆனாலும், சமயத்தின் பேரால் ஆரவாரங்கள் மலிந்தன. இந்தத் தருணத்தில், வாழையடி வாழையென வளர்ந்து வந்த சமயச் சான்றோர் மரபிலே வள்ளல் பெருமான் அவதரித்தார். இருண்ட தமிழகத்தில் ஒளிவிளக்கெனத் தோன்றியருளினார்!"* [1]

என்பது தவத்திரு. குன்றக்குடி அடிகளார் வாக்கு. இத்தகு வள்ளல் இராமலிங்க அடிகளார், மன்பதை உய்யும் பொருட்டு அருளியது 'திருவருட்பா' எனும் தெள்ளமுது! அது குறித்து மேலோட்டமாகப் பார்வையைச் செலுத்துவதே இவ் இயலின் நோக்கம்.

## திருவருட்பா

திரு + அருள் + பா = திருவருட்பா. 'திரு' என்பதற்குக் 'கண்டாரால் விரும்பப்படும் தன்மை' என்று பொருள். அஃது, ஈண்டு, 'அருட்பா'வுக்கு அடைமொழியாக வந்துள்ளது.

"திரு அருளால் பாடிய பாட்டு" என்றும்; "திரு அருளைப் பெறப் பாடிய பாட்டு" என்றும் பொருள் கொள்ளலாம்.

வள்ளலார், இறைவனது அருளைப் பெறுதற்காகப் பாடினாரா? அன்றி, அவனது அருளால் பாடினாரா? என்னும் வினா எழுப்பினால், 'இரண்டுமே சரி' என்னும் விடை கிடைக்கும். இவ்விரண்டும் ஒன்றற்கொன்று தொடர்புடையது. எனவே இருவகையிலும் பொருள்கொள அமைந்ததே 'திருவருட்பா' எனும் சொல்!

தமது 3ஆம் வயதில்,ஞானப்பால் அருந்தி, இறையருள் பெற்றுத் 'தேவாரம்' பாடினார் ஞானசம்பந்தர். வள்ளல் இராமலிங்க அடிகளார், தமது 9 ஆம் வயதில் (கி.பி. 1832), கண்ணாடியில் தணிகை முருகனின் திருக்காட்சி கண்டு, அன்றுமுதல் பாடத் தொடங்கினார் என்பது முன்னரும் சுட்டப்பட்டது.

> *"இராமலிங்க வள்ளலார், ஓர் அருட்கவிக்குரிய தகுதிகளனைத்தையும் குறைவறப் பெற்றிருந்தார். எவ்வளவுக்கெவ்வளவு அவர், இறையருளை அனுபவித்துக் கொண்டிருந்தாரோ, அவ்வளவுக்கவ்வளவு பக்திப் பாடல்களை எழுதி எழுதிக் குவித்துக் கொண்டிருந்தார். அவர் எழுதிய பாடல்கள் பதினாயிரத்துக்கும் மேற்பட்டவையாக இருக்கலாம். மகாகவி கம்பர் பன்னீராயிரம் பாக்களால் 'இராமகாதை' இயற்றினார். அவருக்குப் பிறகு கவிதை மழை பொழிந்தபெருமை நமது இராமலிங்க அடிகளாருக்கே உரியது!"* [2]

எனப் பெருமையாகக் கூறுவர் ம.பொ. சி.

## *முதல்நூல்*

அடிகளார், தமது பிள்ளைப் பருவத்தில், சென்னை நகரில் 'ஏழுகிணறு' என்னும் பெயர் கொண்ட பேட்டையில் வாழ்ந்தபோது நாள்தோறும் கந்தகோட்டத்திற்கு நடந்தே செல்வார்; கந்தப்பெருமானுக்குப் பாமாலை சூட்டி மகிழ்வார். அவ்வாறு அடிகளார் புனைந்த பாக்களை அக்கோயிலில் உள்ள ஒருவர், குறித்துவைத்திருந்து, பின்பு நூலாக வெளியிட்டார். அதுவே அடிகளாரின் பாடல்கள் கொண்ட 'முதல் நூல்'! "சென்னைக் கந்தர் தெய்வமணிமாலை—சரணப் பத்து"என்பது அந்நூலின் பெயர். அது, வெளியானது 1851ஆம் ஆண்டு என யூகிக்கப்படுகின்றது. [3]

> *"அவருடைய (அடிகளாருடைய) முதற்பாடல், சென்னை கந்த கோட்டத்தைப் பற்றிய தெய்வமணிமாலை"*

என்கின்றார், புரக. பாலகிருஷ்ணன்.[4]

அடிகளார் திருவாய் மலர்ந்து அருளிய பாடல் எண்ணிக்கை : 5818 என்கின்றார், குங்குலியம் பழ. சண்முகனார்.

இவையன்றி அடிகளார் அவ்வப் பொழுது தம் நண்பர்களுக்குக் கடிதமாகவும், சிறப்புப் பாயிரமாகவும் எழுதிய தனிப்பாடல்களும் பலவுள. இது குறித்துக் க. வெள்ளை வாரணார் கூறும் கருத்து இவண் குறிக்கத்தகும்:

> *" எல்லாம் வல்ல அருட்பெருஞ்சோதி ஆண்டவனை நோக்கி, உலகமக்கள் அனைவரும் நாள்தோறும் வேண்டிப்போற்றும் நிலையில், உரைநடை வேண்டுகோளாக அமைந்தவை: (1) சுத்த சன்மார்க்க சத்தியச் சிறு விண்ணப்பம்; (2) சுத்த சன்மார்க்கச் சத்தியப் பெரு விண்ணப்பம்; (3) சமரச சுத்த சன்மார்க்கச் சத்திய ஞான விண்ணப்பம்; (4) சமரச சுத்த சன்மார்க்க சங்க சத்திய ஞான விண்ணப்பம் என்பனவாகும். (1) மனுமுறை கண்ட வாசகம்; (2) சீவகாருணிய ஒழுக்கம் என்பன அடிகளார் இயற்றிய உரைநடை நூல்கள். 'தமிழ்' என்ற சொல்லுக்கு வரைந்த உரையும்; சேக்கிழார் அருளிய திருத்தொண்டர் புராணத்தின் முதலாம் திருப்பாடலில் அமைந்த 'உலகெலாம்' என்ற தொடர்க்கு வரைந்த விளக்கவுரையும்; தொண்ட மண்டல சதகத்தின் நூற்பெயரிலக்கணமும்; கடவுள் வாழ்த்துப் பாடலுக்கு எழுதிய விளக்கவுரையும்; பொன்வண்ணத் தந்தாதியின் இருபத்திரண்டாம் பாடலுக்கு வரைந்த விளக்கவுரையும்; வேதாந்த தேசிகரின் குறட்பாவொன்றினுக்கு வரைந்தவுரையும்; அடிகளாரது விரிவுரைத் திறத்திற்கு இலக்கியமாக அமைந்துள்ளன. 'ஒழிவிலொடுக்கம், தொண்ட மண்டல சதகம், சின்மய தீபிகை' என்பன, அடிகளாரால் பதிப்பிக்கப் பெற்ற நூல்களாகும். இவ்வாறு இராமலிங்க அடிகளார், தம் உரைத்திறத்தாலும், பாட்டின் திறத்தாலும், தமிழுக்குச் செய்த அரும்பணிகள், தமிழ்மொழி பல்லாயிரம் ஆண்டுகளாய்ப் பெற்றுள்ள, சென்ற காலத்தின் பழுதிலாத் திறத்தினையும், இனி எதிர்காலத்திற்*

*பெறவிருக்கும் சிறப்புக்களையும் புலப்படுத்தும் முறையில் அமைந்துள்ளமை காணலாம்!"*[5]

– இதனால், இராமலிங்க அடிகளார், பாவன்மையோடு, தமிழ் இலக்கண இலக்கியங்களில் பெரும்புலமையும் உரைநடைத் திறனும் ஒருங்கே பெற்றிருந்தார் என்பது புலனாகும்.

அடிகளார், மறந்துங்கூட மனிதரைப் பாடவில்லை. அவர் தொடங்கிய சத்திய ஞானசபை, சத்திய தருமச்சாலை முதலானவற்றிற்கு நிலமும், பணமும் கொடுத்தவர்கள் உண்டு; அவருக்கு உதவி செய்தவர்களும் உண்டு. ஆனால், அவர்களைக் கூடப் புனைந்து பாடாத மாண்பினர்! அடிகளார், மனிதர்களைப் புகழ்ந்து பாடவில்லையென்றால், மக்களை அறவே மறந்து மகாதேவனிடம் சரண்புகுந்தார் என்று எண்ணிவிடலாகாது! வறுமையாலும், பிணியாலும், அறியாமையாலும் அல்லலுற்ற மக்களை, நினைந்து நினைந்து, அவர்களின் அல்லல் தீர, ஆண்டவனிடம் அழுதழுது முறையிட்டவர் அடிகளார்! அவ்வகையில் அவர் பாடிய பாடல்கள் ஏராளமாகும்.

> *"நாற்பதாண்டுக் காலம் பரமனைப் பாடுவதையே பணியாகக் கொண்டிருந்த பெருமான், எத்துணை ஆயிரம் பாடல்களைப் பாடினாரோ, யாரறிவார்? அவற்றுள் காற்றொடு கலந்தவை போக, ஏட்டில் ஏறியவை எத்துணை ஆயிரமோ? அவற்றுள்ளும் இங்குமங்குமாகச் சிதறிச் சிதறி அழிந்தவை போக அச்சுவாகனமேறி நம் கைக்குக் கிடைத்துள்ள பாடல்கள் சுமார் ஆறாயிரமாகும்!"*[6]

என மா. பொ. சி. கூறுவது கொண்டு, அடிகளார் பாடியவற்றுள் காற்றோடு காற்றாய்க் கலந்து போனவை பலவாக இருக்கலாம் என்ற முடிபுக்கு வரமுடிகின்றது!

வள்ளலார் பாடிய பாடல்கள் அனைத்தையும் தொகுத்து நூல்களாக வெளியிட்டவர்களுள், அடிகளாரின் தலைமை மாணவரான தொழுவூர் வேலாயுத முதலியார், மற்றும் 'இறுக்கம்' இரத்தின முதலியார் ஆகிய இருவரும் குறிப்பிடத்தக்கவர்கள். முதல் 4 திருமுறைகள் 1867ஆம் ஆண்டிலும்; 5ஆம் திருமுறை 1880ஆம் ஆண்டிலும்; 6ஆம் திருமுறை 1885ஆம் ஆண்டிலும் வெளியிடப்பட்டன. இவற்றுள் முதல் 5 ஒரு பிரிவாகவும்; ஆறாவதை வேறொரு பிரிவாகவும் வெளியிட நேர்ந்தமைக்கான காரணம்: 6வது திருமுறை, சமரச சுத்த சன்மார்க்கத்தைப் பெறவேண்டிய சாதகர்கட்கே உரித்தானது; இந்த 6ஆவது

திருமுறையைக் கையாளுபவர்கள், அடிகளார் காட்டியபடி புனிதமுறு சுத்த சன்மார்க்கத்தின் முக்கிய இலட்சியமாகிய, ஆன்ம நேய ஒருமைப் பாட்டுரிமையைப் பெற்றுச் சீவகாருணியத்தையே தெய்வ வழிபாடாகக் கொண்ட சமரசநிலை அமைந்த பக்குவநிலையுடையவர்களே ஆவார்கள் என்பது அடிகளார் நோக்கம். எனவே தான் 6ஆவது திருமுறை, தனி நூலாக வெளியிடப்பட்டது!

## *அருட்பா அமுதம்*

'அருட்பா' எனும் ஆழமான தெய்வக் கடலில் மூழ்கினால், 'பக்தி' எனும் நன்முத்துக்களன்றிச் 'சமரசம்', 'ஆன்மநேய ஒருமைப்பாடு' , 'சீவகாருணிய ஒழுக்கம்', 'எவ்வுயிர்க்கும் இரங்கும் கருணை', 'சமய நல்லிணக்கம்' முதலான அரிய முத்துக்களை எடுத்து, மகிழலாம்! இங்கே ஒரு சில கட்டப்படுகின்றன.

தெய்வமணம் கமழும் அருட்பாவில், தொட்டதொட்ட இடமெல்லாம் இறைவனைப்பற்றிய உணர்வே மேலோங்கி நிற்கக் காணலாம். அன்றியும் இலக்கியச் சுவைபடப் பாடுவதில் வல்லவர் வள்ளலார் என்பதையும் அறிய முடிகின்றது. இவண் சில சான்றுகள் தரப்படுகின்றன.

### *உவமையணி*

போத நிலையில் பொலிவுறும் அருட்சோதியைப் பற்றியும் அதனால் உண்டாகும் இன்பத்தைப் பற்றியும் அடிகளார் அருளிய பாக்கள் பலப்பல. அவற்றுள் ஒன்று:

*"கொழுந்தேனும் செழும்பாகும்*
*குலவுபசும் பாலும்*
*கூட்டி உண்டாற் போல் இனிக்கும்*
*குணங்கொள் முடிக் கனியே!"*

ஆன்மாவாகிய தலைவி, அருட்பெருஞ்சோதி ஆண்டவனாகிய தலைவனை அடைய எண்ணுகிறபோது, துடிக்கின்ற துடிப்பு, தலைவியின் இரங்கல் மாலையாகவே சூழ்ந்து கிடக்கிறது. தலைவி, தன் தோழியிடம் கூறுவதாக வள்ளலார் பாடும் பாடல் ஒன்றில், அரியதோர் உவமை மிளிர்கின்றது.

*"காலை மலர்ந்த கமலம்போல் கவின்செய் முகத்தார் கண்ணுதலார்*
*சோலை மலர்ந்த வொற்றியினார் சோரம் தீர்க்க வந்திலரே!*
*மாலை மலர்ந்த மையல்நோய் வசந்தமதனால் வளர்ந்தது ஐயோ!*
*சேலை விழியாய்! என்னடி நான். செய்வது ஒன்றும் தெரிந்திலனே!*

"சேல் போன்ற விழிகளையுடைய என் தோழியே! என் தலைவர், சோலை மலர்ந்த திருஒற்றியூரைச் சேர்ந்தவர்; நெற்றிக் கண்ணுடையவர்; காலையில்

மலர்ந்த தாமரை போல், கண்கொள்ளா அழகிய முகத்தையுடையவர்; மாலைப் பொழுது வந்தது; மையல் தந்தார்; அந்நோய் வளர்ந்து வளர்ந்து என்னை வருத்துகின்றது! என்னடி நான் செய்வேன்! செய்வது இன்னதென்று அறியாது திகைக்கின்றேன்!" என்று பொருள்படும் இத் திருப்பாட்டில், இரு உவமைகள் வந்துள்ளமை அறியலாம்.

## *உருவக அணி*

அடிகளார் பாடல்களில் பெரும்பாலும் அமைந்திருப்பது 'உருவக அணி' எனலாம். இங்கே *சில* சான்றுகள் :

பின்வரும் 'அருட் பெருஞ் சோதி அகவல்' பாட்டில் அனைத்துமே உருவகங்கள்!

*"தெள்ளைவாய்க் கிடைத்த செவ்இளநீரே!*
*தெள்ளைவான் பலத்தில் திருகுதீம் பாலே!*
*நீர்நசை தவிர்க்கும் நெல்லியங் கனியே!*
*வேர்விளை பலவின், மென்சுவைச் சுளையே!*
*கட்டுமாம் பழமே? கதலிவாள் பழமே!*
*இட்டநற் சுவைசெய் இலந்தைஅம் கனியே!*
*புனிதவான் தருவில் புதுமையாம் பலமே!*
*கனியெலாம் கூட்டிக் கலந்ததீஞ் சுவையே!*
*இதந்தரு கரும்பில் எடுத்த தீஞ் சாறே!*
*பதந்தரு வெல்லப் பாகினின் சுவையே . . . !* [9]

தில்லை நடராசப் பெருமான் திருநடனத்தைக் கண்டபோது, அடிகளார், தமக்கு நேர்ந்த நிகழ்ச்சி குறித்துச்,

*"சித்தி எனும் பெண்ணரசி எத்தி என்கைப் பிடித்தாள்!"* [10]

என்னும் போது, 'திருவருளை'ப் பெண்ணரசியாக உருவகித்துள்ளமை அறியலாம்.

எல்லாம் வல்ல இறைவனை அடிகளார் துதிக்கும் பாடல் ஒன்று:

*"அழகனே! ஞான அமுதே! என்றன்*
*அப்பனே! அம்பலத் தரசே!*
*குழகனே! இன்பக் கொடிஉளம் களிக்கும்*
*கொழுநனே! சுத்தசன் மார்க்கக்*
*கழகநேர் நின்ற கருணைமா நிதியே!*
*கடவுளே! கடவுளே! எனநான்*

*பழகநேர்ந் திட்டேன்! இன்னும் இவ்வுலகில்*
*பழங்கணா வழங்குதல் அழகோ?”*[8]

– இப்பாடலிலும் உருவக அணி அமைந்துள்ளமை காணலாம்.

### *சிலேடையணி*

ஒரு சொல்லுக்கு இரண்டு பொருள் கொள்ளும்படிப் பாடுவது 'சிலேடை' யாகும். அடிகளார், 'சிலேடை' பாடுவதிலும் வல்லவர் என்பதற்கு ஒரு சான்று:

*“சேடார் வளஞ்சூழ் ஒற்றி நகர்ச்*
*செல்வப் பெருமான் இவர்தமை நான்*
*ஓடார் கரத்தீர்! என்தோள்கள்*
*உடையீர்! இஃதேன்? என்றுரைத்தேன்!*
*கோடா கோடி முகம்நாறு*
*கோடா கோடிக்களம் என்னே!*
*ஈடாய் உடையாய்! என்கின்றார்*
*இதுதான் சேடி என்னேடி?”*[9]

திருவொற்றியூர்த் தியாகப் பெருமான், பிச்சாடணத் திருவுருவம் தாங்கி வீதிகளில் உலா வருகின்றார். அப்போது, தலைவி ஒருத்தி, அவருக்குப் பிச்சையிடச் செல்கின்றாள். அவள், பெருமானைக் கண்டு, “என் தோள்களை உடையீர்!” என்று விளிக்கின்றாள். அதற்குத் தியாகேசர், “நீயும் தான், கோடாகோடி முகமும், நூறு கோடா கோடி களமும் பெற்றிருக்கின்றாய்!” என்கின்றார். அவர் கூறியதன் பொருள் யாதெனத் தெரியாத தலைவி, தன் தோழியிடம் வந்து தியாகேசர் கூறியதன் உட்பொருள் யாதாக இருக்கலாம் என்று கேட்கின்றாள்.

இத்திருப்பாட்டில், 'கோடாகோடி, நூறுகோடா கோடி' என்பனவற்றிற்கு முறையே, 'தாமரை, சங்கம்' என்றும் (மிகப் பழைய தமிழ் எண்ணின் பெயர்கள்) பொருள் கொளவேண்டும். “நின்முகம், தாமரை போலவும்; கழுத்து 'சங்கு' போலவும் அழகாக அமைந்துள்ளன” என்ற கருத்தை உட்கொண்டு, இகழ்வது போலப் புகழ்வதாகப் பாடப் பெற்ற பாடல் இது!

### *இசைப் பாடல்*

பண்ணோடு பாடுதற்கு ஏற்ற இன்னிசைப் பாடல்களும் பாடியுள்ளார் வள்ளலார். இவரை வழிகாட்டுநராகக் கொண்டே பின்னர் வந்த பாரதியாரும், தமிழிசைப் பாடல்கள் பாடினார் எனலாம்! இசைப் பாட்டுக்கு ஒரு சான்று!

### *பல்லவி*

*"வருவார் அழைத்து வாடி வடலூர் வடதிசைக்கே*
*வந்தாற் பெறலாம் நல்ல வரமே! (வருவார்)*

### *அநுபல்லவி*

*திருவார் பொன் னம்பலத்தே செழிக்கும்குஞ் சிதபாதர்*
*சிவசிதம் பரபோதர் தெய்வச்ச பாநாதர்!(வருவார்)*

### *சரணம்*

*சிந்தைக ளிக்கக்கண்டு சிவானந்த மதுவுண்டு*
*தெளிந்தோரெல் லாருந்தொண்டு செய்யப்ப வரிகொண்டு*
*இந்த வெளியில்நட மிடத்துணிந் தீரேயங்கே!*
*இதைவிடப் பெருவெளி இருக்குதென்றா லிங்கே!*
*(வருவார்)*

*இடுக்கி லாமலிருக்க இடமுண்டு நடஞ்செய்ய*
*இங்கம் பலமொன்றங்கே யெட்டம் பலமுண்டைய*
*ஒடுக்கி லிருப்பதென்ன வுளவுகண்டு கொள்வீ ரென்னால்*
*உண்மையிது வஞ்சமல்ல வும்மேலாணை என்று சொன்னால்!"[13]*
*(வருவார்)*

– இப்பாடலிலும், 'சிவானந்த மது' எனும் உருவகம் வந்துள்ளமை தெளிவு.

## *அருளாளர் வழியில்!*

அடிகளார், தமது தொடக்ககாலத்தில் திருஞானசம்பந்தரைக் குருவாகக் கொண்டிருந்தார். 'தேவாரம்' பாடிய மூவரிடத்தும், 'திருவாசகம்' அருளிய மணிவாசகரிடத்தும் பக்தி கொண்டிருந்தவர் அடிகளார் ஆதலின் இந்நால்வர்மீதும் அருட்பாப் பாடி அகங்குளிர்ந்தார்.

மாணிக்கவாசகர், சிவபெருமானைப் பல்வேறு வகைகளில் ஏத்திப் பாடியுள்ளமை திருவாசகத்தால் அறிய முடியும். அவர், ஒரு பாடலில்,

*'கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற் போலச்*
*சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று . . ."[14]*

என்று குறிப்பிடுவர். அதனை உட்கொண்டே இராமலிங்க அடிகளாரும், திருவாசகத்தைச் சிறப்பித்துப் பாடுகின்றார். அது வருமாறு : –

*"வான்கலந்த மாணிக்க வாசக! நின் வாசகத்தை*
*நான்கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே*
*தேன்கலந்து பால்கலந்து செழுங்கனித்தீஞ் சுவைகலந்து*
*ஊன்கலந்து உயிர்கலந்து உவட்டாமல் இனிப்பதுவே!"*[15]

திருவாசகத்தின் சாயல், இத் திருவருட்பாவிலும் மிளிர்வது காணலாம்.

பழைமை வாதிகளில் சிலர், அருட்பாவுக்கு எதிராகக் கிளம்பினர்; வழக்கு, நீதிமன்றம் வரையிலும் சென்றது; வள்ளலார் மீது தொடுக்கப்பட்ட அவதூறு வழக்குத் தள்ளுபடி செய்யப்பட்டது. கருணை வள்ளலாம் இராமலிங்க அடிகளார், தமக்கு இப்படி ஒரு இழிநிலை உண்டாயிற்றே என மனம் வருந்தினார். நாவுக்கரசரைக் கல்லிலே கட்டிக் கடலில் தள்ளவில்லையா? சம்பந்தர் தங்கிய மடத்துக்கு நெருப்பு மூட்டவில்லையா? அப்படிச் செய்தவர்கள் எல்லாம் புறச்சமயத்தினர். ஆனால் இராமலிங்க அடிகளாருக்குப் பகையாகக் கிளம்பியவர்களோ அதே சைவ சமயவாதிகள்!

உயர்க்குலத்திற்குத் தொண்டு செயப் புகுந்த தமக்கு நேர்ந்த இச்செயல் குறித்து ஆண்டவனிடமே முறையிட்டார் அடிகளார்:

*"வரும் உயிர் இரக்கம் பற்றியே உலக*
*வழக்கில், என் மனம்சென்ற தோறும்*
*வெருவிநின் அடிக்கே விண்ணப்பித் திருந்தேன்!*
*விண்ணப்பம் செய்கின்றேன் இன்றும்*
*உருவான் உயிர்தான், உயிர்இரக் கம்தான்*
*ஒன்றதே இரண்டிலை, இரக்கம்*
*ஒருவில்என் உயிரும் ஒருவும்என் உள்ளத்து*
*ஒருவனே நின்பதத்து ஆணை"*[16]

தாயுமானவர் போன்று அடிகளாரும் தம் சீர்திருத்தக் கருத்துக்களைப் பாடியதோடு நின்றிருந்தால், அவருக்கு எதிர்ப்பு ஏற்பட்டிருக்காது. ஆனால் அடிகளாரோ, புதியதொரு ஆன்மநேய ஒருமைப்பாடுடைய சமுதாயத்தைப் படைக்க விரும்பினார்; பசித்தோர்க்கு உணவு தர முன்வந்தார்; 'கண்மூடி வழக்கமெல்லாம் மண்மூடிப் போக' என்றார். 'கருணையிலா ஆட்சி கடுகி ஒழிக!'[17] என்றார்; எவ்வுயிரையும் தம்முயிராகக் கருதினார்; சமரச சன்மார்க்கம் கண்டார்! – இப்படிச் செயலில் இறங்கியதனால் வம்புகளும் வழக்குகளும் நேர்ந்தன! எனினும் அடிகளார் தமது பணியினின்று சிறிதும் பின்வாங்கவில்லை! "இரக்கம் வேறு நான்வேறு அன்று; இரக்கம் என்னிடமிருந்து என்று நீங்குமோ, அன்றே என்றன் ஆவியும் நீங்கும்" என்று ஆண்டவனிடம் முறையிட்டவர்.

'அருட்பா' என்று தம் நூலுக்குப் பெயரிடுவதைக் கூட எவ்வாறு சம்மதித்தார் என்று எண்ண வேண்டியுளது. "அம்பலப் பாட்டே அருட்பாட்டு" என்றதால், 'அருட்பா' என்பது அம்பலத்தாடும் இறைவனது பெருமை பேசுவதால் உடன்பட்டார் போலும் என்று எண்ணவேண்டியுள்ளது.

*முடிவுரை*

> *"அருட்பா என்னும் கருவிகொண்டு, சுவாமிகள் (வள்ளலார்) வாழ்வை நோக்கினால், அவர் வாழ்வில் முதல்முதல் புலனாவ தொன்று. அவ்வொன்றே அவர் வாழ்வைச் சிறப்புச் செய்தது. அவ்வொன்றே எல்லார் வாழ்வையும் மேன்மையுறச் செய்வது. அவ்வொன்றிலா வாழ்வு எத்தகையதாயினும், அது சவலையுற்றுச் சாம்பி அழுகிச் சாகும். அவ்வொன்று எது? கடவுளிடத்து உறுதி! அது, வாழ்விற்குக் கொழுகொம்பு போன்றது. இராமலிங்க சுவாமிகள், அக் கொம்பரைத் தாம் வேறு, அது வேறு என்று கருதாதவாறு உடும்பெனப் பற்றிக் கொண்டார். சுவாமிகளின் எண்ணம், சொல், செயல் எல்லாம் கடவுளிடத்தே படிந்து கிடந்தன. அவர் ஊன், உயிர், உடல் எல்லாம் அதனூடே உருவி நின்றன. சுவாமிகள், கடவுளிடம் கொண்ட உறுதியை அருட்பா முழுவதும் காணலாம். அருட்பாவை ஓதி உணரும் ஒருவர் ஆண்டவனிடத்து உறுதி கொள்ளுதல் ஒருதலை!"*

என்னும் திரு. வி. க., கூற்றும்;

> *"அருட்பா என்ற நூல், அனுபூதியை நாடிச் சென்ற ஓர் உயிரின் நாட்குறிப்பு. நம் நாட்டுத் தத்துவ ஞானியரும், 'எரலின் அண்டர்ஹில்' (Erelyen Under Hill), 'அல்டாஸ்ஹக்ஸ்லி (Aldous Huxley) போன்ற மேனாட்டு மெய்ப்பொருள் இலக்கியத் திறனாய்வாளரும், இறைவனை நோக்கிச் செல்லும் உயிரின் பயணத்தில் பலபடிகள் காண்கிறார்கள். அவை யாவும் அருட்பாவிலே பேசப்படுகின்றன!*
>
> *"மறுக்க முடியாத தன்னுடைய அனுபூதியே அத்தாட்சியாக, சாதி சமய வேற்றுமை என்ற*

*துச்சநிலையைத் தூவென்று தள்ளி, அவற்றைக் கடந்த ஒருமைப்பாட்டுக்கு, இரக்கமே உயிராக வாழும் மேன்மைக்கு– தமிழகத்தை, உலகத்தை, அருட்பிரகாச வள்ளலார் அழைத்த பக்தி – ஞானக் குரலே 'திருவருட்பா'!"* [2]

என்றும், ஆங்கிலப் பேராசிரியர் அ. சீனிவாசராகவன் கூற்றும், திருவருட்பாவின் சிறப்பை – உயர்வை – மேன்மையைக் காட்டுவனவாம்!

## *முடிவுகள்*

இவ் இயல் வாயிலாக அறியத் தகுவன:

1. 'வாழையடி வாழை என வந்த திருக்கூட்டத்'தைச் சேர்ந்த இராமலிங்க அடிகளார், பாடிய பாடல்களின் தொகுதி 'திருஅருட்பா' என வழங்கப் பெறுகின்றது;
2. அடிகளார், தம் பிள்ளைப்பருவத்தில், சென்னையில் உள்ள கந்தகோட்ட முருகன் மீது பாடிய முதல்நூல், 'சென்னைக் கந்தர் தெய்வமணி மாலை – சரணப்பத்து' என்பதாகும்;
3. அடிகளார் பாடிய 'திருவருட்பா' ஆறுதிருமுறைகள் கொண்டது; 5818 பாடல்கள் கொண்டது; இவை தவிரக் காற்றில் கலந்து போனவை; ஏட்டில் எழுதிவைக்கப்பட்ட பின் காணாமற் போனவை எனப் பலவாம். பாக்கள் தவிர, மனுமுறை கண்ட வாசகம், சீவகாருணிய ஒழுக்கம் முதலான உரைநடை நூல்களும் யாத்துள்ளார்;
4. அருட்பா – ஓர் அமுதக்கடல்; அதனுள் மூழ்கினால், பக்தி, சமரசம், ஆன்ம நேய ஒருமைப்பாடு, சீவகாருணிய ஒழுக்கம், சமய நல்லிணக்கம் முதலான நன்முத்துக்களைக் காணலாம்;
5. அன்றியும், அருட்பாவில், உவமை, உருவகம், சிலேடை முதலான அணிகலன்களும், இசைப் பாமாலைகளும் மிளிரக் காணலாம்;
6. இறைவனை நோக்கிச் செல்லும் உயிரின் பயணப் படிநிலைகளை அருட்பாவில் கண்டு உய்தி பெறலாம்.

## *சான்றெண் விளக்கம்*

1. குன்றக்குடி அடிகளார், 'வள்ளல் பெருமானின் புரட்சி', *ச. க. ச. ச. சங்க நூற்றாண்டு விழாமலர்*, ப. 84.

2. ம. பொ. சி., வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு, ப. 170.

3. மேலது, ப. 172.

4. புரசு. பாலகிருஷ்ணன், ஞானக்கவி ராமலிங்கர், கால அட்டவணை, ப. 134.

5. சு. வெள்ளை வாரணனார், 'நூல் அறிமுகம்', திருவருட்பா மூலமும் உரையும் (1–570), பக். ஏஐ, ஏஐஐ.

6. ம. பொ. சி., மு. கா. நூ. ப. 171.

7. திருவருட்பா, திருவருட்பேறு, 1 (ப. 352).

8. மேலது, புணராவிரகு பொருந்துறு வேட்கையின் இரங்கல் 9. (வ. எ. 1612)

9. மேலது, அருட்பெருஞ்சோதி அகவல், 705.

10. மேலது, அத்துவிதானந்தத் தனுபவ விடையீடு, 6:1 (ப. 84).

11. மேலது, பிரிவாற்றாமை, 9 (ப. 75).

12. மேலது, இங்கிதமாலை, 2.6 (வ. எ. 1797).

13. மேலது, இசைப்பாடல், (ப. 443).

14. திருவாசகம், சிவபுராணம், 46–47.

15. திருவருட்பா, ஆளுடை அடிகள் அருள்மாலை, 7 (வ. எ. 3263).

16. மேலது, பிள்ளைப் பெரு விண்ணப்பம், 93. (ப. 109).

17. மேலது, சமரசநிலை, 5:1. (ப. 232).

18. திரு. வி. க., இராமலிங்க சுவாமிகள் திருவுள்ளம், ப. 69.

19. அ. சீனிவாசராகவன், 'அருட்பா அருளாளரின் நாட்குறிப்பு' ச.சு.ச.ச. சங்க நூற்றாண்டு விழாமலர், ப. (?).

# 4

# இராமலிங்கர் பாடல்களில் சமய நல்லிணக்கச் சிந்தனைகள்

*முன்னுரை*

> *"எல்லாமுடைய அருட்பெருஞ்சோதி அற்புதக் கடவுளே! இது தொடங்கி எக்காலத்தும் சுத்த சன்மார்க்கத்தின் முக்கிய தடைகளாகிய சமயங்கள், மதங்கள், மார்க்கங்கள் என்பவற்றின் ஆசார சங்கற்ப விகற்பங்களும், வருணம் ஆசிரமம் முதலிய உலகாசார சங்கற்ப விகற்பங்களும் எங்கள் மனத்தில் பற்றாவண்ணம் அருள்செய்தல் வேண்டும்! சுத்த சன்மார்க்கத்தின் முக்கிய இலட்சியமாகிய* ***ஆன்மநேய ஒருமைப்பாட்டுரிமை*** *எங்களுக்குள் எக்காலத்தும் எவ்விடத்தும் எவ்விதத்தும் எவ்வளவும் விலகாமல் நிறைந்து விளங்கச் செய்வித்தருளல் வேண்டும்!*
>
> *"எல்லாமாகிய தனிப் பெருந் தலைமை அருட்பெருஞ்சோதி ஆண்டவரே! தேவரீர் திருவருட் பெருங் கருணைக்கு வந்தனம், வந்தனம்!"[1]*

என்று, சமய நல்லிணக்கச் சிந்தனைகட்கு அன்றே அடிகோலிய அருளாளர், இராமலிங்க அடிகளார். அவர், சைவ சமயத்தைச் சார்ந்தவர்; தில்லை நடராசப் பெருமானையும், கந்த வேளையும், சைவ சமய நாயன்மார்களையும் குறித்துப் பற்பல பாக்கள் பாடியவரே! எனினும், உலகமக்கள், சமயக் காழ்ப்புணர்ச்சி எதுவுமின்றி, ஒன்றுபட்டு வாழ வேண்டும் என்னும் உயரிய குறிக்கோளுடன் பாடினார்; செயல்பட்டார்! மக்கள் மட்டுமல்லாது, எல்லா உயிர்களுமே இன்புற்று வாழ வேண்டும் எனப் பாடுபட்டார். சமய ஒருமைப்பாட்டுக்குரிய நற்சிந்தனைகள், அவரருளிய அருட்பாவில் நிறைந்து காணப்படுகின்றன. இவ் இயலின் உட்பிரிவுகளாக அமைந்தவை:

4.1 இராமலிங்க அடிகளாரின் சமயம்

4.2 சமரச சன்மார்க்க சங்கம்

4.3 சத்திய தருமச் சாலை,

4.4. சித்திவளாகம்

இவற்றில், 4.1 'இராமலிங்க அடிகளாரின் சமயம்' என்ற பிரிவில், அவர் சைவ சமயத்தைச் சார்ந்தவர் என்பது விளக்கப்படுகின்றது; எஞ்சிய 3 உட்பிரிவுகளிலும் இராமலிங்கர் பாடல்களில், சமய நல்லிணக்கச் சிந்தனைகள் இடம்பெற்றுள்ளமை விரிவாக ஆராயப்படுகின்றன.

## 4.1
# இராமலிங்க அடிகளாரின் சமயம்

### *'சமயம்' - ஒரு சிறுவிளக்கம்.*

'சமயம்' என்ற சொல்லுக்குப் 'பக்குவப் படுத்துதல்' என்று பொருள். ஒரு பெண், பருவம் அடைந்துவிட்டாள் எனின், 'அவள் சமைந்து விட்டாளா?' என்று கூறுவதை இன்றும்கூட நாட்டுப்புறங்களில் கேட்கலாம். அஃதாவது, "அவள், இல்லற வாழ்வுக்குப் பக்குவமடைந்துவிட்டாள்" என்பது கருத்து. "சோறு சமைத்தாயிற்றா?" என்று கேட்பதைப் பலரும் அறிவர். "உண்பதற்குப் பக்குவமாக உள்ளது" என்பதாம். எனவே, ஞானியர்களாலே பக்குவப்படுத்த ஒன்றே 'சமயம்' என்று கூறலாம்.[2]

> *"சமயம் என்பது உலகத்து உயிர்களை இறைவனுடன்*
> *சேர்க்கும் வழி என்பது தத்துவம்"*[3]

என்பர் சோ. சத்தியசீலன்.

கடவுள் நம்பிக்கையின் அடிப்படையில் எழுந்தனவே சமயங்கள்! மனிதன் என்று தோன்றினானோ, அன்றே கடவுள் நம்பிக்கையும் தோன்றியிருக்க வேண்டும். காடுகளிலும், மலைக் குகைகளிலும் காலத்தைக் கழித்த மனிதன், விலங்குகளாலும், பிறவற்றாலும் தனக்குக் கேடுவரலாகாது என்று எண்ணினான்; அந்த உயிரச்சத்தின் விளைவாகவே 'கடவுள் நம்பிக்கை'யும் எழுந்திருக்கும்.

இன்றைய உலக வாழ்வில், 'கடவுள் நம்பிக்கை' இல்லாதோரையும் காணமுடிகின்றது. 'கடவுளே இல்லை' என்று வாழ்நாள் முழுதும் சொல்லிக் கொண்டிருந்தோரில் பலர், தமது இறுதிக் காலத்தில், 'கோயிலே கதி' என்று மனம் மாறிய நிலையும் உண்டு! 'இறப்புக்குப் பின் என்ன நடக்கும்?' என்ற உயிரச்சமே இதற்குக் காரணம்.

பிறவிகள் எண்ணிலடங்கா! பிறவிகள் பற்றி மணிவாசகர் ஒரு பட்டியலே தருகின்றார்:

> *"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்*
> *பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்*
> *கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்*

*வல்அசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்*
*செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்*
*எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்!"*[4]

என்பது அவர்தம் கூற்று. இப்பிறவிகள் பலவற்றுள்ளும் மனிதப் பிறவியே மேலானது.

*"அரிதரிது மானிட ராதல் அரிது"*[5]

என்பர் ஔவையார். இப்பிறவி ஒன்றினால்தான், இறைவனைப் பற்றி எண்ணவும், அவன்புகழ் பாடவும், அவனருளாலேயே அவனது திருவடி அடைந்து, பேரின்பம் பெறவும் முடியும்!

"இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ?" என்றெல்லாம் கூறுவது, மனிதப் பிறவியின் மேன்மை கருதியே!

*"மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே"*[6]

என்பது அப்பர் வாக்கு.

துறவிகளின் பெருமை பேச வந்த வள்ளுவர்,

*"துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து*
*இறந்தாரை எண்ணிக்கொண் டற்று"*[7]

என்பர்.

*"இருவகைப் பற்றையும் துறந்தவாது பெருமையை 'இவ்வளவு' என்று எண்ணத் தொடங்கி அறிய நினைத்தால், இவ்வுலகத்தில் பிறந்து இறந்தவர்களை 'இத்துணைப்பேர்' என்று எண்ணி, அறியத் தொடங்குவதைப் போன்றதாம்!"*[8]

என்பது இதன் பொருள்

எனவே, பிறப்புக்கு ஏற்ப இறப்பு நிகழ்வும் அளவிறந்து காணப்படுவதாம். பிறப்பும் இறப்புமாகிய இவ்விரு நிகழ்ச்சிகளும் மிக அற்புதமாக நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. இவற்றிற்கு விலக்கானவர்கள் எவருமிலர்!

இறப்புக் குறித்து அஞ்சுவது, பொதுவாக அனைத்து உயிருக்குமே உண்டு எனலாம். எவ்வளவு உடல்மீது பற்று மிகுதியாகின்றதோ, அவ்வளவுக்கவ்வளவு இறப்பு அச்சமும் மிகுதியாகின்றது.

*"பிறத்தலும் பிறந்தாற் பிணிப்பட வாய்ந்து*
*அசைந்து உடலம் புகுந்து நின்று*
*இறக்குமாறு உளதே!"[9]*

என நாவுக்கரசரே கூறுவாரெனின் ஏனையோர்பற்றி என்சொல்லக்கூடும்?

தாயுமானவரும்,

*"இறப்பொடு பிறப்பை உள்ளே எண்ணினால்*
*நெஞ்சது பகீர் எனும்"[10]*

என்பர். பிறப்பும் இறப்பும் மாறிமாறி வருதற்கான காரணம் குறித்துச் சுவாமி சித்பவானந்தர் கூறுவது இவண் குறிக்கத்தகும்:

> *"ஜீவர்களுக்கு உடல் வாழ்க்கையில் பற்றை அகற்றுதல் பொருட்டு, மரணத்தின் வாயிலாக இறைவன் உயிர்களை ஓரிடத்திலிருந்து இன்னோர் இடத்துக்கு மாற்றி விடுகிறார். . . மரணத்தைக் குறித்துத் துன்பப்படுவதன் மூலம், உயிர்கள் தூய்மையடைகின்றன. தூய்மை அடைந்த பின்பே, அருளை ஏற்க அவைகளுக்குத் தகுதியும் வந்தடைகின்றது!*
>
> *"இறைவனுடைய 'அருள்' என்ற தென்றல், ஓயாது அடித்துக் கொண்டிருக்கிறது. அதற்கு ஓய்வு இல்லை. ஆனால் பரிபக்குவம் அடையாத ஜீவன்களுக்கு அது வெகுதூரத்தில் இருப்பது போன்ற எண்ணமாய் வருகிறது. பக்குவம் அடைந்தவர்களுக்கோ அதைவிடச் சொந்தம் எதுவுமில்லை!"[11]*

கடவுள் நம்பிக்கை இல்லாமற் போனதற்குப் பல்வேறு காரணங்கள் உண்டு. அவற்றில் ஒன்றினை இவண் சுட்டலாம்:

'கடவுள் நம்பிக்கை' என்ற பெயரால் 'போலிகள்' மிகுந்து பெருகிவிட்டனர். அவர்கள் சொல்லும் சொல்லுக்கும், செய்யும் செயலுக்கும் தொடர்பில்லாது போனது! திருக்கோயில் வழிபாட்டிலும் உயர்வு – தாழ்வு வேறுபாடுகள், உயர்ந்த சாதி – தாழ்ந்த சாதி என்ற மனப்பான்மை; 'தீண்டாமை'–இத்தகைய செயல்களால் 'கடவுள் நம்பிக்கை' மீது வெறுப்பு ஏற்பட்டது.

> *"வழிபாடும் வாழ்க்கையும் வெவ்வேறு என்றும், வாழ்க்கையிலே ஒரு சிறு கூறுதான் வழிபாடு என்றும்*

*கூறுகின்ற நிலையையும் அவைகள் (சமயங்கள்) தோற்றுவித்துவிட்டன. அத்தோடு நின்றிருந்தால்கூடப் பரவாயில்லை! வாழ்க்கையில் செய்யும் தவறுகளுக்கும், பாபங்களுக்கும், அவற்றைப் போக்கும் கழுவாயே (பிராயச்சித்தமே) வழிபாடு என்று மக்கள் நினைக்கின்ற ஒரு இழிந்த நிலையையும் தோற்றுவித்துச் சமுதாய வாழ்வில் ஒரு சீர்கேட்டினையும் உருவாக்கிவிட்டன! அதன் பயனாய்ப் 'பாபம் செய்யக் கூடாது' என்ற நிலைமாறிச், செய்யப் போகின்ற பாபத்திற்கு முன்கூட்டியே செய்யும் பரிகாரமாய் வழிபாட்டைப் பயன்படுத்தும் ஒரு பரிதாப நிலையையும் அவைகள் சமுதாயத்திலே உண்டாக்கி விட்டன!*

*"இவற்றையெல்லாம் விட, சமயங்கள் கொண்டிருந்த இந்த அடிப்படை வேறுபாடுகளால் விளைந்த மிகப் பெரிய கேடு ஒன்று உண்டு. சிலர் சமுதாய நலத்தை நாடி, இறை உண்மையையே ஒதுக்க வேண்டிய சூழ்நிலையும் உருவாயிற்று!"*[12]

என்று கூறும் சோ. சத்தியசீலனின் கருத்தை எவரும் மறுத்தல் இயலாது!

கடவுள் பெயரால் வேள்விகள் செய்தல்; உயிர்க்கொலை புரிதல் முதலாயினகண்டு வெறுத்தமையால்தான் 'புத்தர்' போன்ற ஞானிகள், இறைவனைப் பற்றி எதுவும் சொல்லாது போயினர்!

தமிழர்களைப் பொறுத்தமட்டில், நெடுங்காலத்திற்கு முன்பிருந்தே கடவுள் நம்பிக்கை உடையவர்களாயிருந்தனர் என்பது வரலாறு கூறும் உண்மை. ஏறத்தாழ ஐயாயிரம் ஆண்டுகட்கும் முற்பட்ட காலத்திலுங்கூடச் 'சிவ வழிபாடு' இருந்தது என்பது ஆய்வாளர்கள் கருத்து. [13]

'தொல்காப்பியம்' என்னும் இலக்கணநூல், கி. மு. விலேயே தோன்றிய மிகப் பழமையானது. ஓர் இலக்கணநூல் உருவாக வேண்டுமானால், அதற்கு முன் பல்வேறு இலக்கிய நூல்கள் இருந்திருக்க வேண்டும். எள்ளிலிருந்து எண்ணெய் எடுபடுவது போல், இலக்கியத்தினின்றும் உருவாவது இலக்கணம். அத்தகு தொல்காப்பியத்திலேயே, இறைவழிபாடு பற்றிய கருத்துக்கள் சொல்லப்பட்டுள்ளன. பண்டைத் தமிழர், 'முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல்' முதலான நிலங்களுக்குரிய தெய்வங்களையும் வழிபட்டு வந்தனர். [14]

அதன்பின்னர்த் தோன்றிய சங்க இலக்கியங்களிலும், 'திருக்குறள்' போன்றவற்றிலும், இறைவனைப் பற்றிய கருத்துக்கள் மிகுதியாகக் காணலாம். திருக்குறளில் முதல் அதிகாரமே 'கடவுள் வாழ்த்து'. "பிறவி என்னும் பெருங்கடலினின்றும் விடுதலை பெற வேண்டுமானால், இறைவன் திருவடி என்ற புணை (மிதவை) யைப் பற்ற வேண்டும்"[15] என்று சொன்னதனோடமையாது,

> *"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்*
> *பற்றுக பற்று விடற்கு"*[16]

என்றும் கூறுவது காணலாம்.

'இறைவன் ஒருவன் உண்டு' என்று நம்புபவர்களிடையே கூட, சில குறைபாடுகள் உண்டு.

> *"உலகியல் ஒட்டியுள்ள நிலையில், இறையியல் பற்றிய நினைவு பெரும்பாலோர்க்குப் பெரும்பாலும் உண்டாதல் இல்லை. உடல் பற்றிய நினைவு, உயிர்பற்றிய நினைவை மறைத்துவிடுகிறது. புறப்பொருள் பற்றிய நினைவு, பரம்பொருளை மறக்கச் செய்கிறது. தன்னினைவு மிகும் போது, அன்பும் அருளும் மாறி, அறம் கெடுகின்றது. தொல்வினையும், செய்வினையும், பின்வினையாகிப் பிரியாப் பிறவித் துயரில், பிரபஞ்சச் சேற்றில் வீழ்ந்தாழச் செய்கின்றன. பிறவித் துன்பம் தீர, வழியறியாது, உலகில் – உலகியலில் உழல்வோர் பலராயினர். அவனருளால் அவன்தாள் வணங்கப்பெற்றுச் சிக்கெனத் திருவடி பற்றி, எற்புத்துளைதோறும் இன்ப ஊற்று எழப் பேரானந்தம் எய்திப் பிறப்பறுத்தோர் சிலரே ஆயினர்!"*[17]

என்று இரா. இராதாகிருஷ்ணன் கூறுவது முற்றிலும் பொருந்தும்!

எனவே மனிதராகப் பிறந்தோர் அனைவர்க்கும் 'இறை உணர்வு' இன்றியமையாதது என்பது போதரும். இந்த இறை உணர்வைத் தருவன 'சமயங்களே'யாம்! சமய உணர்வு இருந்தால்தான், பிறர்க்கோ, பிற உயிர்களுக்கோ மறந்தும்கூடத் தீங்கு இழைக்காத எண்ணம் தோன்றும்!

> *"மறந்தும் பிறன்கேடு சூழற்க; சூழின்*
> *அறம்சூழும் சூழ்ந்தவன் கேடு"*[18]

என ஆணித்தரமாக உரைப்பார் வள்ளுவர். மேலும் இவர், 'தீவினையச்சம்' என்று

ஓர் அதிகாரமே வகுத்துள்ளார். வினைகளே, பிறவிக்குக் காரணம். இதனைச் சைவசித்தாந்தம், 'சஞ்சிதம், பிராரத்தம், ஆகாமியம்' என மூன்றுவகையில் விளக்கிக் கூறும். [19]

பிறவிப் பெருங்கடலினின்றும் ஈடேற 'வினைநீக்கம்' வேண்டும். இதற்கெல்லாம் 'சமய உணர்வே' அடிப்படை எனலாம்.

சமயங்கள் பலவாக இருப்பதில் தவறில்லை என்கின்றார், சுவாமி சித்பவானந்தர். அவர் கூறுவது வருமாறு :

> *"உணவு வகைகள் கணக்கற்றவை. அவ்வாறே சமயங்களும் பலதரப்பட்டவைகள் இருக்கின்றன. 'எத்தனை மனிதர்களோ அத்தனை வித சமயங்கள் உலகில் உள' என்பது இராமகிருஷ்ணர் கருத்து. ஏனென்றால் வாழ்க்கை முறையில் ஒரு மனிதன் முற்றிலும் மற்றொரு மனிதனை ஒத்திருப்பதில்லை. ஒவ்வொரு மனிதனும் தன் இயல்புக்கு ஏற்றபடி சமய அனுஷ்டானத்தைக் கடைப்பிடித்து வருகிறான். . . ஒரு மனிதனுடைய அச்சு அமைப்பில், இன்னொரு மனிதன் இருப்பதில்லை! மனத்தின் இயல்பும் ஒவ்வொரு மனிதனுக்கும் ஒவ்வொன்றாய் அமைந்திருக்கிறது. . . அங்ஙனம் சமயங்களும் பல இருக்கின்றன. . . சமயங்கள் பல இருப்பதனால்தான் அவரவர் மனத்துக்கு உகந்த மதம் ஒன்றை அனுஷ்டிக்க மனிதனுக்கு இயலுகிறது!"* [20]

எனவே சமயங்கள் பலவாக இருத்தல் இயல்பே என்ற முடிவுக்கு வரமுடிகின்றது.

மிக உயர்ந்த மலை உச்சியை அடைய வேண்டும். அதனை அடைவதற்குப் பலரும் முயற்சி செய்கின்றனர். மலையைச் சுற்றிலும் ஒவ்வொருவரும் ஒவ்வோரிடத்தில் நின்றுகொண்டு, மலைமீது ஏறுகின்றனர்; புறப்படும் இடங்களின் வேறுபாடு கொண்டு, புறப்படும் இடங்களும் பலவாகின்றன. சமயங்களும் அவ்வாறே!

மலையில் ஏறுவோர் ஒவ்வொருவரும் தத்தமக்குப் பொருத்தமானவாறு நடந்து செல்கின்றனர்; நாளடைவில் அதுவே வழியாக மாறி விடுகின்றது. சமயங்கள் பலவாகத் தோன்றிய முறையும் இவ்வாறே!

ஆனால், வழிகள் பலவே என்றாலும் மேலே செல்லச்செல்ல, எல்லா வழிகளும் மலைஉச்சியில் குவிந்து ஒன்றுபட்டு விடுகின்றன.

இவ்வாறே சமயங்கள் அனைத்தும், 'மார்க்கங்கள்' அல்லது 'நெறிகள்' எனப்படுகின்றன. அவை யாவும் 'இறைவனை அடைதல்' என்ற ஒரே இடத்திற்கு அழைத்துச் செல்வனவாம்.

உண்மை இவ்வாறிருக்கச் சமயவாதிகளிற் பலர், தத்தம் சமயமே உண்மைச் சமயம்; பிறவெல்லாம் 'போலிகள்' எனக் கருதிக் கலாம் விளைக்கின்றனர். இன்று உலகெங்கும் இத்தகைய கேடுகள் பல்கிப் பெருகிவிட்டன. அ. ச. ஞானசம்பந்தன் கூறுவது போல்,

> *"சமயம் வேறு; சமயவாதிகள் வேறு"*[21]

என்பது மெய்யாகின்றது. திரு. வி. க. வும்,

> *"உலகிலுள்ள சமயங்கள் யாவும் சன்மார்க்கமொன்றையே குறிக்கொண்டு நிற்றல் உண்மை. அவற்றின் நுட்பம் தேறாது, மக்கள் சமயப் பெயர்களை மட்டும் கொண்டு, சமய நெறி விடுத்துச் சமய வெறியர்களாய், உலகில் நிகழ்த்திய போர்கள் பல; இட்ட வழக்குகள் பல!"*[22]

என்று கூறுவது நோக்கத்தக்கும்.

அவரவரும் தத்தம் சமய நெறியில் நின்று, புறச் சமயங்களை நேசிக்கலாம்; அஃது இயலாதெனில், பழிக்காமலாவது இருத்தல் நல்லது!

## *இராமலிங்கர் சமயம்*

வள்ளல் இராமலிங்க அடிகளார் சைவ சமயத்தைச் சார்ந்தவர். அவரின் பெற்றோர்கள் வழிவழியாகச் சிவபெருமானை வணங்கி வந்த சைவப் பெரியார்கள்.

அடிகளார், பயிலத் தொடங்கியது சாகாக்கல்வி. அதனை அவருக்குப் பயிற்றுவித்த பேராசான், திருத்தணிகை முருகப்பெருமான். வீட்டு மேல்மாடியில், கண்ணாடி ஒன்றை வைத்து, தம் சிந்தையில் முருகப் பெருமானை உருவகப்படுத்தி, அவரின் திருக்காட்சியைக் கண்டவர். அவ்வாறு கண்டபோது அவருடைய உள்ளமும் ஊனும் உருகின; உணர்ச்சி பொங்கியது. அப்போது தணிகை முருகன் மீது கவிதை மழை பொழிந்தார்.

> *"சீர் கொண்ட தெய்வ வதனங்கள் ஆறும் திகழ்கடப்பந்*
> *தார் கொண்ட பன்னிருதோள்களும் தாமரைத் தாள்களும் ஓர்*
> *கூர்கொண்ட வேலும் மயிலும், நற்கோழிக் கொடியும் அருள்*
> *கார்கொண்ட வண்மைத் தணிகா சலமும், என் கண்ணுற்றதே!"*[23]

இவ்வாறு இவர் பாடிய போது, இவருக்கு வயது ஒன்பது! சின்னஞ்சிறு வயதிலே, பள்ளிசென்று பயிலாதவர், இறைக்காட்சிகாணும் பேறுபெற்றுப் பாப்புனைந்தவர் அடிகளார். இதனை அடிகளாரே, 'சத்தியப் பெரு விண்ணப்பம்' என்ற பகுதியில் கூட்டுகின்றார்:

*"தனித் தலைமைக் கடவுளே! குமாரப் பருவத்தில் என்னைக் கல்வியிற் பயிற்றும் ஆசிரியரின்றியே என் தரத்தில், பயின்று, அறிதற்கு அருமையாகிய கல்விப் பயிற்சியை எனது உள்ளகத்தே இருந்து பயிற்றுவித்தருளினீர்!"* [24]

என்பது அவர் கூற்று

பொதுவாக, இறைவழிபாட்டில் இருவகை உண்டு. ஒன்று 'உருவ வழிபாடு'; மற்றொன்று, 'அருவ வழிபாடு'.

*"சமயங்களிடையே 'உருவவழிபாடு' கொண்டவை, 'அருவ வழிபாடு' கொண்டவை என்ற வேறுபாடு இருப்பினும், இரண்டு பிரிவினரும், இறையை வழிபடுவதில் ஒன்றுபடுகின்றனர். இறைவனுக்கு உருவத்தைப் படைப்பதில் காலந்தோறும் மனித இனங்கள் வெவ்வேறு வகையில் வேறுபடுகின்றன".*

*"பண்டைய கிரேக்கருக்கு அழகே இறை உருவமாகும். எகிப்தியருக்கு இருளையும் அறியாமையையும் அகற்றும் ஒளியே, இறை உருவமாகும். உரோமருக்கு, விதியும் ஒழுங்குமே இறை உருவமாகும். புத்தர்கட்குத் தன்முயற்சியும் நியதியுமே இறை உருவமாகும். சமணர்க்கு உயர்க்கருணையே இறை உருவமாகும். கிறித்தவர்க்கு மக்கள் சேவையே இறை உருவமாகும். இசுலாமியர் இறை வல்லமை, இறைப் பணிவு முக்கியம் எனத் தொழுவர். இந்து சமயம், 'எல்லாமே இறை' எனத்தொழும்!"* [25]

என்கின்றார் கோ. அன்பழகன்.

இராமலிங்க அடிகளார் கூறுவது இது:

*"பிரம்மத்தை அறியத் தொடங்கினோர் அறிதல் வேண்டும்; விக்கிரக ஆராதனை செய்யத் தொடங்கினோர் செய்தல்*

*வேண்டும்; இவ்விரு வகையும் அடிப்படுகுரிய பக்குவர்களுக்கு அடுத்த வகைகள் என்று அறிய வேண்டும் . . .*"[26]

அஃதாவது, விக்கிரக வழிபாடு பற்றிய உண்மையை உணர்ந்து கொண்டு, உள்ளத் தூய்மையோடு வழிபட வேண்டும் என்பது அவர் கருத்து.

அடிகளார், முதலில் பாடிய பாமாலை, 'தெய்வமணிமாலை'. சென்னை கந்தகோட்டத்து (கந்தசுவாமி கோயில்) முருகனைப் பற்றியது. முதன்முதலாக அச்சேறிய பாடலும் இதுவே! இது, 31 பாடல்கள் கொண்டது. அடிகளார் பாடிய இப்பாமாலையின் முதற்பாடல் வருமாறு:

"*திருவோங்கு புண்ணியச் செயலோங்கி அன்பருள்*
*திறலோங்கு செல்வம் ஓங்கச்*
*செறிவோங்க அறிவோங்கி நிறைவான இன்பம்*
*திகழ்ந்தோங்க அருள்கொடுத்து*
*மருவோங்கு செங்கமல மலரோங்கு வணமோங்க*
*வளர்கருணை மயமோங்கி யோர்*
*வரமோங்கு தெள்ளமுத வயமோங்கி யானந்த*
*வடிவாகி ஓங்கி ஞான*
*உருவோங்கும் உணர்வினிறை ஒளியோங்கி ஓங்குமயில்*
*ஊர்ந்தோங்கி எவ்வுயிர்க்கும்*
*உறவோங்கு நின்பதம்என் உளமோங்கி வளமோங்க*
*உய்கின்ற நாள் எந்த நாள்?*
*தருவோங்கு சென்னையிற் கந்தகோட்டத் துள்வளர்*
*தலமோங்கு கந்த வேளே!*
*தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி*
*சண்முகத் தெய்வ மணியே!*"[27]

இதற்கு ஔவை சு. துரைசாமி பிள்ளை விரிவான விளக்கம் தருகின்றார் :

"*மரங்கள் நிறைந்த சென்னையில் உள்ள கந்தகோட்டத்துள் கோயில் கொண்டு உயர்கின்ற கந்தவேளே! குளிர்ந்த தோற்றத்தையுடைய தூய மாணிக்க மணிகளுள், அருள் நிறைந்த சைவமணியாய்த் திகழும் ஆறு முகங்களையுடைய தெய்வமாகிய மணியே! யாவரும் விரும்புதலையுடைய நல்வினைகளைச் செய்தலையுடையராதலால், அன்பும் அருளும் திறலும்*

*மிக்க செல்வம் சிறக்கவும், அடக்கம் அமையவும், அறிவு மேன்மையுற நிறைந்த இன்பம் மிக்கு விளங்கவும், திருவருளை வழங்கி, மணமுடைய செந்தாமரை மலரின் நிறமுற்று மிகுகின்ற கருணை உருவாய், ஒப்பற உயர்ந்த – தெள்ளிய அமுதப் பெருக்காய், ஆனந்த வடிவுற்றுச் சிறந்து, ஞானப் பொருள் கொண்ட உணர்வின்கண் நிறை ஒளி மிக்குத் திகழும் மயில்மேல், இவர்ந்து உயர்ந்து, எவ்வுயிர்க்கண்ணும் பொருந்தும் நின்னுடைய திருவடி, என் உள்ளத்தில் தங்குதலால் பெறலாகும் அருட்செல்வம் பெற்று உய்திபெறும் காலம் எப்போது, தெரிவித்து அருள்க!"* [28]

என்பது இதன் கருத்து.

*"குளிர்ந்த ஒளி செய்யும் தூய மணிகளுள் செம்மணியாகிய மாணிக்க மணியைத் 'தண்முகத்துய்யமணி' எனவும்; அம்மணிகளுள் முகம் பொருந்திய செம்மணி 'சைவமணி' எனவும்; அதன் ஒளியும் நிறமும் கொண்டு ஆறுமுகத்தொடு கூடிய திருமேனியுடையன் ஆதலால் 'சண்முகத் தெய்வ மணியே' எனவும் கூறுகின்றார்!"* [29]

என ஒவ்வொரு சொல்லுக்கும் விரிவுரை கூறுவது கொண்டு, அடிகளார், தொடக்க காலத்திலேயே எத்தகைய புலமை பெற்றிருந்தார் என்பதை உணரலாம். அன்றியும் இப்பாடல், 'பன்னிருசீர்க் கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்' என்பதும் குறிப்பிடத்தகும்.

இது தவிர, அடிகளார், திருத்தணிகை முருகன் மீது, "பிரார்த்தனை மாலை, எண்ணப்பத்து, செழுஞ்சுடர் மாலை, குறையிறந்த பத்து" எனப் பல்வேறு பகுதிகளும் பாடியுள்ளார்.

சிவபெருமானுடைய திருப்பெயர்களில் ஒன்றான 'நமசிவாய' என்பதில் அடங்கிய எழுத்துக்கள் ஐந்தினையும் தேர்ந்து கொண்டு 'திருவைந்தெழுத்து' எனப் பெயர் கொடுத்து, மனத்தால் சிந்தித்து, வாயால் ஓதியும் வழிபடுவது போல, முருகப் பெருமானின் திருப் பெயர்களில் ஒன்றான, 'குமாராய' என்பதனோடு 'நம' என்பதனையும் சேர்த்து, ஆறெழுத்து மந்திரமாகக் 'குமாராயநம' என்று கூறுவர். அடிகளாரும், தமது கைப்பட எழுதிய ஏடுகளில் 'குமாராயநம' என்று குறிப்பிட்டுள்ளார்! இம் மந்திரத்தை விதிப்படி ஓதி வழிபடுபவர், பெரும் பயன்

எய்துவர் என்பதை 'ஆறெழுத்து உண்மை' என்னும் பகுதியில் பாடுகின்றார் அடிகளார்!

"......... *தணிகைமலை அமுதே!*
*உன்றன் ஆறெழுத்தை*
*ஒருமை மனத்தில் உச்சரித்து இங் (கு)*
*உயர்ந்த திருவெண் ணீறுஇட்டால்*
*இருமை வளனும் எய்தும்; இடர்*
*என்ப தொன்றும் எய்தாதே!"* [30]

என்பது இதன்கண் இடம் பெறும் ஒரு பாட்டாகும்!

அடிகளார், சென்னையில் வாழ்ந்தபோது, அடிக்கடி திருவொற்றியூர் சென்று, தியாகேசப் பெருமானைப் பாடிப் பரவி வழிபட்டு வந்தார். தியாகேசர் மீதும், வடிவுடையம்மை மீதும் செந்தமிழ்க் கவை சொட்டச் சொட்ட எண்ணற்ற பாடல்கள் பாடியுள்ளார்.

*"சிந்தை மயங்கித் தியங்குகின்ற நாயேனை*
*முந்தை வினைதொலைத்துன் மொய்கழற்குஆள் ஆக்காதே*
*நிந்தை உறுநோயால் நிகழவைத்தல் நீதியதோ?*
*எந்தை நீ ஒற்றி எழுத்தறியும் பெருமானே!"* [31]

என்பது அப்பாடல்களில் ஒன்று.

அடிகளார், வடலூர் சென்று ஆங்கு நிலையாகத் தங்குவதற்கு முன்பு, தமிழ்நாட்டிலுள்ள பல திருத்தலங்களுக்கும் பயணம் செய்துள்ளார். அவருடன் சீடர்களும் சென்றுள்ளனர். அவ்வாறு சென்ற— காலை, 'திருவலிதாயம்' என்னும் திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள சிவலிங்கத்திற்குக் 'கந்தைத் துணி' சுற்றியிருப்பது கண்டு, ஆற்றாமையால் பல பாடல்கள் பாடியமையும் அறியமுடிகின்றது.

*"சிந்தை நின்ற சிவானந்தச் செல்வமே!*
*எந்தை யேனை ஆட்கொண்ட தெய்வமே!*
*தந்தை யேவலி தாயத் தலைவநீ!*
*கந்தை சுற்றும் கணக்கது என்கொலோ?"* [32]

என்பது சான்று.

அடிகளார், தாம் குழந்தையாக இருந்த போது, தில்லையம்பதியிலே கூத்தப்

பெருமானைக் கண்டு, தலையசைத்து வாய்விட்டுச் சிரித்து வழிபட்டவர். எனவே தில்லையிலும் சில காலம் தங்கியிருந்து நடராசப் பெருமானைக் குறித்துப் பாக்கள் பல பாடினார். அவற்றுள் ஒன்றிரண்டு மட்டும் இவண் குறித்தல் சாலும்.

நான்காம் திருமுறையில் 'குஞ்சிதபாதப் பதிகம்' என்பதொன்று உண்டு. அதில் வரும் ஓர் அரிய திருப்பாட்டு:

*'எழுவகைப் பிறவிகளுள் எப்பிறவி எய்துகினும்*
*எய்துக! பிறப்பில் இனிநான்*
*எய்தாமை எய்துகினும் எய்திடுக! இருமையினும்*
*இன்பம் எய்தினும் எய்துக!*
*வழுவகைத் துன்பமே வந்திடினும் வருக! மிகு*
*வாழ்வு வந்திடினும் வருக!*
*வறுமை வருகினும் வருக! மதிவரினும் வருக! அவ –*
*மதிவரினும் வருக உயர்வோடு*
*இழிவகைத்(து) உலகின்,மற் றெதுவரினும் வருக!அல (து)*
*எதுபோகினும் போக! நின்*
*இணையடிகள் மறவாத மனம் ஒன்று மாத்திரம்*
*எனக்கு அடைதல் வேண்டும் அரசே!*
*கழிவகைப் பவரோக நீக்கும், நல் அருள்எனும்*
*கதிமருந்து உதவுநிதியே!*
*கனகஅம் பலநாத! கருணைஅம் கணபோத*
*கமல,குஞ் சிதபாதனே!"* [33]

தில்லைச் சிற்றம்பலவாணனின் திருவடிகளை மறவாத மனம் வேண்டும் என இரந்து கேட்கும் அடிகளாரின் இப்பாடல், காரைக்காலம்மையார், ஆண்டவனிடம்,

*"இறவாத இன்பஅன்பு வேண்டிப்பின் வேண்டுகின்றார்,*
*பிறவாமை வேண்டும், மீண்டும் பிறப்புண்டேல் உனைஎன்றும்*
*மறவாமை வேண்டும் . . . ."* [34]

என வேண்டுகோள் விடுத்ததை நினைப்பூட்டுகின்றது!

சைவசித்தாந்தத்தில் சிறப்பாகப் பேசப்படுவது, 'திருவைந்தெழுத்து' ஆகிய 'நவசிவாய' மந்திரம்.[35] திருநாவுக்கரசரைக் கல்லில் பிணித்துக் கட்டிக் கடலில் போட்டபோது, அவர் அக்கடலில் மூழ்கிவிடாமல் கரைசேர்த்த அற்புத மந்திரம் இது!

*"சொற்றுணை வேதியன் சோதி வானவன்*
*பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்*
*கற்றுணைப் பூட்டிஓர் கடலில் பாய்ச்சினும்*
*நற்றுணை யாவது நமச்சி வாயவே!"*[36]

என நாவரசர், இம் மாமந்திரத்தின் பெருமை பேசுவார்.

திருவாசகத்தில் முதற்கண் அமைந்திருக்கும்,

*"நமச்சி வாய வாஅழ்க!"*[37]

என்பதனை அனைவரும் அறிவர்.

வள்ளல் இராமலிங்க அடிகளார், 'நமச்சிவாய சங்கீர்த்தன லகரி' என்றே பாடியுள்ளார்:

*"பெற்ற தாய்தனை மகமறந் தாலும்*
*பிள்ளை யைப்பெறும் தாய்மறந் தாலும்*
*உற்ற தேகத்தை உயிர்மறந் தாலும்,*
*உயிரை மேவிய உடல்மறந் தாலும்,*
*கற்ற நெஞ்சகம் கலைமறந் தாலும்*
*கண்கள் நின்(று) இமைப் பதுமறந் தாலும்*
*நற்ற வத்தவர் உள்ளிருந்(து) ஓங்கும்*
*நமச்சி வாயத்தை நான்,மற வேனே!"*[38]

என அழுத்தமாகக் கூறுவது எண்ணத்தக்கது.

தில்லை நடராசப் பெருமான், தமக்கு எவ்வாறெல்லாம் இன்பமாய்த் திகழ்கின்றார் என்பதற்கு அடிகளார் பாடும் தீஞ்சுவைப் பாட்டு ஒன்று:

*"தனித்தனிமுக் கனிபிழிந்து வடித்துஒன்றாய்க் கூட்டிச்*
*சர்க்கரையும் கற்கண்டின் பொடியும் மிகக் கலந்தே*
*தனித்த,நறுந் தேன்பெய்து, பசும்பாலும் தெங்கின்*
*தனிப்பாலும் சேர்த்துஒருதீம் பருப்பிடியும் விரவி,*
*இனித்தநறு நெய்அளைந்தே இளம்சூட்டின் இறக்கி*
*எடுத்தசுவைக் கட்டியினும் இனித்திடும்தெள் அமுதே!*
*அனித்தமறத் திருப்பொதுவில் விளங்குநடத் தரசே!*
*அடிமலர்க்குஎன் சொல்லணியாம் அலங்கல்அணிந் தருளே!"*[39]

இறைவன் அளிக்கும் ஆரா இன்பத்தை இதைவிட வேறு சொற்களால் சொல்ல இயலுமா என்பது ஐயமே!

சிதம்பர அனுபவத்தை அடிகளார் பெற்ற பான்மை குறித்து ந. ரா. ஊரன் கூறுவது வருமாறு:

> *"இளமையில் முருக உபாசகராகவும், குமாரப் பருவத்தில் சிவபக்தராகவும் திகழ்ந்த அடிகள், கருங்குழி போந்தபின், தில்லை நடராசப் பெருமானிடம் ஆரா அன்பு செலுத்தி, வழிபடத் தொடங்கினார்கள். அக்காலங்களில் பற்பல பாடல்களை அடிகள், சிதம்பர விஷயமாக அருளினார்கள். அடிகளே ஒரு கடிதத்தில், 'நான் இங்ஙனம் வந்த பின்னர், சிதம்பர விஷயத்தில் தோத்திர மாலைகளும், சாத்திர மாலைகளுமாகச் சுமார் 200 மாலைகள் செய்யப்பட்டிருக்கின்றன' எனக் குறித்துள்ளார்கள். திருச்சிற்றம்பலத்தை, 'ஒளிவிளங்கும் திருச்சிற்றம்பலம், இயற்கை உண்மை வெளியான திருச்சிற்றம்பலம், இயற்கை விளக்கமதாம் திருச்சிற்றம்பலம், இயற்கைத் தனி இன்பமயமாம் திருச்சிற்றம்பலம்' என்றெல்லாம் போற்றி, அத் திருச்சிற்றம்பலந்தனிலே தெய்வமொன்றே கண்டீர் என்று பாடுகின்றார்கள். 'அம்பலக் கூத்தன் குறிப்பினுக்கு என் கடவேனே' என்று ஆற்றாமைப் படுகிறார்கள். 'அல்லும் பகலும் திருக்குறிப்பை எதிர்பார்த்து இங்கே அயர்கின்றேன்' என்று சிற்றம்பலவனிடம் முறையிடுகின்றார்கள்!"*[40]

தில்லை வழிபாட்டில் பன்னிரண்டு ஆண்டுகள் கழித்த அடிகளார் பாடிய பாடல்களையும், அதற்கு முன்னர்ப் பாடிய பாடல்களையும் ஊன்று நோக்கினால், 'சைவசமயமே அடிகளார் மேற்கொண்டது' எனும் உண்மை புலனாகும்! எனினும், சமரச சுத்த சன்மார்க்கம், சத்திய தருமச்சாலை, சித்திவளாகம் என்பனவற்றால், சமய நல்லிணக்கத்திற்காக அரும்பாடுபட்டவர் அடிகளார் எனும் உண்மை போதரும்.

## *முடிவுகள்*

இவ் இயல் வாயிலாக அறியத் தகுவன:

1. சமய நல்லிணக்கச் சிந்தனைகளுக்கு, அன்றே அடிகோலிய அருளாளர் இராமலிங்க அடிகளார்;
2. பக்குவப்படுத்தப்பட்டது 'சமயம்';

3. உயிரைப் பற்றிய அச்சமே, கடவுள் நம்பிக்கைக்கு அடிப்படை;

4. 'கடவுள் நம்பிக்கை' என்ற பெயரால் 'போலி'கள் புகுந்துவிட்டதாலும், வேறுபல காரணங்களாலும், கடவுள் நம்பிக்கைமீது வெறுப்புண்டாயிற்று;

5. பண்டைத் தமிழர்கள், கடவுள் நம்பிக்கை உடையவர்கள்;

6. உண்மையான சமய உணர்வு இருக்குமாயின், பிறர்க்கோ, பிற உயிர்களுக்கோ தீங்கு இழைக்க எண்ணமாட்டார்;

7. உணவுகள் பலவாக இருப்பனபோலச் சமயங்களும் பலவாயின; ஆயினும் அவை சேரும் இடம் ஒன்றேயாம்;

8. சமயம் – வேறு; சமய வாதிகள் வேறு. சமயவாதிகளால்தான் உலகில் போரும் பிணக்கும், சண்டை சச்சரவுகளும் நிகழ்கின்றன.

9. இராமலிங்க அடிகளாரின் சமயம் – சைவசமயம். இதற்குத் திருவருட்பாவில் சான்றுகள் பல உள்ளன.

10. எனினும் அடிகளாரது உள்ளம் சமரசத்தையே நாடியது.

## *சான்றெண் விளக்கம்*

1. இராமலிங்க அடிகளார், சுத்த சன்மார்க்கச் சிறு விண்ணப்பம்.
2. ச. சாம்பசிவனார், சமய நல்லிணக்கச் சிந்தனைகள், ப. 22.
3. சோ. சத்தியசீலன், 'வள்ளல் கண்ட வழிபாட்டு நெறி', **சன்மார்க்க சங்க நூற்றாண்டுவிழா மலர்** (1965), ப.97.
4. திருவாசகம், சிவபுராணம், 26–31.
5. ஔவையார், தனிப்பாடல்.
6. திருநாவுக்கரசர் தேவாரம், 4941:4.
7. திருக்குறள், 22.
8. ச. சாம்பசிவனார்; சிவனாரின் வள்ளுவர் தெள்ளுரையும் சொல்லடைவும், ப. 6.
9. திருநாவுக்கரசர் தேவாரம், 4363 : 1–2.
10. தாயுமானவர் பாடல், சின்மயானந்த குரு, 5:3.
11. சுவாமிசித்பவானந்தர், (வி.உ.) தாயுமானவர் இயற்றிய சின்மயானந்த குரு. பக்.76–77.

12. **சோ. சத்தியசீலன், மு.கா.நூ.,** ப.97.

13. "Saivism dates back to Chalcolithic age and perhaps even further still"-vide Mohenjodara, Preface VII. **The Scripts of the Indus Valley Seals**.p.25 **ஆதாரம் :** R.Ramanujachari, 'Saiva Siddhanda', p.l.**Collected Lectures on Saiva Siddhandanda**.

14. தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல், 5.

15. திருக்குறள், 10 கருத்துரை.

16. மேலது, 350.

17. இரா. இராதாகிருஷ்ணன், 'வள்ளலாரும் மணிவாசகரும்', **சன்மார்க்க சங்க நூற்றாண்டு விழாமலர்** (1965), ப. 45.

18. திருக்குறள், 204.

19. ச. சாம்பசிவனார், சிவஞானபோதச் செம்பொருள், பக். 157–160.

20. சுவாமி சித்பவானந்தர், மு. கா. நூ. பக் 59–60.

21. அ. ச. ஞானசம்பந்தன், பெரியபுராணம் – ஓர் ஆய்வு, ப. 251.

22. திரு. வி. க., இராமலிங்க சுவாமிகள் திருவுள்ளம், ப. 63.

23. திருவருட்பா, பிரார்த்தனை மாலை, 1.

24. இராமலிங்க அடிகளார், சத்தியப் பெருவிண்ணப்பம்.

25. கோ. அன்பழகன், உலக சமய ஒற்றுமைக்கு வழிகாட்டி, ப. 7.

26. திருவருட்பாப் பெருநூல்.

27. திருவருட்பா, தெய்வமணிமாலை, 1.

28. ஔவை சு. துரைசாமிபிள்ளை, (உ. ஆ.) திருவருட்பா மூலமும் உரையும் (1–570), பக். 1,2.

29. மேலது, பக். 2–3.

30. திருவருட்பா, ஆறெழுத்துண்மை, 1 : 2–4.

31. மேலது, எழுத்தறியும் பெருமான் மாலை, 1. (வ. எ. 723).

32. மேலது, காட்சிப் பெருமிதம், 2 (வ. எ. 644).

33. மேலது, குஞ்சிதபாதப் பதிகம், 6 (வ.எ. 2576).

34. பெரியபுராணம், காரைக்காலம்மையார் புராணம், 60: 1–3.

35. சிவஞானபோதம், சூத். 9 மேற்கோள்.

36. திருநாவுக்கரசர் தேவாரம், 4262.

37. திருவாசகம், சிவபுராணம், 1.

38. திருவருட்பா, நமச்சிவாய சங்கீர்த்தன லகரி, 7 : (வ. எ. 820).

39. மேலது, அருள் விளக்க மாலை, 17.

40. ந. இரா. ஊரன், 'திருஅருட்பா – ஆறாம் திருமுறை', சத்திய தருமச்சாலை நூற்றாண்டு விழா, திரு அருட்பா நூற்றாண்டு விழா மலர் (1967), ப. 75.

## 4.2
## சமரச சன்மார்க்க சங்கம்

*முன்னுரை*

> *"அடிகளார் கருணையின் உருவகமாகத் திகழ்ந்தார். மக்கள் பொய்ந்நெறி புகுந்து, மெய்ந்நெறி அறியாது திகைத்து நரகில் தம்மைச் செலுத்தித் தம் இகவாழ்வைப் பயனற்றதாக ஆக்கும் செயல் அவரை உலுக்கி விட்டது. இது கருதி அவர் புலம்பினார். அருட்பெருஞ்சோதி ஆண்டவனிடம் இடையறாது முறையிட்டார். உருகிக் கரைந்து அழுது, 'சுத்த சன்மார்க்கம்' எனும் பொது நெறியில் மக்களைச் செலுத்துக என்று ஆண்டவன் இட்ட ஆணைவழி நின்றார். . .*
>
> *"இராமலிங்க வள்ளலார், தாம் மண்ணுலகில் பிறந்தமைக்கொரு காரணத்தை வேண்டுகோள் பதிகத்தில் கூறுகின்றார். உலகில் வாழ்வோர் தம் நெஞ்சில் தீய நினைவுகளை வளர்த்து வாழ்கின்றார்கள். அவ்வஞ்சகக் கருமையினை மறைப்பதற்காகப் புறத்தே பற்களைக் காட்டி நகைக்கின்றனர். இவர்கள் யாவரும் உண்மை அறிந்து திருந்த வேண்டும். திருத்தமாகிய நன்மையை இவர்கள் அடைதற்கு இவர்கள் யாவரும் **'சன்மார்க்க சங்கத்'**தை அடைதல் வேண்டும். சங்கத்தைச் சார்ந்து பரவாழ்வில் அடைதற்குரிய நல்லின்பத்தை இகவாழ்விலேயே பெறுதல் வேண்டும். இவ்வளவும் செய்தற்கே இந்த யுகத்தே இறைவன் என்னை இவ்வுலகிற்கு வருவித்தான் என்கிறார் அடிகளார்!"[1]*

என்பர் முத்து இராசாக் கண்ணனார். இத்தகைய 'சன்மார்க்க சங்கம்' குறித்து ஒரு சிறிது ஆராய்வதே இவ் இயலின் நோக்கம்.

அடிகளார், சென்னையில் வாழ்ந்த போதும், நகர வாழ்க்கையை

விரும்பவில்லை! எனவே அவர், பெரும்பாலும் சுற்றுப்புறச் சிற்றூர்களில் தங்கியிருப்பதையே விரும்பினார். பின்னர்த் தில்லையில் இருந்தபோதும், சில சூழ்நிலைகள் அவருக்கு ஒத்து வரவில்லை! அடிகளார்பால் பக்தி கொண்டிருந்த அன்பர்கள் பலரும் தத்தம் ஊரில் வந்து தங்குமாறு வேண்டிக் கொண்டதுண்டு. எனினும் அடிகளார், ஆழ்ந்து சிந்தித்து, 'வடலூர்' என்னும் சிற்றூரைத் தேர்ந்தெடுத்துக் கொண்டார். அங்கிருந்து பார்த்தால் தில்லையின் நான்கு கோபுரங்களும் காட்சியளிக்கும் என்பது முன்பே சுட்டப்பட்டது.

அடிகளார், கருணையின் வடிவம்; உலக மக்கள் மட்டுமல்லாது அனைத்து உயிர்களுமே இன்பம் பெற வேண்டுமெனும் கொள்கையாளர். தம் கொள்கையை நிறைவேற்றற் பொருட்டு, வடலூரில் சில அமைப்புக்களை உருவாக்கினார். அவற்றுள் முதலாவதாக விளங்குவது, '**சமரச சன்மார்க்க சங்கம்**'!

'சமரசம்' என்பதற்குத் திரு. வி. க., தரும் விளக்கம் உன்னத்தக்கது:

"சமரசம் என்பது நாடு, மொழி, சமயவெறி, சாதி முதலியவற்றில் கட்டுப்படாது கடந்து நிற்பது. எல்லா நாட்டார், எல்லா மொழியினர், எல்லாச் சமயத்தார், எல்லாச் சாதியாரிடத்திலும் புகுந்து நிற்பது சமரசஞானம். நாடு, மொழி, சமயம், சாதி முதலியவற்றைக் கொண்டு, சமரச உணர்வை இழப்பது அறியாமை. இப் பன்மைகளினூடே படர்ந்து நிற்கும் ஒருமையே சமரசம். அச் சமரசமே கடவுள் காட்சியை நல்கும்!"[2]

சத் + மார்க்கம் = சன்மார்க்கம். சத் – சத்தானது, என்றும் அழியாதது, உண்மையானது. மார்க்கம்–நல்வழி, நல்லாறு, நன்னெறி. தோற்றம், ஒடுக்கம் முதலிய மாறுதலின்றி என்றும் ஒரு பெற்றியாயிலங்குவது 'சத்' அல்லது 'உண்மை' என்பது. அச் சத்தென்னும் செம்பொருள் வழி நிற்க, மக்கள் கடமைப்படல் வேண்டும். மக்கள் வாழ்விற்குரிய வழி அஃதொன்றே!

> *"யாண்டும் நீக்கமற நிறைந்துள்ள சத்தென்னும் செம்பொருளுடன் இயற்கைவழித் தொடர்புகொண்டு வாழ்வோர், பிறவுயிரைத் தம்மைப் போலக் கருதும் ஒருநிலை எய்தல் ஒருதலை. அவர்க்கு உலகு உயிர்க்களெல்லாம் ஆண்டவன் உடலுறுப்புக்களாகத் தோன்றும். பிற உயிர்கட்குத் தீங்கு செய்தல், தம்முயிர்க்குத் தீங்கு செய்தலாக முடிவது அவர்க்கு நன்கு தெரியும். இப் பெருநிலையே '**சன்மார்க்க நிலை**' என்பது".*[3]

எனும் திரு. வி. க. கூற்று, சன்மார்க்கத்திற்குரிய நல்விளக்கமாகும்.

'சன்மார்க்கம்' என்ற சொல், அடிகளாருக்கு முன்பே, சைவ சாத்திர, தோத்திர நூல்களில் சொல்லப்பட்டுள்ளன.

*"சன்மார்க்க சாதனந்தான் ஞான ஞேயமாம்"*[4]

என்பது திருமந்திரம்.

*"சன்மார்க்கம் சகமார்க்கம் சற்புத்திரமார்க்கம்"*[5]

என்பது சிவஞான சித்தியார்.

சைவ சித்தாந்தம் கூறும் நெறிகள் நான்கு. அவை: சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன. இவற்றில் முதல் மூன்றின் பயனாக உண்டாவதே 'ஞானம்'.

*"விரும்பும் சரியை முதல் மெய்ஞ் ஞானம் நான்கும்*
*அரும்புமலர் காய்கனிபோல் அன்றோ பராபரமே!"*[6]

என்பது தாயுமானவர் வாக்கு. சரியை–அரும்பு; கிரியை – மலர்; யோகம் – காய்; ஞானம் – முதிர்ந்த கனி. சன்மார்க்க சாதனமே ஞான ஞேயம்!

அடிகளார், தம்மைச் சூழ்ந்துள்ள அடியார்களையெல்லாம் கூட்டி, 1865ஆம் ஆண்டில் அமைத்த இச்சங்கத்திற்கு முதலில், 'சமரச வேத சன்மார்க்க சங்கம்' என்று பெயர் வைத்தார். பின்னர் இப்பெயர், 'சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கம்' என்று அடிகளாரால் மாற்றப் பெற்றது. இதற்கான விளக்கங்களையும் அடிகளார் தந்துள்ளார்.

தம்மை இறைவன் இவ்வுலகத்தே வருவித்ததன் நோக்கத்தை அடிகளாரே கூறுவர்:

*"அகத்தே கறுத்துப் புறத்தே வெளுத்திருந்த*
*உலகர் அனைவரையும்*
*சகத்தே திருத்திச் சன்மார்க்க சங்கத்து*
*அடைவித்திட அவரும்*
*இகத்தே பரத்தைப் பெற்று மகிழ்ந்திடுதற்கு*
*என்றே எனை, இந்த*
*உகத்தே இறைவன் வருவிக்க உற்றேன்;*
*அருளைப் பெற்றேனே!"*[7]

*"மக்கள் அனைவரும் புறத்தே தூய்மையாகவே*
*காணப்பெறுகின்றனர். இப்புறத்தூய்மையின்*

*அடிப்படையாக அகத்தூய்மை கொஞ்சங்கூட இல்லாமைகண்டு இவர்களை முறையாகத் திருத்தி, இறந்த பின்னர் அடையும் பிறவாமைப் பேறு என்னும் ஒரு பெரும் பதம் என்பதை இவ்வுலகிலேயே கண்கூடாகப் பெற்றுய்ந்து மகிழ் வாழ்வு என்றென்றும் பெற வேண்டுவன செய்வதற்காகவே இறைவன் என்னைப் பிறப்பித்தருளினன்"*[8]

என்று உரைவிளக்கம் தருவர் அறிஞர்.

இச் சங்கத்தின் அமைப்பு, 'சாதி – சமயம் – மொழி – நாடு' என்னும் வேற்றுமைகளைக் கடந்து, உலகம் முழுதும் இயங்கத் தக்கதாக – உயிர்க்குலம் அனைத்திற்குமே பிரதிநிதித்துவம் உடையதாக விரிவடைய வேண்டும் என்பது அடிகளாரது விருப்பம். எனவே சங்கத் தலைமைப் பொறுப்பைத் தாம் ஏற்காமல், எல்லாம் வல்ல ஆண்டவனையே சங்கத் தலைவராக வைத்தார்!

*"செத்தவர்கள் எல்லாம் திரும்ப எழுந்துவரச்*
*சித்தம் வைத்துச் செய்கின்ற சித்தியனே! – சுத்தசிவ*
*சன்மார்க்க சங்கத் தலைவனே! நிற்போற்றும்*
*என்மார்க்கம் நின்மார்க்க மே!"*[9]

என்று அவர் கூறுவது கொண்டு இதனை அறியலாம். இச்சங்கத்தின் அமைப்புக் குறித்துத் திரு. வி. க., கூறுவது வருமாறு:

*"சமரச சன்மார்க்க சங்கத்தின் தலைவர் – எல்லாம் வல்ல கடவுள்; அமைச்சர் – இயற்கை அன்னையார்; நிருவாக அங்கத்தவர் : மெய்யறிவு பெற்று, அருள்நெறி ஓம்பிய அடியவர்; சந்தா–'தயை' என்னும் அருள்; இச் சந்தா செலுத்துவோர் அனைவரும் உறுப்பினராவர்!"*[10]

எனினும் சங்க உறுப்பினர்கள், அடிகளாரையே சங்கத் தலைவராகக் கொண்டு, அவரை வாழ்த்தியும் வணங்கியும் போற்றலாயினர்!

*"வள்ளலார் துவக்கிய சமரச சுத்த சன்மார்க்க சங்கம், ஆகமங்கள் – புராணங்கள் – சாத்திரங்கள் ஆகியவற்றிற்கு எதிராகப் போரிட முயலாமல், அவற்றிற்கு அப்பாற்பட்ட சமயம் கடந்த சமுதாய அமைப்பாக இயங்கியது"*[11]

என ம. பொ. சி., கூறுவது கொண்டு, சமய நல்லிணக்கச் சிந்தனைகளுக்கு

வித்திட்டவர் அடிகளார் எனத் தெளியலாம்.

சன்மார்க்க சங்கத்தின் கொள்கைகள் குறித்துப் பின்வருமாறு பட்டியலிட்டுக் காட்டுகின்றார் ம. பொ. சி.,

(1) உயிர்க்குலம் அனைத்துக்கும் தெய்வம் ஒன்றே என்று நம்புதல்;

(2) அந்தத் தெய்வத்தை விக்கிரக வடிவில் அல்லாமல் ஒளிவடிவில் வழிபடுவதே சிறந்தது என உணர்தல்;

(3) சாதி – சமய – வருண பேதங்களை அறவே விடுத்து, மொழி வழிப்பட்ட இனங்கள் – நாடுகளிடையே ஒற்றுமை கண்டு, ஆன்மநேய ஒருமைப்பாட்டினை உருவாக்கல்;

(4) உலகம் முழுவதையும் ஒன்றுபடுத்தும் ஆன்ம நேய ஒருமைப்பாட்டினுக்கேயன்றி, இந்தியநாட்டில் – மொழி வழி இனங்களிடையே சகோதர உணர்வை வளர்த்து, அவற்றிடையே உணர்ச்சி பூர்வமான ஒருமைப்பாடு காணல்;

(5) உடைமையாளர் – வறுமையாளர் (பணக்காரர் – ஏழை) என்ற பொருளாதார ஏற்றத்தாழ்வைத் தொலைத்து, எல்லோரும் வயிறார உண்டு, உடம்பார உடுத்து வாழும் சமதர்ம சமுதாயத்தைப் படைத்தல்;

(6) 'ஆண் பெண்' என்ற பால் வேற்றுமையின்றி, மக்கள் எல்லோருக்குமே கல்வி அளித்தல் – குறிப்பாக, ஞானமளிக்கக் கல்வியைப் பெண்களுக்கும் அளித்தல்;

(7) மரணமிலாப் பெருவாழ்வு வாழும் பேற்றினைப் பெறுவதற்கான வழிவகைகளை மக்களுக்கு, அவரவர் தாய்மொழியின் வாயிலாகவே – குறிப்பாக, தமிழருக்குத் தமிழின் வாயிலாகவே பயிற்றுவித்தல்;

(8) புலால் உண்ணுதல், தெய்வத்திற்கு உயிர்ப்பலிதருதல் ஆகிய தீய பழக்கவழக்கங்களையும், மற்ற மூட நம்பிக்கைகளையும் அடியோடு ஒழித்தல்;

(9) உயிர்கள் அனைத்தையும் சமமாகக் கருதி, அவற்றிடையே இரக்க உணர்வும், தயையும் காட்டத் தக்க சீவகாருண்ய ஒழுக்கத்தை மக்களுக்குப் போதித்தல்;

(10) கருணையில்லாத் துன்மார்க்கர் அரசியல் நடத்துவதை உலகெங்கணுமிருந்து ஒழித்து, அருள்நெறி வழிப்பட்ட சுத்த சன்மார்க்கர் ஆட்சி தோன்றச் செய்தல். [12]

சன்மார்க்க சங்கத்தைக் குறித்து அடிகளார் பெருமிதம் கொண்டிருந்தார் என்பதற்குப் பின்வரும் அருட்பா சான்று பகரும்:

*"கொள்ளைஎன இன்பம் கொடுத்தாய்! நினது செல்வப்*
*பிள்ளைஎன எற்குப் பெயரிட்டாய்! – தெள்ளமுதம்*
*தந்தாய்! சமரசசன் மார்க்கசங்கத் தே,வைத்தாய்!*
*எந்தாய் கருணை இது!"* [13]

"இச் சன்மார்க்க சங்கத்தில் சேர்ந்து உய்திபெறுவீராக!" என மக்களைக் கூவி அழைத்து, அடிகளார் பாடிய பாடல்கள் பலப்பல! அவற்றுள் ஒன்று:

*"மார்க்கமெலாம் ஒன்றாகும் மாநிலத்தீர்! வாய்மையது!*
*தூக்கமெலாம் நீக்கித் துணிந்துளத்தே – ஏக்கம்விட்டுச்*
*சன்மார்க்க சங்கத்தைச் சார்ந்திடுமின்! சத்தியம், நீர்*
*நன்மார்க்கம் சேர்வீர்இந் நாள்!"* [14]

இதன்கண் வரும் 'மார்க்கமெல்லாம் ஒன்றாகும்!' என்று அடிகளார் கூறுவது, **சமய நல்லிணக்கத்தைக் காட்டுவதாம்!**

சன்மார்க்க சங்கத்தவர்களன்றி ஏனையோர், மரணத்தைத் தடுக்க இயலாது என்கின்றார் அடிகளார்

*"மற்றறிவோம் எனச்சிறிது தாழ்த்திருப்பீர் ஆனால்*
*மரணமெனும் பெரும்பாவி வந்திடுமே அந்தோ!*
*சற்றும்அதை நும்மாலே தடுக்கமுடி யாதே!*
*சமரசசன் மார்க்கசங்கத் தவர்களல் லால்,அதனை*

*எற்றி நின்று தடுக்கவல்லார் எவ்வுலகில் எவரும்*
*இல்லை கண்டீர்! சத்தியமீதென் மொழிகொண் டுலகீர்*
*பற்றியபற் றனைத்தினையும் பற்றற விட்(டு) அருள்அம்*
*பலப்பற்றே பற்றுமினோ எற்றும் இறவீரே!"* [15]

என்பது அடிகள் வாக்கு.

சன்மார்க்கத்தைப் பற்றிய குறிப்புக்கள், திருவருட்பாவில் மிகுந்து காணப்படுகின்றன. இந்த மார்க்கம் ஒன்றே, மக்களை உய்விப்பது; இம்மார்க்கத்திலே கலகம் இல்லை; வெறுப்புப் பிறத்தல் இல்லை; பன்மை செழிப்பதில்லை; தீமை தேங்குவதில்லை; தீவினையாகிய பிரிவினை தோன்றுவதில்லை. எனவேதான், அடிகளாரும்,

*"பித்தெலாம் உடைய உலகர்தம் கலகப்*
*பிதற்றெலாம் என்றொழிந்திடுமோ?*
*சத்தெலாம் ஒன்றென் றுணர்ந்த சன்மார்க்க*
*சங்கம் என்றோங்குமோ?"* [16]

என்று வள்ளலார் நெஞ்சுருகி ஏங்குகின்றார்.

அடிகளார் முழங்கிய முழக்கம்:

*"அருட் பெருஞ் சோதி தனிப்பெருங் கருணை!"*

இத் தொடரில், முக்கியமாகக் காணத் தகுவன மூன்று; அவை : அருள்; சோதி; கருணை என்பன

சைவத் திருமுறைகளிலும், சைவசித்தாந்த சாத்திர நூல்களிலும் பெரிதும் பேசப்படுவது 'அருள்' ஆகும். இதனைத் 'திருவருள்' என்றும் கூறுவர். பொருளைச் 'சிவன்' என்றும்; அவன்தன் குணமாயுள்ள சக்தியை 'அம்மை' என்றும் உருவகப்படுத்திக் கூறுவது மரபு.

*"அருள் உண்டாம் ஈசற்கு அது சத்தியன்றே'*
*அருளும் அவனன்றி யில்லை, அருளின்றேல் அவனில்லை!"* [17]

என்பது சிவஞானபோத உதாரணவெண்பா.

*"அருளே உலகெலாம் ஆள்விப்பது"* [18]

என்பர் காரைக்காலம்மையார்.

*"அவன் அருளாலே அவன்தாள் வணங்கி"* [19]

என்பது மணிவாசகர் அருள் வாக்கு.

இதனை உட்கொண்டே அடிகளாரும், 'அருள்' என்னும் அருஞ்சொல்லை எடுத்தாண்டுள்ளார் எனலாம். இதனாற்றான், இறைவனைத் துதிக்க வந்தபோதெல்லாம்,

*"அருள் பழுத்து ஓங்கும் கற்பகத் தருவே!*
*அருள் மருந்து ஒளிர்குணக் குன்றே!*
*அருள் எனும் அமுதம் தரும்ஒரு கடலே!*
*அருள்கிர ணம்,கொளும் சுடரே!*
*அருள்ஒளி வீசும் அரும்பெறல் மணியே!*
*அருள்சுவை கனிந்த, செம் பாகே!*

*அருள்மணம் வீசும் ஒருதனி மலரே!*
*அருள்மய மாம், பர சிவமே!*"[20]

என்று போற்றுவாராயினர்! அன்றியும், 'அருட்பெருஞ்சோதி அட்டகம்' என்ற தலைப்பில் எட்டுப் பாடல்களும் பாடியுள்ளார். 'அருளை'ப் பற்றி அடிகளார் பாடிய பாக்கள் பலவுள!

அடுத்து, அடிகளார் திருவாய் மலர்ந்தது, 'சோதி' என்பது. இறைவன், சோதிவடிவானவன்.

*"கற்பனை கடந்த சோதி கருணையே உருவமாகி*
*அற்புதக் கோல நீடி*"[21]

*"ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும் சோதி!*"[22]

என்பன அருளாளர் வாக்குகள்! திருவண்ணாமலையில் ஈசன், சோதிவடிவாகக் காட்சி கொடுக்கின்றான். இச் 'சோதி' குறித்துத் திரு. வி. க., கூறுவது இவண் எண்ணத்தகும்;

> *"போத நிலையில் (போதம் – அறிவு) சிவம், சோதி வடிவாகத் தோன்றும். அச்சோதி தரிசனம் பெறப்பெற உயிர்க்கு இன்ப உணர்வு பெருகிக் கொண்டே போகும். அப்போதத்தில் நிலைத்து நிற்போர், கீழ்நிலைகளில் வீழ்ந்து இடர்ப்படுதல் அருமை. ஆண்டிருந்து அவர் மேலே இவர்ந்தே செல்வர். அங்கேதான் காந்தம் இரும்பை ஈர்ப்பதுபோலச் சீவனைச் சிவன் ஈர்த்தல் நிகழும். சீவன், சிவனைச் சிக்கெனப் பிடித்துக் கொள்வான். சிவ நாட்டமின்றி வேறுநாட்டம் சீவனுக்குறாது. 'சோதியே சுடரே சூழொளி விளக்கே' என்று ஆண்டவனை விளித்துச் 'சிக்கெனப் பிடித்தேன், எங்கெழுந்து அருளுவதினியே' என்று மாணிக்கவாசகனார் அருளியது ஈண்டுப் பெரிதும் உன்னற் பாலது!*"[23]

இத்தகு அருட்சோதியைப் பற்றியும் அதனால் உண்டாகும் இன்பத்தைப் பற்றியும் அடிகளார் பாடிய பாக்கள் பலப்பல!

*"நீயே வலிந்திங்கு என்னை யாண்ட*
*நீதிச் சோதியே!*

*நின்னைப் பாட என்னை வளர்க்கும்*
*நிமலச் **சோதியே!***
*தாயே எனவந் (து) என்னைக் காத்த*
*தருமச் **சோதியே!***
*தன்மை பிறரால் அரிதற்(கு) அரிய*
*தலைமைச் **சோதியே!**''*[24]

என்பது அப்பாடல்களில் ஒன்று!

இனி, அடிகளார் ஆண்ட சொல் '**கருணை**' என்பது. இறைவன், 'அருட்பெருஞ் சோதி' யாக இருந்தாலும், அவன் 'கருணை'யே வடிவமாகக் கொண்டவனுமாவான். அவன், கருணையாளனாக இருப்பதனால்தான், ஆன்மங்கள் பேரின்பத்தைப் பெறுகின்றன. அவனைப் 'பெருஞ்சோதி' என்று எண்ணும் போது, 'நமக்கு அரியவன் போலும்' என்ற எண்ணம் தோன்றுதல் இயல்பே. ஆனால் 'அருட்பெருஞ்சோதி' என்று நினைக்கும் போது,'நமக்கும் அருள் செய்வான்' என்ற நம்பிக்கை தோன்றும்.

> *"இறைவன், காண்டற்கரியனாய், ஆழ்ந்து அகன்ற நுண்ணியனாய் உள்ளவனே எனினும், தன்னை மெய்யன்போடு வழிபடும் அடியவர்கள் – ஏழைகளாக இருந்தாலும், மிகமிகப் பழமையான குடிசைகளிலே வாழ்பவர்களானாலும், அவ்விடத்தே தன் சக்தியோடு எழுந்தருளுவான்"*

எனும் மணிவாசகர் திருவாக்கு இவண் ஒப்புநோக்கத்தகும்.

*"முந்திய முதல்நடு இறுதியும் ஆனாய்!*
*மூவர்மற் றறிகிலர் யாவர்மற் றறிவார்?*
*பந்தணை விரலியும் நீயும்நின் அடியார்*
*பழங்குடில்தொறும் எழுந்தருளிய பரனே!''*[25]

என்பது திருவாசகம். இறைவனின் கருணையைக் காட்டும் பாடல் இது.

அடிகளாரும்,

*"**கருணையே வடிவாய்ப்** பிறர்களுக் (கு) அடுத்த*
*கடுந்துயர் அச்சம், ஆ திகளைத்*
*தருண, நின் **அருளால்** தவிர்த் (து) அவர்க்(கு) இன்பம்*
*தரவும், வன் புலை, கொலை இரண்டும்*

*ஒருவிய நெறியில் உலகெலாம் நடக்க*
*உருற்றவும் அம்பலந் தனிலே*
*மருவிய புகழை வழுத்தவும் நின்னை*
*வாழ்த்தவும் இச்சைகாண் எந்தாய்!''*[26]

என இறைவனின் கருணைத் திறத்தைப் புகழ்ந்து இசைப்பர்.

'சோதி'யைப் 'பெருஞ்சோதி' என்றும்; 'கருணை'யைத் 'தனிப்பெருங்கருணை' என்றும் அடைமொழி கொடுத்துக் கூறிய நுட்பமும் எண்ணத்தக்கது.

*"சோதி, கருணையை வழங்குவது; பெருஞ்சோதி, பெருங்கருணையைப் புரியது; அருட்பெருஞ்சோதி, தனிப்பெருங்கருணையைப் பொழிவது!''*[27]

என்பர் கி. வா. ஜகந்நாதன்.

அடிகளார், தாம் அமைத்த இச் 'சமரச சன்மார்க்கத்'திற்கெனக் 'கொடி' ஒன்றும் உருவாக்கினார். அது, மேற்புறம் மஞ்சள் வண்ணமும், அடிப்புறம் வெள்ளை வண்ணமும் கொண்டதாக இருந்தது.

இச் 'சமரச சன்மார்க்க நெறி' யானது, நாடு – இன–சாதி–சமய–மத வேற்றுமைகளைக் கடந்தது; உயிர்க்குலம் அனைத்தையும் ஒன்றுபடுத்தும் ஒருமைப்பாட்டு நெறியாக விளங்குவது.

*"ஒத்தாரும் உயர்ந்தாரும் தாழ்ந்தாரும் எவரும்*
*ஒருமையுளர் ஆகி, உலகியல்நடத்த வேண்டும்!''*[28]

என்பது அடிகளார் வாக்கு.

## *முடிவுரை*

''சமரச சன்மார்க்க சங்கத்'தின் வாயிலாக அடிகளார் முழக்கிய ஒலி,

*"அருட்பெருஞ் சோதி தனிப்பெருங் கருணை''*

என்பதாம். இது குறித்துத் தவத்திரு. குன்றக்குடி அடிகளார் கூறுவது இவண் குறிக்கத்தகும்.

*"இஃது ஓர் மறைமொழி மந்திரம் கூட!சோதி–பெரு நெருப்பு. நிலம்,நீர்,தீ,வளி,வான் என்ற ஐம்பூதங்களில், நெருப்பே (தீ) அழுக்கோடு கலந்தாலும், தான் அந்த அழுக்காகாமல், அந்த அழுக்கினைத் தூய்மைப் படுத்தித் தானும் தூய்மையாக விளங்கும். அதுபோல,*

*இறைவன் எள்ளும் எண்ணெய்யும் போல், யாண்டும் குடியிருக்கின்றான். எனினும் அவன், தூய வடிவினன். ஆக்கம் தர வல்லவன். நம்மைச் சிந்தனை செய்யத் தூண்டுகிறது, மறை மொழியின் முதல் தொடர். இறைவன் கருணை வடிவினன்!... வள்ளல் பெருமான், மனிதர்களின் அக உலகிலும், புற உலகிலும் புரட்சி செய்தார்!... அவர்களது புரட்சியால்தான், தமிழகம் சாதிக் கொடுமையினின்றும் தப்பியது! பசித்தவருக்குச் சோறிடும் பண்பாட்டைப் பெற்றது!"*[29]

இன்று, தமிழகத்தின் மூலைமுடுக்கெல்லாம் ஒலிப்பது, வள்ளலார் வாய்மலர்ந்தருளிய,

*"அருட்பெருஞ்சோதி தனிப்பெருங் கருணை*
*தனிப்பெருங் கருணை அருட்பெருஞ்சோதி!"*

என்பதேயாம்!

## *முடிபுகள்*

இவ் இயல் வாயிலாக அறியத் தகுவன:

1. இராமலிங்க அடிகளார், கருணையின் உருவமாகத் திகழ்ந்தவர்;
2. 'சமரச சன்மார்க்க சங்கம்' அமைத்து அதன்மூலம், பரவாழ்வில் அடைதற்குரிய நல்லின்பத்தை இகவாழ்விலேயே பெறவேண்டும் என்பதற்காகவே இறைவன் தம்மை இவ்வுலகிற்கு வருவித்தான் என்றவர் அடிகளார்;
3. தோற்றம், ஒடுக்கம் முதலிய மாறுதல்களின்றி என்றும் ஒருபெற்றியாய் விளங்குவதே 'சன்மார்க்கம்'; மக்கள் வாழ்விற்கு உரிய நெறியும் இதுவே;
4. 'உலக மக்கள் மட்டுமன்றி, அனைத்துயிர்களும் இன்பமடைய வேண்டும்' எனும் உயரிய நோக்கத்தால் அடிகளாரால் நிறுவப்பட்டதே 'சமரச சன்மார்க்க சங்கம்';
5. நாடு, மொழி, சமயவெறி, சாதிவெறி ஆகியவற்றைக் கடந்து நிற்பது 'சமரசம்';
6. அடிகளார், தம் அடியார்களைக் கூட்டி, 1865ஆம் ஆண்டில், அமைத்த இச் சங்கத்திற்குத் தொடக்கத்தில் வைத்த பெயர், 'சமரச வேத சன்மார்க்க சங்கம்' என்பதாகும்;

7. இச் சங்கத் தலைமைப் பொறுப்பைத் தாம் ஏற்காமல், 'எல்லாம் வல்ல ஆண்டவரே இச் சங்கத் தலைவர்' என்று அறிவித்தவர் அடிகளார்;

8. இச்சங்கம், 'சமயம் கடந்த சமுதாய அமைப்பா'க இயங்கியது;

9. "உயிர்க்குலம் அனைத்திற்கும் தெய்வம் ஒன்றே என்று எண்ணுதல்; அந்தத் தெய்வத்தை ஒளி வடிவில் வணங்குதல்; சாதி – சமய – வருண பேதங்களை அடியோடு அகற்றி, ஆன்ம நேய ஒருமைப்பாட்டுணர்வை வளர்த்தல்; மரணமில்லாப் பெருவாழ்வு வாழும் வகை பெறுதற்குப் பயிற்சி பெறுதல்; 'புலால் உண்ணாமை, உயிர்க்கொலை செய்யாமை' எனும் அறங்களைக் கடைப்பிடித்து ஒழுகுதல்; உயிர்கள் அனைத்தையும் சமமாகக் கருதும் 'சீவகாருணிய ஒழுக்கத்'தைக் கடைப்பிடித்தல்; முதலான கொள்கைகள் கொண்டு திகழ்வது இச் 'சன்மார்க்க சங்கம்';

10. அடிகளார் முழங்கிய முழக்கம்; 'அருட்பெருஞ் சோதி, தனிப் பெருங் கருணை' என்பது;

11. இம் முழக்கம் பல்வேறு தத்துவங்களை உள்ளடக்கியது;

12. இவ்வகையில் அடிகளார், சமயப் புரட்சியாளராகவும், சமுதாயப் புரட்சியாளராகவும் திகழ்ந்தார்.

### *சான்றெண் விளக்கம்*

1. முத்து. இராசாக்கண்ணனார், 'இகவாழ்வும் இராமலிங்கரும்', *ச.க.ச.ச.* சங்கம் நூற்றாண்டு விழா மலர், ப. 27.
2. திரு. வி. க., இராமலிங்க சுவாமிகள் திருவுள்ளம், ப. 45.
3. மேலது, ப. 64.
4. திருமந்திரம், சன்மார்க்கம் 7 (வ. எ. 1483).
5. சிவஞான சித்தியார், 270.
6. தாயுமான அடிகள், பராபரக்கண்ணி, 157.
7. திருவருட்பா, வேண்டுகோள், 9.(ப.292)
8. குங்கிலியம், பழ.சண்முகனார், திருவுருவ அருளாளத் தமிழ்மகனார்,ப.1
9. திருவருட்பா, சமரச நிலை, 6. (ப.232).
10. திரு.வி.க., மு.கா.நூ.ப.10

11 .ம.பொ.சி., வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு, ப.146.

12. மேலது, பக்.149–150.

13. திருவருட்பா, ஆனந்தானுபவம் 4. (ப.228).

14. மேலது, சுத்த சிவநிலை,42 (ப.341).

15. மேலது, ஞானசரியை,24 (ப.346).

16. மேலது, ஆன்மதரிசனம்,9 (ப.120).

17. சிவஞானபோதம், சூத்.5 உதாரண வெண்பா.

18. காரைக்காலம்மையார், அற்புதத்திருவந்தாதி, 9:1.

19. திருவாசகம், சிவபுராணம், 18.

20. திருவருட்பா, திருப்புகழ்ச்சி,3 ( வ.எ.2798).

21. பெரியபுராணம், தில்லைவாழ் அந்தணர் புராணம், 2:1–2.

22. திருவாசகம், திருவெம்பாவை, 1:1.

23. திரு.வி.க., மு.கா.நூ. ப.30.

24. திருவருட்பா. ஆதாரம்; திரு. வி. க., மு. கா. நூ., ப. 31.

25. திருவாசகம், திருப்பள்ளியெழுச்சி 8:1–2.

26. திருவருட்பா, பிள்ளைச் சிறுவிண்ணப்பம்,7.

27. கி.வா. ஜகந்நாதன், 'அருட்பெருஞ்சோதி', ச.சு.ச.ச.சங்க நூற்றாண்டு விழாமலர், ப. (?).

28. திருவருட்பா, ஆதாரம்; ம. பொ. சி., மு. கா. நூ., ப. 145.

29. குன்றக்குடி அடிகளார், 'வள்ளல் பெருமானின் புரட்சி', மு.கா.மலர், ப.85.

# 4.3
# சத்திய தருமச் சாலை

## *முன்னுரை*

> *"இராமலிங்கருடைய ஆன்மநேய ஒருமைப்பாடும், சாதி – சமய – ஆசார சங்கற்ப விகற்பங்களைக் கடந்த ஆன்மீக அநுபவ விளக்கமும், உலகம் முழுவதும் வேறுபாடு இல்லாமல் உணர்ந்து போற்றக்கூடியவையே! . . . சீர்திருத்தக் கருத்துக்களைத் தாமே புரட்சிகரமான முறையில் கூறி, அவற்றை ஆன்மீக வாழ்வென்னும் அஸ்திவாரத்தின் மேல் அமைத்து விட்டுச் சென்றுவிட்டார். சமயத்துறையிலும், சமுதாயத் துறையிலுமாக ஓர் சர்வோதயம், சமரச சன்மார்க்க சங்கமாகப் பத்தொன்பதாம் நூற்றாண்டிலேயே தோன்றிவிட்டதென்று சொல்லலாம்"*[1]

எனச் 'சன்மார்க்க சங்கத்'தின் சிறப்பை எடுத்துக் கூறுவார் நா. மகாலிங்கம்.

அடிகளார் நிகழ்த்திய சமயப் புரட்சிக்கு இன்றியமையாக் கருவிகளாக விளங்கியவை நான்கு. அவை: சமரச சன்மார்க்க சங்கம்; சத்திய தருமச்சாலை; சத்திய ஞானசபை, சித்திவளாகம் என்பன. இவற்றில், பின்னைய மூன்றும், சமரச சன்மார்க்க சங்கத்தின் நிழலிலே தோன்றியவை எனலாம். இம்மூன்றனுள், 'சத்திய தருமச் சாலை' குறித்து ஒரு சிறிது ஆராய்வதே இவ் இயலின் நோக்கம்.

## *முகத்திலே துயரச் சாயல்*

அடிகளாரின் தோற்றத்தை வருணித்த அவரின் தலைமைச் சீடர், முன்னர்க் குறிப்பிட்டது போல, தொழுவூர் வேலாயுத முதலியார்,

> *"முகத்தில் சதா சற்று விசனக் குறி*
> *காணப்பட்டிருந்தது!"*[2]

என்று குறிப்பிடுவர். 'விசனக்குறி' எதனால் என்று வினா எழுப்பினால் மக்களின் வறுமைத்துன்பம் கண்டு வருந்திய வருத்தத்தினால் என்ற விடை கிடைக்கும்.

*பசித்துன்பம்*

*"இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து*
*கெடுக உலகியற்றி யான்"* [3]

என்பர் வள்ளுவர்.

*"இவ்வுலகத்தைப் படைத்தவன், இவ்வுலகில் வாழும் சிலர்க்கு, முயன்று உயிர் வாழ வழியின்றி, இரந்துதான் உயிர்வாழ வேண்டும் என்று விதித்திருப்பானானால், அக் கொடியவனும் அச்சிலரைப் போல எங்கும் அலைந்து கெடுவானாக!"* [4]

என்று கூறுவாரெனில், பிச்சை எடுப்பதன் கொடுமை ஒருவாறு புரியும். 'பசி' இல்லாத உயிர்கள், உலகில் யாண்டும் இல்லை.

ஆனால், 'பசி' வந்த போது உணவருந்தி அப்பசியைப் போக்க முடியாத நிலை வருமானால் அதனைவிடக் கொடியது வேறொன்று மில்லை.

செல்வம் பெற்றவர், அச்செல்வத்தைப் பாதுகாப்பாக வைத்தற்குரிய இடம் எது என வள்ளுவரிடம் கேட்டால் அவர் அளிக்கும் விடை இது:

*"அற்றார் அழிபசி தீர்த்தல் அஃ(து) ஒருவன்*
*பெற்றான் பொருள்வைப் புழி"* [5]

*"பொருள் பெற்றவன் ஒருவன், வறியவர்களது கொடிய பசித் துன்பத்தை அறம் கருதித் தீர்க்க வேண்டும்; அவ் அறமே, அப் பொருளைத் தனக்குப் பின்னர் உதவுதற்கெனப் பாதுகாப்பாக வைக்கும் இடம்"* [6]

என்பது இதன் பொருள்.

இதற்காகவென்றே வள்ளுவர் 'ஈகை' எனும் ஓர் அதிகாரமே வகுத்துள்ளார் எனலாம்.

பசித் துன்பம் வந்தால் என்னென்ன நேரும் என்பதைச் சீத்தலைச் சாத்தனார், தம் மணிமேகலை நூலில் ஒரு பட்டியலிட்டே காட்டுகின்றார்:

*"குடிப்பிறப்பு அழிக்கும் விழுப்பம் கொல்லும்*
*பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉம்*
*நாண்அணி களையும், மாண் எழில் சிதைக்கும்;*
*பூண்முலை மாதரொடு புறங்கடை நிறுத்தும்*
*பசிப்பிணி என்னும் பாவி . . ."* [7]

தமது குடிப்பிறப்பின் பெருமையை அழித்துவிடும்; தாம் பெற்ற சிறப்பெல்லாம் நீக்கிவிடும்; கல்வி என்னும் மிதவையை, விடச்செய்யும்; 'நாணம்' முதலான அணிகலன்களைச் சிதைக்கும்; அனைத்திற்கு மேலாகத் தம் மனைவியோடு அடுத்தவர் தலைவாசலில் நிற்கச் செய்யும் – இத்தகைய கொடுமை செய்வது பசிப்பிணி!

இத்தகைய கொடும்பசி போக்குதற்கென்றே பிறந்தவள் மணிமேகலை, 'அமுதசுரபி' என்னும் அட்சய பாத்திரம் ஏந்திக் "காணார், கேளார், கால்முடப் பட்டோர், பேணுநர் இல்லோர்" முதலான பலரையும் கூவி அழைத்து அவர்களின் பசி போக்கிய அறச்செல்வி அவள்!

## *அடிகளார் அருள் உள்ளம்*

ஒரு 'பயிர்' வாடிக் கிடந்ததைக் கண்டாற்கூட நெஞ்சு பொறுக்காத அருள் உள்ளம் உடையவர் அடிகளார்.

*"வாடிய பயிரைக் கண்டபோ தெல்லாம்*
*வாடினேன் . . ."*

என்று கூறுபவர், பசியினால் வாடுவோரைக் கண்டு வாளாவிருப்பரோ?

*". . . . பசியினால் இளைத்தே*
*வீடுதோறு இரந்தும் பசியறாது அயர்ந்த*
*வெற்றரைக் கண்டுஉளம் பதைத்தேன்!"*[8]

பசியினால் வீடுதோறும் சென்று பிச்சை எடுப்போரைக் கண்டு பதைபதைப்பவர் அடிகளார்.

மனித சமுதாயம், 'உடையார் –வறியவர்; செல்வர் – ஏழை' என்று பிளவுபட்டிருப்பதைக் கண்ணுற்று, அந்தப் பிளவு காரணமாக வறியவர், பசியினால் வருந்துவதைக் கண்ணாரக் கண்டு அடிகளார், துடிப்பதையும் காணமுடிகின்றது.

*"நீடிய பிணியால் வருந்துகின் றோர்,என்*
*நேர்உறக் கண்டுஉளம் துடித்தேன்!*
*ஈடில்,மா னிகளாய், ஏழைக ளாய்,நெஞ்சு*
*இளைத்தவர் தமைக்கண்டே இளைத்தேன்!"*[9]

என்கின்றார்.

*"உள்ளலேன்; உடையார் உண்ணவும்; வறியார்*
*உறு பசி உழந்து,வெந் துயரால்*

*வள்ளலே! நெஞ்சம் வருந்தவும் படுமோ?*

*என்னலேன்; உள்ளம் எரிகின்றது; உடம்பும்*
*எரிகின்றது! என்செய்வேன் அந்தோ!*
*கொள்ளலேன் உணவும்; தரிக்கிலேன்! இந்தக்*
*குறையெலாம் தவிர்த்தருள் எந்தாய்!"* [10]

என ஆண்டவனிடமே மன்றாடுகின்றார் அடிகளார்!

'பட்டினி', பாவத்தின் சின்னமாகக் கருதப்பட்டது, பட்டினி கிடப்பவனைப் பார்த்து, ஈவு இரக்கமில்லாமல், "அது, அவனது தலைவிதி; நாம் என்ன செய்ய முடியும்?" என்று கூறிக் கொண்டிருந்த காலம்! இத்தகு நிலையை எண்ணியே அடிகளார், "உள்ளம் எரிகின்றது; உடம்பும் எரிகின்றது!" என்றார்.

*"பசி எனும் ஓர் பெரும்பாவிப் பயலே!"* [11]

*"பசியோடே வந்தாரைப் பார்க்கவும் நேரீர்!"* [12]

*"பட்டினி கிடப்பாரைப் பார்க்கவும் நேரீர்!*
*பழங்கஞ்சி ஆயினும் வழங்கவும் நினையீர்!"* [13]

எனப் பசித்துவந்தோரைப் பாரா முகமாக இருக்கும் வன்னெஞ்சர்களைப் பார்த்துக் கேட்கின்றார் அடிகளார்.

**சீவகாருணிய ஒழுக்கமே கடவுள் வழிபாடு** என்பது அடிகளாரின் முடிந்த முடிபான கொள்கை. "பசியால் வருந்துவோரின் பசியைப் போக்குதலே சீவகாருணிய ஒழுக்கம்" என்பர் அவர். உயிரின் மீதுள்ள இரக்கத்தால் செய்வதாதலின் அது, 'சீவகாருணிய ஒழுக்கம்' எனப்பட்டது. இவ் ஒழுக்கம் குறித்து அடிகளாரே ஒருநூல் எழுதியுள்ளார். அந்நூல், முழுமையும் பசிக் கொடுமையையும், அது போக்கலின் சிறப்பையும் விரித்துக் கூறுவதேயாகும். பசி தவிர்க்கும் அறமாகிய 'சீவகாருணிய ஒழுக்கத்'தைத் தமது சொல்லாலும் எழுத்தாலும் வளர்த்த அடிகளார், செயலாலும் அதனை வளர்க்க எண்ணியே 'சத்திய தருமச் சாலை'யை நிறுவினார்.

*"செயற்கரிய செய்வார் பெரியர்"* [14]

எனும் குறட்பா, அடிகளாருக்கு மிகமிகப் பொருந்தும்!

அற்றார் அழிபசி தீர்த்தலாகிய இச் சீவகாருணிய ஒழுக்கத்தை நடைமுறைப் படுத்தற்பொருட்டுச் 'சத்திய தருமச் சாலை'யை நிறுவும் முயற்சியை, அடிகளார், 'சன்மார்க்க சங்கம்' நிறுவிய இரண்டு ஆண்டுகளுக்குப் பின், அதாவது கி. பி.

1867இல், மேற்கொண்டார். அப்போது அடிகளார், வாழ்ந்து வந்த இடம் - கருங்குழியாகும். எனினும் 'தருமச் சாலை'யை அமைப்பதற்கு உரிய இடமாக, வடலூருக்கு அடுத்து, அதன் வடபுறம் உள்ள பெரிய வெளிதான் உகந்தது என முடிவு செய்தார். அவ்விடம், இரண்டு பெரிய நெடுஞ்சாலைகள் கூடுமிடமாகும். ஆதலின் அவ்வழியே வருவார் போவார்க்கெல்லாம் தருமச்சாலை பயன்படும் என்ற அருட்குணமே காரணம்.

அடிகளாரின் அருஞ்செயல் அறிந்தனர் அவ் வெளியிடங்களுக்குரிய உரிமையாளர்கள்; அவர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து, 40பேர் கையெழுத்திட்டு, அந்த இடத்தை அடிகளாருக்கு இனாமாக எழுதிக் கொடுத்தனர். அவ்வாறு அவர்கள் எழுதிக் கொடுத்த நாள்: 2-2-1867. அதாவது அட்சய வருடம், தைத்திங்கள் 22ஆம் நாளாகும். ஆனால் 'சத்திய தருமச் சாலை' தொடங்கப்பட்ட நாள்: 23-5-1867 ஆகும். அடிகளார், தமது பாடல் ஒன்றில், 'சமரச வேத சன்மார்க்க சங்கச் சாலை' என்று குறிப்பிட்டுள்ளார். அப்பாடல் வருமாறு :

> *"வேலை அப்பா படைவேலை அப்பா பல வெய்யிலுக்கோர்*
> *சோலை அப்பா பரஞ்சோதி அப்பா சடைத்துன்று கொன்றை*
> *மாலை அப்பா நற் 'சமரச வேத சன்மார்க்க சங்கச்*
> *சாலை' அப்பா எனைத் தந்த அப்பா வந்து தாங்கிக் கொள்ளே!"* [5]

எனவே சங்கத்தின் பெயரை ஒட்டியே தருமச்சாலைக்கும் பெயரிட்டார் அடிகளார் என்பது விளங்கும்.

தொடக்கத்தில், இத் தருமச்சாலை, புல்லால் கூரை வேயப்பட்ட மண் சுவர்க்கட்டடமாகவே கட்டப்பட்டிருந்தது. அவ்விடத்தில்தான், அரும்பசி நீக்கும் சீவகாருணிய ஒழுக்கப் பேரறச்செயல் தொடங்கப்பட்டது. அதன்பிறகு, செங்கற்கட்டிடங்களுக்கும் கிணறு முதலிய நீர் நிலைகளுக்கும் அடிப்படை போடப்பட்டது. சன்மார்க்க சங்கத்தார், இந்நிகழ்ச்சிகளைப் பெருவிழாவாகக் கொண்டாடினர்.

இதுகுறித்து ந. ரா. ஊரன் கூறுவது வருமாறு :

> *"சாலையின் நிலையான (நிரந்தரமான) செங்கற்கட்டிடங்களுக்கு அடிப்படை (அஸ்திவாரம்) போடுதல், ஒரு பக்கமும், முன்னரே கட்டி முடிக்கப்பட்டிருந்த தற்காலிகச் சிறுகூரைக் கட்டிடத்தில் அன்னமளிக்கத் தொடங்குதல் பிறிதொரு பக்கமும் நிகழ, இங்ஙனம் தருமச்சாலையின் கால்கோள் விழாவும்,*

*திறப்பு விழாவும், ஒரே நாளில் ஒருங்கே கொண்டாடப்பட்டதெனின், இவற்றையெல்லாம் செய்த அடிகளாரின் உலகியல் திறத்தை என்னென்பது? அடிகளார் உலகியலில் மிகவும் வல்லவர் என்பது அவர்களது கடிதங்களாலும், கட்டளைகளாலும் அவர்களுக்கு அன்பர்கள் எழுதிய கடிதங்களாலும் நன்கறியக் கிடக்கிறது. தமக்கு அருளியலோடு உலகியலையும் இறைவன் உணர்த்தினான் எனத் தம் பாடல்களுட் பலவிடத்து அடிகள் கூறுவதை நோக்குக. அன்றி அடிகள் எழுதத் திட்டமிட்டிருந்த நூல்களுள் உலகியல் விளக்கம் என்பதும் ஒன்றென்பதை உன்னுக. அடிகளின் உலகியல் வல்லமையைக் காட்டத் தருமச்சாலைத் தொடக்க விழா ஒன்றே போதும்!"* [16]

'தருமச்சாலை தொடக்கவிழா' வை முன்னிட்டு அன்பர் பலர்க்கும் அழைப்பிதழ்களும் வேண்டுகோள் மடல்களும் அனுப்பப்பட்டன. அவற்றில் ஒன்றைக் கூர்ந்து நோக்குங்கால், பசித்துன்பம் எத்துணைக் கொடியது என்பதும், அதனைப் போக்குவது ஒவ்வொருவரின் கடமை என்பதும் அறிவுறுத்தப்பட்டுள்ளன தெரியவரும்.

*"உலக முழுவதும் ஆளுகின்ற சக்கரவர்த்தியாகிய அரசனுக்கும், உலகமுழுதும் ஒரு நிமிஷத்தில் வெல்லத்தக்க சுத்த வீரனுக்கும், மூன்று ஆசைகளையும் ஒழித்து, உண்மை அறிந்து, பிரமாநுபவத்தைப் பெற்ற ஜீவன் முத்தர்களுக்கும் பசி நேரிட்டபோது, மனம் இளைத்தும், வலி குலைந்தும், அநுபவம் தடைப்பட்டும், வருந்துகின்றார்களென்றால், **எந்த வகையிலும் ஆதாரமில்லாத ஏழைகளுக்குப் பசி நேரிட்டால் என்ன** பாடுபடார்கள்? பசி அதிகரித்த காலத்தில், முகம் புலர்ந்து போகின்றது; உச்சி வெதும்புகின்றது; பிரமாந்திரம் அடைபடுகின்றது; காது, 'கும்' என்று செவிடுபடுகின்றது; கண், பஞ்சடைந்து எரிந்து நீருலர்ந்து, குளிர்ந்து போகின்றது; நாசி, அழன்று கலைமாறி, பெருமூச்சு விடுகின்றது; நாக்கு, நீருலர்ந்து தடிப் பேறுகின்றது; மெய் முழுதும் கருகி, சக்தியற்று ஸ்மரணை கெடுகின்றது; வாக்கு, குழறித் தொனி*

*மாறுகின்றது. கைகளும் தடதடத்துச் சோர்ந்து தடுமாறுகின்றன; மலசலவழி வெதும்பி வேறுபடுகின்றது; உரோமம், வெறிக்கின்றது; பற்கள், கருகித் தளர்கின்றன; இரத்தமும், சலமும் சுவறுகின்றன; சுக்கிலம், தன்மை மாறி வறளுகின்றது; எலும்புகள் குழைந்து, நோக்காடு உண்டாகின்றது; நாடி நரம்புகள், வலி இழந்து மெலிந்து, கட்டுவிடுகின்றன; வயிறு, 'பகீர்' என்கின்றது; மனது, தளர்ந்து நினைவு மாறுகின்றது; புத்தி கெட்டு நிலைமாறுகின்றது; சிந்தம் கலங்கித் திகைப்பேறுகின்றது. அகங்காரம் குலைந்து, அச்சமுண்டாகின்றது; பிரகிருதி கருங்குகின்றது; கடவுள் விளக்கமும், ஆன்ம விளக்கமும் மறைபடுகின்றன; தாப கோபங்கள், மேன்மேல் உண்டாகின்றன. இவ்வளவு அவத்தைகளும் ஏககாலத்தில் உண்டாகின்றன. எல்லாச் சீவர்களுக்கும் பொதுவாகவே இருக்கின்றது. ஆகாரம் உண்டு பசிநீங்கிய தருணத்தில், தத்துவங்கள் எல்லாம் தழைந்து, கடவுள் விளக்கமும், ஆன்ம விளக்கமும் அகத்திலும் முகத்திலும் வெளிப்பட்டு, திருத்தி இன்பமுண்டாகின்றது. ஆகலில், நாம் அனைவரும் எந்த வகையிலும் ஆதாரமில்லாத ஏழைகளுக்குப் பசி நேரிட்டபோது, மிகவும் கருணையுள்ளவர்களாகி, நம்மால் கூடிய மட்டில், அந்தப் பசி என்கின்ற ஆபத்தைப் பொதுவாக நிவர்ப்பிப்பதற்கு முயற்சி செய்வதே ஆன்மலாபமென்று அவசியம் அறியவேண்டும்!"*[7]

பசியைப்பற்றி – பசியின் கொடுமை பற்றி, இத்துணை விளக்கமாக இதுவரை எவரும் கூறியதில்லை எனத் துணிந்து கூறலாம்.

சமரச சன்மார்க்க சங்கத்தாரின் இறைவழிபாடு, சன்மார்க்க விசாரணை, சன்மார்க்க சங்கத்தின் பணிகள் ஆகிய அனைத்திற்குமே இத் 'தருமச் சாலை'யே இடமாக இருந்தது. சன்மார்க்க சங்கத்தின் அலுவலகங்கூட இதுவே எனலாம். தருமச்சாலை, கட்டிமுடித்தபின், அடிகளார் இதனையே உறைவிடமாகக் கொண்டுவிட்டார்! இன்னும் கூறுவதானால், இங்கிருந்தே மிகப் பல பாடல்களைப் பாடவும், அருளுபதேசம் செய்யவும் அடிகளாருக்கு நல் வாய்ப்பாக இஃது அமைந்து விட்டது. பல பிறவிகள் எடுத்துத் தவம் செய்து அதனால் பெறத்தக்க பெரும்

பயனை எல்லாம், இத் தருமச் சாலையிலே ஒரு பகலில் இறைவன் தமக்கு அளித்தான் எனப் பெருமிதம் கொள்கின்றார் அடிகளார்.

*"காலையிலே என்றனக்குக் கிடைத்தபெரும் பொருளே!*
*களிப்பே, என் கருத்தகத்தே கனிந்தநறுங் கனியே!*
*மேலையிலே இம்மையிலே ஒருமையிலே தவத்தால்*
*மேவுகின்ற பெரும்பயனாம் விளைவையெலாம் தருமச்*
*சாலையிலே ஒருபகலில் தந்ததனிப் பதியே!*
*சமரச சன்மார்க்க சங்கத் தலைஅமர்ந்த நிதியே!*
*மாலையிலே சிறந்த மொழிமாலை அணிந்தாடும்*
*மாநடத்தென் னரசே! என்மாலையும் ஏற்றருளே!"* [18]

எனும் பாடல் இதற்குச் சான்று!

வடலூரில் தொடங்கப்பட்ட பசிபோக்கும் இவ் அறச் செயல், உலகமுழுதும் பரவவேண்டும் என்பது அடிகளாரின் விருப்பம். எந்த நேரத்திலும், எவர் வந்து கையேந்தினாலும், 'இல்லை' என்று சொல்லாது, வயிறார உண்பதற்கு உணவு வழங்க வேண்டும் என்பது அடிகளாரின் குறிக்கோள்!

அடிகளார் வாழ்ந்தது, அடிமைப்பட்ட பாரதநாட்டில்!

*"கருணையிலா ஆட்சி கடுகி ஒழிக!"*

என்று பாடியவர் அடிகளார். ஆங்கிலேயரது சுரண்டலால், இந்திய நாட்டில் பசிக்கொடுமை மேலோங்கி விட்டது! அந்தக் கொடுமை மிக்க காலத்தைச் சித்திரிக்குமாப் போல் அடிகளார் பாடிய கவிதையே "*வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடினேன்!*" என்பது!

இதற்கு, ம. பொ. சி., தரும் விளக்கம் இவண் குறிக்கத்தக்கது :

*"இந்தப் பாடலிலே, வீடுதோறும் இரந்தும், பசியறாது அயர்ந்த வெற்றர்களைச் சித்திரம் தீட்டிக் காட்டுகின்றார். அவர்தம் உடம்பு மட்டுமா இளைத்தது? தொடர்ந்து பட்டினி கிடந்த காரணத்தால், நெஞ்சம் இளைத்துவிட்டதாம்! தொடர்ந்து வரும் பட்டினியாதலால், 'நீடிய பிணி' என்கின்றார் அடிகள். பிச்சை எடுப்போருள்ளேயும், பிறருழைப்பில் உண்ண விரும்பும் சோம்பேறிகளும் உண்டு. அடிகளார், நமக்குக் காட்டுவது, அந்தச் சோம்பேறிகளையன்று! ஈடிலாத்*

*தன்மானம் படைத்தவர்களாக இருந்தும், ஏழைகளாகிவிட்ட காரணத்தால், உழைக்கத் திறனிருந்தும் தொழிலற்றுப் பிழைப்புக்குப் பிச்சையெடுப்பவர்களையே காட்டுகின்றார். இதனை, 'ஈடின் மானிகளாய் ஏழைகளாய் நெஞ்சிளைத்தவர்தமைக் கண்டே இளைத்தேன்' என்னும் வரிகளிலே உணர்த்துகின்றார். ஆம்! கருணை வள்ளலார், தம் கண்ணீரால் கவிதை தீட்டி, இரக்கமுடையோரின் கண்ணீரை எல்லாம் சத்திய தருமச் சாலைக்குக் காணிக்கையாகப் பெறுகின்றார்!"* [19]

## சீவகாருணிய ஒழுக்கம்

இத் 'தருமச் சாலை' மூலம், அடிகளார், உலகுக்கு அறிவுறுத்திய அறிவுரை – அறவுரை 'சீவகாருணிய ஒழுக்கம்' என்பதாம்.

> *"யாதும் ஊரே யாவரும் கேளிர்!"*[20]

என்று சங்ககாலத்தில் முழங்கியவர் கணியன் பூங்குன்றனார்.

> *"ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்"*[21]

என்று திருமூலர் முழங்கினார்.

வள்ளுவரோ,

> *"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்"*[22]

என்று முழங்கினார்.

> *"எவ்வுயிரும் தன்னுயிர்போல் செவ்வறிவை நாடிமிகச்*
> *சிந்தை வைப்ப தெந்நாளோ?"*[23]

என்று முழங்கியவர் தாயுமான அடிகள்!

> *"காணுறு பசுக்கள் கன்றுக ளாதி*
> *கதறிய போதெல்லாம் பயந்தேன்!*
> *ஏணுறு மாடு முதல்பல மிருகம்*
> *இளைத்தமை கண்டுளம் குலைந்தேன்!*
> *கோணுறு கோழி முதல்பல பறவை*
> *கூவுதல் கேட்டுளம் குலைந்தேன்!"*[24]

என்று விலங்குகள், பறவைகள் என எல்லா உயிர்களிடத்தும் கருணை காட்ட

வேண்டும் என முழங்கியவர் இராமலிங்க அடிகளார்.

'உயிர்கள் யாவும் சமம்' என்று உணர்ந்து, அவற்றின் இன்ப துன்பத்தில் பங்கு கொண்டு, ஒன்றாக உணர்கின்ற உணர்ச்சியைத்தான் '*சீவகாருணியம்*' அல்லது 'ஆன்மநேயம்' என்றார் அடிகளார்.

பொதுவாகச் '*சீவகாருணியம்*' என்பதற்கு, ஊன் உணவை நீக்கிக் காய்கறி உணவு கொள்வது என்று மட்டுமே கருதுவதுண்டு. ஆனால் அடிகளார் கண்ட '*சீவகாருணியம்*' இதைவிட விரிந்தது. அதனால் அடிகளார், '*சீவகாருணியம்*' என்றதனோடு விட்டுவிடாமல், '*சீவகாருணிய ஒழுக்கம்*' என்றே அழைப்பாராயினர்!

இச் '*சீவகாருணிய ஒழுக்கம்*' நிலைபெறுதல் வேண்டும்; நிலைபெற்றால் உயிர்களுக்கிடையே இன்பம் நிலவும்; அவலம், கவலை, கையாறு முதலியன தொலைந்துபோம். அதுபோது, இகலோக வாழ்வுக்குரிய வழக்கமாகிய வழங்குநெறி, ஒழுங்குற நடைபெறும் என்பது வள்ளலாரின் கருத்து.

இதற்கென்றே அடிகளார் '*சீவகாருணிய ஒழுக்கம்*' என்றதொரு நூலையே அருளிச் செய்துள்ளார். அதில் வரும் கருத்துக்களிற் சில வருமாறு :

> *"பசியினால் வரும் துன்பத்தையும், கொலையினால் வரும் துன்பத்தையும் நிவர்த்தி செய்விப்பதே சீவகாருணியத்திற்கு முக்கிய இலட்சியம் என்று அறிய வேண்டும். பசி என்கிற நெருப்பானது ஏழைகள் தேகத்தினுள் பற்றி எரிகின்ற போது ஆகாரத்தால் அணைவிக்கின்றதுதான் சீவகாருணியம்!*
>
> *"சீவகாருணிய ஒழுக்கமில்லாமல், ஞானம், யோகம், தவம், விரதம், ஜெபம், தியானம் முதலியவைகளைச் செய்கின்றவர்கள், கடவுள் அருளுக்குச் சிறிதும் பாத்திரமாகார்கள்! அவர்களை ஆன்ம விளக்கமுள்ளவர்களாகவும் நினைக்கப் படாது. சீவகாருணிய மில்லாது செய்யப்படுகிற செய்கைகள் எல்லாம் பிறயோசனமில்லாத மாயாஜாலச் செய்கைகளேயாகுமென்று அறிய வேண்டும்!*
>
> *"இந்தச் சீவகாருணியத்தால் இகலோக வழக்கம் வழங்குகின்றது. சீவகாருணியம் இல்லையாகில் இகலோக வழக்கம் எவ்வளவும் வழங்கப்படாதென்று அறியவேண்டும், . . .*

*"சீவகாருணியம் இல்லாதபோது அறிவும் அன்பும் தோன்றா. அவை தோன்றாதபோது கண்ணோட்டமும் ஒருமையும் உபகாரமும் விளங்கா. அவை விளங்காத போது, வலிய சீவர்களால், எளிய சீவர்கள், ஒழுக்கம் பொறுமை முதலானவை தடைப்பட்டழிந்துபோம். பின்பு, வலிய சீவர்கள், ஒழுக்கங்களும் தாமச ஒழுக்கங்களாகி ஒருவர் ஒழுக்கத்தால் மற்றொருவர் ஒழுக்கம், மதத்தினால் சோர்வடைந்து மாறுபட்டு அழிந்துபோம். சீவகாருணிய ஒழுக்கம் சிறிதும் இல்லாத புலி, சிங்கம் முதலிய மிருகங்கள் வழங்குகின்ற காட்டில், இகலோக வழக்கம் வழங்கவே இல்லை! அதுபோல், சீவகாருணியம் இல்லாத மனிதர்கள் வழங்குமிடத்திலும் இகலோக வழக்கம் வழங்கவேமாட்டாது என்று அறியவேண்டும்!*

*"இகலோக வாழ்க்கை போலவே, பரலோக வாழ்க்கை சீவகாருணியத்தால் வழங்குகிறது!"* [25]

– இவற்றால் அறிய வருவது. "இகலோக வாழ்க்கை என்பது தனியே இவ்வுலகத்துடன் முடிவது இல்லை; பரலோக வாழ்க்கைக்கு அடிப்படையாய் அதனை நிறைவுபடுத்துவதே இகலோக வாழ்க்கை. *சீவகாருணியம்* இடைநடுவே நின்று இகலோக வாழ்க்கையைச் *சீராக்கிப்* பரலோக வாழ்க்கைக்குத் துணையாகிறது!"

சத்திய தருமச் சாலையை நடத்துவதற்கும், அதன் வாயிலாகச் *சீவகாருணிய* ஒழுக்கத்தைப் பரப்புதற்கும் பொருள் மிகமிகத் தேவை. அடிகளார் எண்ணியிருந்தால் தனித் தனி மனிதர்களிடம் சென்று கேட்டால், பொருள் குவிந்து விடும்! ஆனால் அங்ஙனம் செய்ய விரும்பவில்லை! எனவே, சமரசவேதசன்மார்க்க சங்கத்தின் பெயரால் வேண்டுகோள் விடுத்தார். அதன் ஒருபகுதி வருமாறு:

*"சீவகாருணியத்தின் முக்கிய இலட்சியமாவது எதுவெனில், எந்த வகையாலும் ஆதாரமில்லாத ஏழைகளுக்கு உண்டாகின்ற பசி என்கிற பெரிய ஆபத்தை நிவர்த்தி செய்கின்றதே, முக்கிய இலட்சியம் என்று அறிய வேண்டும்!*

*"ஆகலில், அந்த சீவகாருணிய ஒழுக்கத்தை நடத்தும் பொருட்டுக் கூடலூர் ஜில்லா, கூடலூர்த்தாலுகாவைச்*

*சார்ந்த வடலூர் என்கிற பார்வதிபுரத்தில், சமரச வேத தருமச்சாலை என்றொரு தருமச்சாலை ஏற்படுத்தப்பட்டிருக்கின்றது. அது, பலர் சகாயத்தாலேயே நிலைபெற வேண்டுமாதலால், ஜீவ தயையுடைய புண்ணியர்கள், தங்கள் தங்களாற் கூடிய வரையில், பொருள் முதலிய உதவி செய்து, அதனால் வரும் இலாபத்தைப் பாகம் செய்து கொள்ள வேண்டும் என்பது எங்கள் கோரிக்கை!"* [26]

திருவள்ளுவர், 'கொல்லாமை', 'புலால் உண்ணாமை' முதலிய அதிகாரங்கள் வாயிலாகச் 'சீவகாருணிய ஒழுக்கத்'தை வற்புறுத்தினார். அவர் வழியில் வந்த அடிகளாரும், தாம் அருளிய திருவருட்பாவில், அதே கருத்துக்களை வலியுறுத்திப் பாடியுள்ளார்.

உலக மக்களை இருபிரிவாகப் பிரிப்பது உண்டு. சிலர், "ஏழை—பணக்காரர்" என்பர்; சிலர், "கற்றவர் – கல்லாதவர்" என்பர்; சிலர்; "ஆண்—பெண்" என்பர்; சிலர், "இட்டார் பெரியோர் – இடாதார் இழிகுலத்தோர்" என்பர். சிலர், "மெய்ஞ்ஞானி – அஞ்ஞானி" என்பர்; சிலர், "சன்மார்க்கர் – துன்மார்க்கர்" என்பர்; சிலர், "மேல்சாதி – கீழ்சாதி" என்பர். ஆனால், அடிகளாரோ,

*"உயிர்க்கொலையும் புலைப்புசிப்பும் உடையவர்களெல்லாம்*
*உறவினத்தார் அல்லர்; அவர் புறவினத்தார்!"*

எனப்பாகுபாடு செய்வார். "உயிர்க்கொலை செய்பவர்கள்" புலால் தின்பவர்கள் ஆகியோரெல்லாம் வேற்றினத்தார்; அவையில்லாத ஏனையோரெல்லாம் நம் உறவினத்தார் ஆவர்!" என இருவகையாகப் பாகுபடுத்தினார்.

இவ்வாறு அடிகளார் ஆணித்தரமாகச் சொன்னாரேனும், உயிர்க்கொலை செய்பவரோ, புலால் தின்பவரோ, 'பசி' என்று வந்துவிட்டால், சத்திய தருமச் சாலையில் 'அவர்கட்கும் சோறிடுக' என்று சொன்னவர்! "பசித்து வந்த அவர்க்குப் 'பசிதவிர்த்தல்' ஒன்றுமட்டுமே செய்க; பரிவு காட்டிப் பண்புரைத்தலோ, நட்புதவலோ செய்யற்க! அப் புறவினத்தார் தம் இழிதொழில் நீத்துச் சன்மார்க்க நெறிக்கு வரும்வரை, அவரளவில் இவ்வாறே ஒழுகுக" என இறைவன் தமக்கு ஆணையிட்டதாக அடிகளார் பாடியுள்ளார்:

*"உயிர்க்கொலையும் புலைப்புசிப்பும் உடையவர்கள் எல்லாம்*
*உறவினத்தார் அல்லர்; அவர் புற இனத்தார்; அவர்க்குப்*
*பயிர்ப்புறும் ஓர் பசிதவிர்த்தல் மாத்திரமே புரிக!*
*பரிந்து மற்றைப் பண்புரையேல் நண்புதவேல் இங்கே*

*நயப்புறு சன்மார்க்கம் அவர் அடையளவும் இதுதான்*
*நம்ஆணை என்றெனக்கு நவின்ற அருள் இறையே*
*மயர்ப்புறு மெய்த்தவர் போற்றப் பொதுவில் நடம்புரியும்*
*மாநடத்தென் அரசே! என்மாலை அணிந்தருளே!"*[27]

*"வன்புடையார் கொலைகண்டு புலைஉண்பார் சிறிதும்*
*மரபினர் அன்று, ஆதலினால் வகுத்தஅவர் அளவில்*
*அன்புடைய என்மகனே, பசிதவிர்த்தல் புரிக!*
*அன்றி, அருட் செயல் ஒன்றும் செயத்துணியேல் என்றே*
*இன்புற,என் தனக்குஇசைத்த என்குருவே எனைத்தான்*
*ஈன்றதனித் தந்தையே தாயேஎன் இறையே*
*துன்புறு மெய்த்தவர் சூழ்ந்து போற்றுதிருப் பொதுவில்*
*தூயநடத் தரசே!என் சொல்லும்அணிந் தருளே!"*[28]

புலால் உண்பதை நினைத்துப் பார்த்தாலே, தமது உள்ளம் வெதும்புகின்றது; உடம்பு கருகுகின்றது என்பார் அடிகளார்.

*"புன்புலால் உடம்பின் அசுத்தமும் இதனில்*
*புகுந்துநான் இருக்கின்ற புணர்ப்பும்*
*என்பொலா மணியே எண்ணிநான் எண்ணி*
*ஏங்கிய ஏக்கம்நீ அறிவாய்!*
*வன்புலால் உண்ணும் மனிதரைக் கண்டு*
*மயங்கி, உள் நடுங்கிஆற் றாமல்*
*என்பெலாம் கருக இளைத்தனன் அந்த*
*இளைப்பையும் ஐய!நீ அறிவாய்!"*[29]

பிற உயிர்கள் கொல்லப்படுவதையோ, அவைகளைக் கொல்லும் சாதனங்களையோ பார்க்கச் சகியாதவர் அடிகளார்:

*"துண்எனக் கொடியோர் பிறஉயிர் கொல்லத்*
*தொடங்கிய போதெல்லாம் பயந்தேன்!*
*கண்ணினால் ஐயோ பிறஉயிர் பதைக்கக்*
*கண்ட காலத்திலும் பதைத்தேன்!*
*மண்ணினில் வலையும் தூண்டிலும்*
*கண்ணிவகைகளும் கண்டபோ தெல்லாம்*
*எண்ணிஎன் உள்ளம் நடுங்கிய நடுக்கம்*
*எந்தைநின் திருவருள் அறியும்!"*[30]

அனைத்திற்கு மேலாகச் சிறுதெய்வங்களின் முன் உயிர்ப்பலி இடுவது, கொடுமையினும் கொடுமை என நிந்தனை செய்தவர் அடிகளார். தெய்வத்தின் பெயரால் மக்கள் சிலர் செய்யும் கொடுஞ்செயல் என்பது அவர் கருத்து.

*"நலிதரு சிறிய தெய்வமென் றையோ*
*நாட்டிலே பலபெயர் நாட்டிப்*
*பலிதர ஆடு பன்றி,குக் குடங்கள்*
*பலிக்கடா முதலிய உயிரைப்*
*பொலிவுறக் கொண்டே போகவும் கண்டே*
*புந்திநொந்(து) உளம்நடுக் குற்றேன்!*
*கலியுரு சிறிய தெய்வவெங் கோயில்*
*கண்ட,கா லத்திலும் பயந்தேன்!"* [31]

என்பது அடிகளார் வருந்திப் பாடிய பாடல்!

இத்தகு துயர்முழக்கமெல்லாம் ஒன்றுசேர்ந்து – இறைவனிடம் கேட்கும் வரமாக உருவெடுத்து நிற்றல் காணலாம்:

*"கருணையே வடிவாய்ப் பிறர்களுக்கு அடுத்த*
*கடுந்துயர் அச்சம்ஆ திகளைத்*
*தருண, நின் அருளால் தவிர்த்தவர்க் (கு) இன்பம்*
*தரவும்,வன் புலை,கொலை இரண்டும்*
*ஒருவிய நெறியில் உலகெல்லாம் நடக்க*
*உருற்றவும் அம்பலந் தனிலே*
*மருவிய புகழை வழுத்தவும் நின்னை*
*வாழ்த்தவும் இச்சைகாண் எந்தாய்!"* [32]

என்பது சான்று!

அடிகளாரின் இக்கொள்கை நெறி குறித்துப் புரசு. பால கிருஷ்ணன் கூறுவது இவண் எண்ணத்தகும்!

*"இங்ஙனம், அவர் (அடிகளார்) தம் கருணை நெறியைப் பிறரை நிந்தியாமல், கடவுள் முன்னிலையில் சமர்ப்பித்துக் கொள்ளுவதனால், அந்நெறிக்கு உகந்திலாதவர்கள், அவரை நிந்திக்க இடமில்லாமல் செய்து விடுகிறார்.*

*"புலால் உண்போர் பலர் அடிகளின் திருவருளினால் புலால் மறுப்போராயினர்! இங்ஙனம் மக்களைப் புலால்*

*உணவிலிருந்து சைவ உணவிற்கு மாறறக் கூடிய ஒரு தனி ஆற்றல் அடிகளுக்கு இருந்தது என்றும், அவருடைய பார்வை ஒன்றே புலால் உணவில் ஒருவருக்கு இருக்கக்கூடிய இச்சையை ஒழிக்க வல்லதாய் இருந்தது என்றும் அவருடைய மாணாக்கர் தொழுவூர் வேலாயுத முதலியார் கூறுகிறார்."*[33]

*"புலாலை உண்பவர்கள் இருப்பதனால்தான், அப்புலாலை விற்பவர்களும் இருக்கின்றனர்; ஆதலின் புலால் உண்ணுதலைத் தவிர்ப்பதே முதற்கடமை"*

என்ற பொருள்பட வள்ளுவர் கூறும் குறட்பாவும் ஈண்டு ஒப்புநோக்கத்தக்கது:

*"தினற்பொருட்டாற் கொல்லா(து) உலகெனின் யாரும்*
*விலைப் பொருட்டால் ஊன்தருவார் இல்"*[34]

என்பது வள்ளுவர் கூற்று!

## *ஆன்மநேய ஒருமைப்பாடு*

*"சாதி சமய வேறுபாடுகளை ஒழிப்பதும்; ஒரே கடவுள் வழிபாட்டில் மக்களைக் கூட்டுவதும் மட்டுமே வள்ளலாரின் நோக்கம் அல்ல! பிணக்கும் வெறுப்பும் ஒழிந்து, ஒருமையும் இனிமையும் கொண்ட நெஞ்சினராக உருவாகும் மக்கள், அனைத்துயிர்க்கும் அன்பு செய்யும் 'ஆன்ம நேய ஒருமைப்பாட்டுணர்ச்சி' பெற வேண்டும் என்பதே அவருடைய மூலநோக்கம். அதற்காகவே அவர்களின் நோயை அகற்றி, நல்ல நினைவுகளால் அவர்களின் உள்ளத்தை எழிலும் இனிமையும் உடையதாக்க முயன்றார்! வள்ளலாரின் நோக்கம் மிக உயர்ந்தது!"*[35]

என்பது சாலை. இளந்திரையன் கூற்று.

இத்தகைய உயர்ந்த 'ஆன்மநேய ஒருமைப்பாடு' பற்றிய கருத்துக்களை, அடிகளார் அருளிய திருவருட்பாவில் பரக்கக் காணலாம்.

அருட்பாவில், சோபான முறைப்படி, படிப்படியாக, மக்களை மேல் நிலைக்கு அழைத்துச் செல்லும் பாங்கினைக் காணலாம். உருவ வழிபாட்டில் தொடங்கிய அருட்பாடல்கள், அவ் உருவத்தைக் கடந்த அருவ நிலையில் முடிகின்றன.

இறைவனை நோக்கிச் செல்லும் ஆன்மா, ஐம்புலன்களுக்கும் உணவாக இருக்கின்ற அவனது தோற்றத்தின் பொலிவைக் கண்டு, மயங்கி, மாந்தி, மனம் நெகிழ்வுற்று, கருணைப் பெருக்கால் கவன்று, நெஞ்சக் கனகல்லும் கரைய அவனை வாழ்த்தி, வணங்கி, நிறைவு பெறுகின்றது. இந்நிறைவை எய்தியபின், எல்லாப் பற்றுக்களும் நீங்கி விடுகின்றன. அருளாளர்கள் அப்பொழுது, சமய எல்லையைக் கடந்து, சமயாதீத நெறியைப் பின்பற்றுகின்றனர். இத்தகையோரே,

> *"உயிர்க்குலம் அனைத்தையும் 'ஆன்மநேய ஒருமைப் பாட்டுணர்ச்சி'யால் நேசிக்கும் பெருந்தகையாளர்களாக மாறிவிடுகின்றனர்!"*[36]

என்கின்றார் நா. கிரிதாரி பிரசாத்.

இத்தகு ஆன்மநேய ஒருமைப்பாட்டுணர்ச்சியின் பிரவாகமாக வெளிப்போந்தவை, அடிகளாரின் பாடல்கள்!

அருட்பா வழங்கிய அருளாளராகிய அடிகளார், தம்மை ஓர் எளிய மனிதராகவே கருதினார். பிற மனிதரைவிட ஏன், பிறிதொரு உயிரைவிடத் தாம் உயர்ந்தவர் என்ற எண்ணம் ஒருகாலும் அவர்பால் இருந்ததில்லை என்பது முன்னரும் சுட்டப்பட்டது! பரம்பொருளின் படைப்பில் அனைத்துயிர்களையும் ஒன்றாகவே பாவித்தார். அவ்வாறு பாவித்ததனால் உருவானதே 'ஆன்ம நேய ஒருமைப்பாட்டுணர்ச்சி'! ஆனாலும், அவரைச் சூழ்ந்திருந்த அடியார்கள், அவரைத் தெய்வமாகவே எண்ணி வழிபடலாயினர்; அது கண்டு அடிகளார் உள்ளம் நொந்தார் :

*"சன்மார்க்க சங்கத்தீர்! சிற்றடியேன், உமது*
*தாள்வணங்கிச் சாற்றுகின்றேன், தயவினொடும் கேட்பீர்!*
*என்மார்க்கத்(து) எனை, நுமக்குள் ஒருவன்எனக் கொள்வீர்!*
*எல்லாம்செய் வல்ல,நமது இறைவனையே தொழுவீர்!*
*புன்மார்க்கத் தவர்போலே வேறுசில புகன்றே*
*புந்திமயக் (கு) அடையாதீர்! பூரணமெய்ச் சுகமாய்த்*
*தன்மார்க்க மாய்,விளங்கும் சுத்தசிவம் ஒன்றே*
*தன்ஆணை என்ஆணை சார்ந்(து)அறிமின் ஈண்டே!"*[37]

என்று பாடி, தம்மை வணங்குதைத் தவிர்த்து, எல்லாம் வல்ல பரம்பொருளையே வணங்கவேண்டும் என்று அறிவுரை கூறினார் அடிகளார்.

மனித குலத்திடையே மட்டுமன்றி, உயிர்க்குலம் அனைத்திடமும் சமரசம் காணத் துடித்தமையால்தான், 'ஆன்மநேய ஒருமைப்பாட்டுணர்ச்சி' என்னும்

ஆழமான விதையினை மக்கள் உள்ளத்தே விதைத்தார் அடிகளார்!

இந்த ஒருமைப்பாட்டுரிமைக் கொள்கையை, ஐரோப்பியருள் சிலரும் ஆதரித்திருக்க வேண்டும் என்று கருதும்படி ஒருபாடல்:

*"..... என்மார்க்கம்*
*நன்மார்க்கம் என்றே, வான்நாட்டார் புகழ்கின்றார்! ..."[38]*

என்பது அடிகளார் கூற்று.

*"தெய்வம் உண்டென்று நம்பி அதுவும் ஒன்றென்று*
*தெளிந்து, ஆன்மநேய ஒருமைப்பாட்டுணர்வுடன்*
*உலகிலுள்ளோர் அனைவரும் ஒன்றுபட வேண்டும்!"*

என்பது அடிகளாரது விருப்பம்!

திருவள்ளுவர்,

*"உடம்பால் ஒத்திருத்தல், ஒருவனுக்கு, நன்மக்களோடு*
*ஒப்பு ஆகாமையின் அது பொருந்துவதாகாது;*
*பொருந்தத்தக்க பண்பால் ஒத்திருத்தலே,*
*கொள்ளத்தக்க ஒப்பு ஆகும்!"[39]*

என்ற பொருள்பட,

*"உறுப்பொத்தல் மக்கள்ஒப்(பு) அன்றால்; வெறுத்தக்க*
*பண்(பு)ஒத்தல் ஒப்பதாம் ஒப்பு"[40]*

என்பாராயினர். இதில், 'வெறுத்தக்க பண்பு' என்பது, 'மணங்கலந்து உறவாடுதல்' ஆகும்.

இதனையே அடிகளார், "மக்கட்கு இன்றியமையாது வேண்டப்படுவது 'சன்மார்க்கம்'; இதன் முக்கிய இலட்சியமாக இருப்பது, 'ஆன்ம நேய ஒருமைப்பாட்டு உரிமை'; அவ் உரிமை எக்காலத்தும், எவ்விடத்தும், எவ்விதத்தும், நிறைந்து விளங்கச் செய்வித்தருள வேண்டும்" என்று இறைவனிடம் வேண்டுவதைப் பல பாக்களில் காணலாம்.

*"எத்துணையும் பேதமுறா(து) எவ்வுயிரும் தம்உயிர்போல் எண்ணி உள்ளே*
*ஒத்துரிமை உடையவராய் உவக்கின்றார் யாவரவர் உளம்தான் சுத்த*
*சித்துருவாய் எம்பெருமான் நடம்புரியும் இடம் எனநான் தெரிந்தேன் அந்த*
*வித்தகர்தம் அடிக்குஏவல் புரிந்திட, என் சிந்தைமிக விழைந்த தாலோ!"[41]*

இத்திருப்பாடல், தாயுமானவரின் கீழ்க்கண்ட பாடலை

நினைப்பூட்டுவதாயுள்ளது:

*"எவ்வுயிர்த் திரளும் உலகில் என்னுயிர்*
*எனக்குழைந் துருகி நன்மையாம்*
*இதமுரைப்ப, எனதுஎன்ற யாவையும்*
*எடுத்தெறிந்து மதயானைபோல்,*
*கவ்வை யற்றநடை பயில, அன்பரடி*
*கண்டதே அருளின் வடிவமாக்*
*கண்ட யாவையும் அகண்ட மென்னஇரு*
*கைகுவித்து, மலர்தூவியே*

*பவ்வ வெண்திரை கொழித்த தண்தரளம்*
*விழிஉதிர்ப்ப, மொழி குளறியே,*
*பாடியாடி உள்ளுடைந் துடைந்தெழுது*
*பாவையொத்து அசைத லின்றியே*
*திவ்ய அன்புருவமாகி அன்பரொடும்*
*இன்ப வீட்டினில் இருப்பனோ?*
*தெரிவ தற்குஅரிய பிரமமே! அமல*
*கிற்சு கோதய விலாசமே!"*[42]

அடிகளார், 'ஆன்மநேய ஒருமைப்பாட்டுரிமை' மூலம் அனைத்துயிர்களிடையே 'அன்பு' என்னும் உணர்வை வளர்க்க முயன்றார். "சுத்த சன்மார்க்கத்தின் முக்கிய இலட்சியம், ஆன்ம நேய ஒருமைப் பாட்டுரிமையே" என்பது அடிகள் கூற்று. அனைத்துயிர்களுமே இறைவனருளால் உண்டானவையே. எனவே அவ்வுயிர்களிடையே 'ஆன்மநேய ஒருமைப்பாடு' காண்பதுவே தம் வாழ்வின் குறிக்கோளாகக் கொண்டார்,

*"சீவர்கள் எல்லாம் ஒரு தன்மையாகிய கடவுள் இயற்கை உண்மை ஏகதேசங்களாகிக் கடவுள் அருட் சக்தியால் பூத காரிய தேசங்களில் வருவிக்கப்பட்டபடியால் இச் சீவர்களெல்லாம் ஒருரிமை இனத்தவர்களேயாகும்!"*[43]

என்று அடிகளார், தம் 'சீவகாருணிய ஒழுக்கம்' என்ற நூலில் குறிப்பிடுவது இங்கு எண்ணத்தக்கது.

*"காக்கைச் சிறகினிலே நந்தலாலா – உன்றன்*
*கரியநிறம் தோன்றுதையா நந்தலாலா!"*[44]

என்பது அடிகளாரைத் தம் முன்னோடியாகக் கொண்டு கவி புனைந்த அமரகவி

பாரதியார் கூற்று.

*"உயிர்கள் பால் அன்பு செலுத்துக"*

என்று சொல்வது ஒருபுறம்; ஆனால் "அந்த உயிர்களும் நாமும் ஒன்றே" என்று எண்ணுவது ஒருபடி மேலானது. அதுவே 'ஆன்மநேயம்' எனப்படும். இவ்வகையில் அடிகளார், கருணையே மதமாகக் கொண்ட ஒரு புத்தம் புது உலகையே அமைக்க முயன்றார்.

அடிகளாரின் 'ஆன்மநேய ஒருமைப்பாட்டுரிமை" என்பது, கடவுள் வேற்றுமை, வருண வேற்றுமை, சமய – மதவேற்றுமை, சாதி வேற்றுமை ஆகியவற்றையெல்லாம் அழித்தும்; மொழி–நாடு–நிறவேற்றுமைகளையெல்லாம் கடந்தும் நிற்பதாகும்.

*"ஆறுகோடியாம் சமயங்கள்*
*அகத்தினும் அவைமேல்*
*வீறு சேர்ந்தசித் தாந்த,வே*
*தாந்த,நா தாந்தம்*
*தேறும் மற்றைய அந்தத்தும்*
*சிவம் ஒன்றே யன்றி*
*வேறு கண்டிலேன், கண்டிரேல்*
*பெரியர்காள் விளம்பீர்!"*[45]

என்பர் வள்ளலார். "தெய்வம் ஒன்றுதான் உண்டு என்று உணராத மக்களைப் பார்த்து, 'ஒன்றெனக் காணும் உணர்ச்சி எண்ணுறுமோ?' என்றும்; 'ஒன்றே சிவம் என்று உணர்ந்து, இவ்வுலகெலாம் நன்றே ஒருமையுற்று வாழ்க!' என்றும் பாடினார் அவர். இங்கு அடிகளார், 'சிவம்' என்று குறிப்பிட்டது, உயிர்க்குலம் அனைத்திற்குப் பதியாக விளங்கும் பரம்பொருளையாகும்.

அடிகளார், உலகில் உள்ள எல்லா மதங்களைச் சார்ந்தவர் அனைவரிடமும் ஒருமைப்பாடு காண விழைந்தார். 'ஒரே உலகம்' காண்பதற்காகவே இவ் ஒருமைப்பாட்டுணர்ச்சியை வற்புறுத்தினார். ஒன்றுபட்ட மனித சமுதாயம், ஒரே தெய்வ நம்பிக்கை கொண்டு, பிளவு – பிரிவினை ஆகியவற்றிலிருந்து விடுபட்டு, உயிர்கள் அனைத்திடமும் அன்பு செலுத்துவதாக இருக்கவேண்டும் என்று விரும்பினார்! அதனால்தான், 'ஆன்மநேய ஒருமைப்பாட்டுரிமை' என்று முழக்கமிட்டார்!

"எம்மதமும் சம்மதம்" என்பது அடிகளாரின் கொள்கை. இதனை அவர் அருளிய பாடல் பலவற்றிலும் காணலாம்.

*"எம்மத நிலையும் நின்னருள் நிலையில் இலங்குதல் அறிந்தனன்!*
*எல்லாம் சம்மத மாக்கிக் கொள்கின்றேன்!"*[46]

இதில் அடிகளார், 'மதம்' என்று குறிப்பிடுவது, மத நிறுவனங்களையன்று, மதத்தத்துவங்களையே! இந்தக் குறிக்கோளுக்கு இணங்க, அடிகளார், "யோகாந்தம், கலாந்தம், நாதாந்தம், போதாந்தம், வேதாந்தம், சித்தாந்தம்" எனும் ஆறு அந்தங்களையும் ஒன்றுபடுத்திச் 'ஷடாந்தம்' என்றதொரு 'சமரச சமஷ்டித் தத்துவத்'தையும் உருவாக்கினார். அடிகளார் தோற்றுவித்த 'சமரச சன்மார்க்க சங்கத்'திற்கு, 'ஷடாந்த சமரச சன்மார்க்க சங்கம்' என்ற பெயரும் உண்டு.

'ஷடாந்தம்' என்பது 'ஆறுகோடி' என்ற தமிழ்ப் பொருளுடையது. ஆனால் இங்குக் 'கோடி' என்பதற்கு 'முடிவு' அல்லது 'ஈறு'என்று பொருள். 'ஷடாந்தம்' என்பதற்கு அடிகளாரே விளக்கம் தந்துள்ளார். இவற்றிற்கான விரிவான விளக்கங்களைத் திரு. வி. க., தம் 'இராமலிங்கசுவாமிகள் திருவுள்ளம்' என்ற நூலில் தந்துள்ளார்.[47]

*1.யோகம் + அந்தம் = யோகாந்தம்*

யோகம் – ஒன்றல். அலையும் மனத்தை ஒன்றில் ஒன்றச் செய்தல். அந்தம்– முடிவு அல்லது எல்லை.

*"தண்ணமுத மதிகுளிர்ந்த கிரணம் வீசத்*
*தடம்பொழிற்பூ மணம் வீசத் தென்றல் வீச*
*வெண்ணமுதம் பளிக்குநிலா முற்றத் தேயின்*
*இசைவீசத் தண்பனிநீர் எடுத்து வீசப்*
*பெண்ணமுத மனைவியர்விண் ணமுதம் ஊட்டப்*
*பெறுகின்ற சுகமனைத்தும் பிற்பட்டு ஓடக்*
*கண்ணமுதத் துடம்புயிர்மற் றனைத்தும் இன்பம்*
*கலந்துகொளத் தரும்கருணைக் கடவுள் தேவே!'*[48]

எனும் அருட்பா, இதனை விளக்க வந்தது.

2. கலை + அந்தம் = கலாந்தம்: 'கலை' ஒரு தத்துவம், அது, நியதியினின்றும் பிறப்பது; வித்தையின் தோற்றத்துக்கு நிலைக்களனாயிருப்பது. இக்கலையின் வினை, அவித்தை அல்லது ஆணவம் என்ற மறைப்பை அவரவர் முயற்சிக்கு ஏற்ற அளவில் சிறிதுசிறிதாக நீக்கத் துணைபுரிவது.

இது குறித்துத் திரு. வி. க., கூறுவது:

*"மயக்க அறிவே பல சமயப் போருக்கும், கண்மூடி வழக்க*

*ஒழுக்கங்கட்கும், பிறகேடுகட்கும் காரணமாக நிற்கிறது. உண்மை ஞானம் விளங்கப் பெற்றதும், பல சமய உணர்வு, கண்மூடி வழக்க ஒழுக்கங்கள் முதலிய யாவும் பொன்றச் சன்மார்க்கம் என்னும் அருள்ஒழுக்கம் இடம்பெறும்"* [49]

இது குறித்த அருட்பா ஒன்று :

*"மணிக்கதவம் திறவாயோ மறப்பையெலாம் தவிர்த்தே*
*மாற்றறியாப் பொன்னே!நின் வடிவது காட்டாயோ?*
*கணக்கறியாப் பெருநிலையில் என்னொடுநீ கலந்தே*
*கரைகடத்த பெரும்போகம் கண்டிடச்செய் யாயோ?*
*தணிக்கறியாக் காதல்மிகப் பெருகுகின்றது அரசே!*
*தாங்கமுடி யாது,இனிஎன் தனித்தலைமைப் பதியே!*
*திணிக்கலையா தியஎல்லாம் பணிக்கவல்ல சிவமே!*
*சித்தசிகா மணியேஎன் திருநடநா யகனே!"* [50]

இப்பாடலில், 'கதவு' என்பது 'கலாதத்துவத்'தைக் குறிப்பது.

3. நாதம் + அந்தம் = நாதாந்தம், நாதம் - ஒலி. ஈண்டு அஃது 'ஓங்காரத்'தைக் குறிக்கும். அருட்சோதி தெய்வம் எனும் நடராசபதியின் காட்சிக்குமுன் இவ் ஒலிகேட்கும்.

*"நாதம் சொல்கின்ற திருச்சிற்றம் பலத்தே நடிக்கும்*
*பாதம் சொல்கின்ற பத்தரே நித்தர் என்று அறிமின்!"* [51]

என்பார் அடிகளார்.

4. போதம் + அந்தம் = போதாந்தம். போதம் – அறிவு. கலையில் விளங்கும் மெய்யறிவு. அறிவைச் சோதி மயமாகக் காணும் ஒரு நிலை.

*"நாதாந்தத் திருவீதி நடந்து கடப் பேனோ?*
*ஞானஒளி நடுஇன்பம் நடந்துதரிசிப் பேனோ?*
*போதாந்தத் திருவடிஎன் சென்னிபொருந் திடுமோ?"* [52]

என்பது அருட்பா.

5. வேதம் + அந்தம் = வேதாந்தம். வேதம் – அறிவு விளங்குமிடம். வேத அந்தத்தில், எல்லாம் அறிவு மயமாய் விளங்கும்.

*"ஒளியொன்றே அண்டபகி ரண்டமெலாம் விளங்கி*
*ஓங்குகின்ற தன்றி, அண்ட பகிரண்டங்களிலும்*
*வெளிநின்ற சராசரத்தும் அகத்தினொடு புறத்தும்*
*விளம்பும் அகம் புறத்தினொடு புறப்புறத்தும் நிறைந்தே*
*உளநின்ற இருள்நீக்கி இலங்குகின்ற தன்மை*
*உலகறியும் நீயறியாது அன்றுகண்டாய் தோழி!*
*தளிநின்ற ஒளிமயமே! வேறிலைஎல் லாமும்*
*தான்எனவே த,ஆகமங்கள் சாற்றுதல்சத் தியமே!"[53]*

6. சித்தம் + அந்தம் = சித்தாந்தம். வேத அந்தத்தில் திகழ்வது; அறிவின் முடிந்த முடிபு. "யாண்டும் நீக்கமற நிறைந்து ஒளிரும் அருட்பெருஞ்சோதியைத் 'தான் அல்லது' என்னும் இரண்டற உணரும் ஒருநிலை சித்தாந்தம்" ஆகும்.

*"பணிந்து பணிந்து அணிந்து அணிந்து பாடுமினோ உலகீர்!*
*பரம்பரமே சிதம்பரமே பராபரமே வரமே!*
*துணிந்து வந்த வேதாந்த சுத்தஅனு பவமே!*
*துரியமுடி அனுபவமே! சுத்தசித் தாந்தமதாய்த்*
*தணிந்தநிலைப் பெருஞ்சுகமே சமரசசன் மார்க்க*
*சத்தியமே இயற்கை உண்மைத் தனிப்பதியே என்று*
*கனிந்துளத்தே கனிந்துநினைந்து உரைத்திடில்அப் பொழுதே*
*காணாத காட்சிஎலாம் கண்டுகொள லாமே!"[54]*

ஆதிசங்கரர், இந்துமதத்தின் உட்பிரிவுகளான 'ஆக்னேயம், ஐந்திரம், கணாதிபத்தியம், சைவம், வைணவம், சாந்தம்' ஆகிய ஆறு சமயங்களையும் ஏற்படுத்தினார். அதனால் அவர், 'ஷட்மத ஸ்தாபகர்' என்ற சிறப்புப் பெயரும் பெற்றார்.[55] அவருக்குப் பல நூற்றாண்டுகளுக்குப் பின்வந்த வள்ளலாரோ, அனைத்து உலக சமயங்களையும் ஒன்றுபடுத்தி, 'உலக ஒருமைப்பாடு' காண விழைந்தார். அவ் எண்ணத்தின் விளைவாக உருப்பெற்றதே 'ஆன்மநேய ஒருமைப்பாட்டுரிமை'.

சுவாமி விவேகானந்தர்,

*"ஏன் மற்ற உயிர்களைத் தம் உயிர்போல் நினைத்து அன்பு செலுத்தவேண்டும்? இதற்குக் காரணம், மற்ற சாஸ்திரங்களில் கொடுக்கப்படவில்லை! அதற்குக் காரணம் இங்குத்தான் இருக்கிறது. கடவுள் அரூபமாய் எல்லா உயிர்களிலும் இருக்கிறார். அதனால் எல்லா உயிர்களும் சமம்!"[56]*

என்று கூறும் கருத்து ஒப்பு நோக்கத்தக்கது.

இத் தமிழ்மண்ணிலே, 'ஆன்மநேய ஒருமைப்பாட்டுரிமை' விதையை ஊன்றிய அருளாளர் இராமலிங்க அடிகளார்.

> *"இவருடைய (அடிகளார்) வாழ்க்கையை ஆதியோடந்தமாக அலசிப்பார்த்தால், வடஇந்தியாவில் பதினைந்தாவது நூற்றாண்டில் தோன்றின கபீர்தாசருடைய வாழ்க்கைக்குச் சமமாக உள்ளது. இவ்விருவரும் மனித சமுதாயத்தில் பெரும் புரட்சிகரமான மாறுதல்களை விரும்பிய சீர்திருத்தவாதிகளாவார்கள். இவர்கள் வாழ்நாள் முழுவதும் 'ஆன்மநேய ஒருமைப்பாட்டு உரிமை'க்காக உழைத்து வந்தார்கள். 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்ற கொள்கை இவர்களுடைய வாழ்க்கையில் ஆணித்தரமாகப் பதிந்திருக்கின்றது. சாதி மத பேதம் நீக்கிச் 'சமரசம்' காணுதல், கண்மூடிப் பழக்கத்தை விலக்குதல், பெண்ணடிமையை ஒழித்தல், ஒரே பரதத்துவத்தை வணங்குதல் போன்ற கொள்கைகளை மக்கள் உள்ளத்தில் பரப்புவதில் இவ்விருவரும் ஈடுபட்டிருந்தனர்!"* [57]

என அடிகளார் வாழ்க்கையோடு, கபீர்தாசரின் வாழ்க்கையை ஒப்பிட்டுக் கூறுவதும் உண்டு. இவ்வாறே, சமண சமயத்தில் உள்ள 'விரதக் கொள்கை'; சூபித்துவத்தில் உள்ள 'ஆன்மப் படிநிலைகள்'; கிறித்துவத்தில் உள்ள 'மதிப்புகள்' ஆகியவற்றோடு திருவருட்பாவை ஒப்பிட்டுக் கூறுவதும் உண்டு. [58]

'சமய ஒருமைப்பாடு, நாட்டு ஒருமைப்பாடு, சமுதாய ஒருமைப்பாடு' என்றெல்லாம் வாய் இனிக்கப் பேசாத தலைவர்கள் இல்லை; எழுதாத ஏடுகள் இல்லை! காட்டாத படங்கள் இல்லை! காணாத இடங்கள் இல்லை! ஆயினும் 'ஒருமைப்பாடு எங்கே இருக்கிறது!' என்றுதான் கேட்கத் தோன்றுகின்றது. நாள்தோறும் நாளேடுகளில் காணும் செய்திகள் யாவை? "அரசியல் மோதல்களால் குத்து–வெட்டு; சமயக் காழ்ப்புணர்ச்சியால் மக்களிடையே போராட்டம்; சாதிகளால் நாளும் சண்டை சச்சரவுகள்!" என்பனவே மிகுந்து காணப்படுகின்றன. இவற்றிற்கு ஓர் அமைதியான வழிமுறையைக் கண்டு, மக்களுக்கு எடுத்துரைப்பார் இலராயினர்!

இற்றைக்கு ஏறத்தாழ நூற்றறுபது ஆண்டுகளுக்கு முன்னரேயே,

தமிழ்நாட்டுமக்கள் – ஏன் இந்திய நாட்டு மக்கள் – ஏன், உலக முழுவதிலுமுள்ள மக்கள் ஈடேறும் பொருட்டு 'ஆன்மநேய ஒருமைப்பாட்டுரிமை'க்குரல் எழுப்பிப் பாடுபட்ட பெருந்தகையாளர் – பேரருளாளர் இராமலிங்க அடிகளாரே என்றறியும் போது ஒவ்வொரு தமிழ்மகனும் விம்மிதம் கொள்ளலாம்.

## *முடிவுகள்*

இவ்வியல் வாயிலாக அறியத்தகுவன :

1. அடிகளார் நிகழ்த்திய சமயப் புரட்சிக்கு இன்றியமையாக் கருவிகளாக விளங்கியவற்றுள் 'சத்திய தருமச் சாலை'யும் ஒன்று;
2. மக்களின் வறுமைத்துன்பம் கண்டு வேதனையுற்றவர் அடிகளார்; 'வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடியவர்', மக்கள் படும் துன்பத்தைக் கண்டு வாடியதில் வியப்பில்லை;
3. பசித் துன்பத்தைவிடக் கொடியது உலகில் வேறெதுவுமில்லை;
4. 'அமுதசுரபி' என்னும் அட்சய பாத்திரத்தைக் கொண்டு, பசிப் பிணி நீக்கிய அறச்செல்வி மணிமேகலை;
5. 'பசியைப் போக்குதலே சீவகாருணிய ஒழுக்கம்' என்பது அடிகளார் கொள்கை;
6. இதற்காகவே அடிகளாரால் உருவாக்கப்பட்டது, 'சத்திய தருமச் சாலை';
7. வழிச்செல்வார் பலரும் தம் பசி போக்க வேண்டும் எனும் உயரிய நோக்கத்தால், வடலூருக்கு அருகே இரண்டு பெரிய நெடுஞ்சாலைகள் கூடுமிடத்தை இத் தருமச்சாலைக்கெனத் தேர்ந்தெடுத்த அருளாளர், அடிகளார்!
8. 'பசி வந்தால் என்னென்ன துன்பங்கள் நேரும்' என்பதற்கு விரிவான விளக்கம் தந்தவர் அடிகளார்;
9. சீவகாருணியம் இல்லாமற் செய்யும் எந்தச் செயலும் பயன்தராது என எடுத்துரைத்தவர் அடிகளார்;
10. உயிர்க் கொலையும், புலைப்புசிப்பும் உடையவர்களைப் 'புறவினத்தார்' என்று கூறியவர் அடிகளார்; எனினும் அத்தகையோர், 'பசி' என்று வந்துவிட்டால், அவர்கட்கும் உணவளிக்க வேண்டும் என்ற கருணையாளர் அடிகளார்;

11. அடிகளார் தோற்றுவித்த சன்மார்க்க சங்கத்திற்கு, 'ஷடாந்த சன்மார்க்க சங்கம்' என்ற பெயரும் உண்டு. இதில் வரும், 'ஷடாந்தம்' என்பதற்குப் பல்வேறு விளக்கங்கள் சொல்லப்படுகின்றன;

12. இன்று உலகில் எங்கு நோக்கினும், 'போர்கள், போராட்டங்கள், கொலைகள்' முதலான கொடுமைகள் நிகழ்கின்றன. இன்றைக்கு ஏறத்தாழ 160 ஆண்டுகளுக்கு முன்பே, உலகமக்கள் உய்திபெறும் பொருட்டு வள்ளலார் கண்டது 'ஆன்மநேய ஒருமைப்பாட்டுநெறி' யாகும்.

13. இந்நெறி நின்றால் உலகம் அமைதி மணம் கொண்டு இன்புறும்!

## *சான்றெண் விளக்கம்*

1. நா. மகாலிங்கம், 'வள்ளலார்', ச. க. ச. ச. சங்க நூற்றாண்டு விழா மலர், ப. 2
2. ஆதாரம் : ம. பொ. சி., வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு, ப. 110.
3. திருக்குறள், 1061.
4. ச. சாம்பசிவனார், சிவனாரின் வள்ளுவர் தெள்ளுரையும் சொல்லடைவும், ப. 216.
5. திருக்குறள், 226.
6. ச. சாம்பசிவனார், மு. கா. நூ. ப. 47.
7. மணிமேகலை, பாத்திரம் பெற்ற காதை, 76-80.
8. திருவருட்பா, பிள்ளைப் பெரு விண்ணப்பம், 58:1-2 (ப. 102).
9. மேலது, 58 : 3-4 (ப. 102).
10. மேலது, முறையீடு, 3 (ப. 355).
11. மேலது, தான் பெற்றபேறு, 194 (ப. 325).
12. மேலது, உலகர்க்கு உய்வகைகூறல், 1:2
13. மேலது, 3 : 3.
14. திருக்குள், 26.
15. திருவருட்பா, வேண்டுகோள், 3 (ப. 351).
16. ந. ரா. ஊரன், 'சத்திய தருமச்சாலை வரலாறு', சத்திய தருமச்சாலை

நூற்றாண்டுவிழா, திருஅருட்பா நூற்றாண்டு விழா மலர், ப. 5.

17. மேலது, பக். 8, 9.

18. திருவருட்பா, அருள் விளக்க மாலை, 92.

19. ம. பொ. சி., வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு, பக். 115 – 116.

20. கணியன் பூங்குன்றனார், புறநானூறு, 192 : 1.

21. திருமந்திரம், இதோபதேசம், 3:1 (வ. எ. 2104).

22. திருக்குறள், 972.

23. தாயுமான அடிகள், எந்நாட்கண்ணி, 12.

24. திருவருட்பா, பிள்ளைப் பெரு விண்ணப்பம், 56. (ப. 102).

25. இராமலிங்க அடிகளார், சீவகாருணிய ஒழுக்கம்.

26. ஆதாரம் : ம. பொ. சி., மு. கா. நூ. ப. 120.

27. திருவருட்பா, அருள் விளக்க மாலை, 71. (ப. 165).

28. மேலது, 72. (ப. 165).

29. மேலது, பிள்ளைப் பெரு விண்ணப்பம், 37. (ப. 98).

30. மேலது, 60. (ப. 103).

31. மேலது, 59 (ப. 103).

32. மேலது, பிள்ளைச் சிறு விண்ணப்பம், 22 (ப. 90).

33. ஆதாரம் : புரசு. பாலகிருஷ்ணன், ஞானக்கவி ராமலிங்கர், ப. 45.

34. திருக்குறள், 256.

35. சாலை. இளந்திரையன், 'வள்ளலாரின் வழி' ச. க. ச. ச. சங்க நூற்றாண்டு விழா மலர், பக். 51–52.

36. நா. கிரிதாரி பிரசாத், 'அருட்பா–ஓர் உணர்வுச் சித்திரம்', மு. கா. மலர். பக். 11–112.

37. திருவருட்பா, தனிப்பாடல்கள், 58 (ப. 366).

38. மேலது, ஆதாரம் : ம.பொ. சி., மு. கா. நூ. ப. 152.

39. ச. சாம்பசிவனார், மு. கா. நூ. ப. 202.

40. திருக்குறள், 993.

41. திருவருட்பா, பராபரன் உண்மை நிலையம், 2 (ப. 355).

42. தாயுமானவர் பாடல், சிற்சுகோதய விலாசம், 7.

43. இராமலிங்க அடிகளார், சீவகாருணிய ஒழுக்கம்.

44. சி. சு. பாரதியார், பாரதியார் கவிதைகள், நந்தலாலா, 1.

45. திருவருட்பா, 'உய்வகைகூறல், 9 (ப. 321).

46. மேலது, பிரிவாற்றாமை, 9 (ப.228).

47. திரு. வி. க., இராமலிங்க சுவாமிகள் திருவுள்ளம், பக். 18–38.

48. திருவருட்பா, மகாதேவமாலை, 38 (வ. எ. 2108).

49. திரு. வி. க., மு. கா. நூ. ப. 23.

50. திருவருட்பா, திருக்கதவம் திறத்தல், 2 (ப. 86).

51. மேலது, உய்வகை கூறல், 4 (ப. 327).

52. மேலது, அத்துவிதானந்தத் தனுபவவிடையீடு, 3 (ப. 84).

53. மேலது, தோழிக்குரிமை கிளத்தல், 8 (ப. 279).

54. மேலது, ஞானசரியை, 3 (ப. 342).

55. ம. பொ. சி., மு. கா. நூ. ப. 302.

56. சுவாமி விவேகானந்தர், இந்தியப் பிரசுரங்கள், ப. 32.

57. சந்திரகாந்த், 'கபீர்தாசரும் இராமலிங்க அடிகளும்', மு. கா. மலர், ப. 54.

58. இராம. மலர்விழி மங்கையர்க்கரசி, ஒப்பியல் சமய நோக்கில் வள்ளலார், ப. 201.

# 4.4
# சித்தி வளாகம்

*முன்னுரை*

> *"கருணையே வடிவமாகக் கனிந்தவர் வள்ளலார். அவர் வாழ்க்கை, அருள் வாழ்க்கை – தவவாழ்க்கை– தனிவாழ்க்கை! 'நானுரைக்கும் வார்த்தையெலாம் நாயகன்தன் வார்த்தை!' என்கிறார் அடிகள். அந்த அளவிற்கு ஈசனையும் அவரையும் பிரித்துப் பார்க்க முடியாத வாழ்க்கை, அவருடைய வாழ்க்கை! இரக்கத்தையும் அவரையும் பிரித்துப் பார்க்க முடியாத வாழ்க்கை – அவர்தம் வாழ்க்கை! 'துணி வெளுக்க மண்ணுண்டு, தோல் வெளுக்கச் சாம்பலுண்டு; மணி வெளுக்கச் சாணையுண்டு; மனம் வெளுக்க மார்க்கமில்லையே!' என்று ஏங்குவோர்க்கு, ஒரு மார்க்கத்தை – பெரு மார்க்கத்தை – சன்மார்க்கத்தைக் காட்டுகிற வாழ்க்கை, இராமலிங்க வள்ளலாரின் வாழ்க்கை. அவர்தம் வாழ்க்கையையும், வார்த்தைகளையும், இயல்புகளையும், இச்சைகளையும் எண்ணுந்தோறும் எண்ணுந்தோறும் நம்முடைய நெஞ்சம் நெகிழ்கிறது. நம்மையுமறியாமல் அவரைத் தொழுகிறது. 'என்மார்க்கம், இறப்பொழிக்கும் சன்மார்க்கம்' என்று உறுதிகூறி, 'சமரச சன்மார்க்க சங்கத்தைச் சார்ந்திடுமின், சத்தியம், நீர் நன்மார்க்கம்சேர்வீர் இந்நாள்' என்று நம்மை அன்போடு அழைக்கும் வள்ளலாரின் அன்பழைப்பை ஏற்றுக் கொண்டால், 'ஒருவரையொருவர் உயிரறச் செய்யும்' கொடுமையறிந்து உலகம் வாழும்!"* [1]

என அடிகளாரின் அருட்டன்மை குறித்து இயம்புவர் சவுந்தரம் கைலாசம்.

அடிகளார் உருவாக்கிய 'சன்மார்க்க சங்கத்'தோடு தொடர்புடையது 'சித்தி வளாகம்'. இவ்விடத்திலிருந்து அடிகளார் ஆற்றிய 'சமய நல்லிணக்கச்

சிந்தனைகள்' குறித்து ஒரு சிறிது ஆராய்வதே இவ் இயலின் நோக்கம்.

## '*சித்திவளாக*' இருப்பிடம்

1870 மே திங்களில், வடலூரில் 3 ஆண்டு வாசத்திற்குப் பின், அடிகளார், மேட்டுக்குப்பத்திற்குச் சென்று வாழலானார் என்பது முன்னரும் குறிப்பிடப்பட்டுள்ளது.

அப்போது சில வைணவ ஆசாரியர்களுக்காக வருங்காலத்தில் அவர்கள் தங்குவதற்கென ஓர் இடம் அமைக்கப்பட்டிருந்தது. அதற்குத் 'திருமாளிகை' என்றுபெயர். ஆனால் அம்மாளிகை, எவரும் தங்குவாரின்றி வெறுமனே கிடந்தது. அதில் இருக்குமாறு ஊர் மக்கள் அடிகளாரை வேண்டிக் கொண்டனர். அதற்கிசைந்து அடிகளாரும் அங்கு இருக்கத் தொடங்கினார். அதற்குச் 'சித்திவளாகம்' என்று பெயரிட்டார். எனவே அது, 'சித்திவளாகத் திருமாளிகை' என்று வழங்குப்படுவதாயிற்று.

இறைவனது அருள் ஈண்டுச் 'சித்தி' எனப்பட்டது; 'வளாகம்' என்பதற்கு, 'இடம், பரப்பு' என்று பொருள்.

அடிகளார் இந்த மாளிகையில், தாம் சித்தி பெற்ற 1874ஆம் ஆண்டுவரை தங்கியிருந்தார். நாள்தோறும் மாலையில், ஆங்கு வருவோர்க்கு நன்மொழி கூறுவார்; சன்மார்க்க நெறியை உபதேசிப்பார். அருட்பெருஞ்சோதித் தனிப்பெருங் கருணை ஆண்டவனை ஒளி வடிவில் வழிபடும் கோயிலாகவும், அடியார்களுக்கு உபதேசிக்கும் பள்ளியாகவும், தம்முடன் கருத்து வேறுபாடு கொண்டு கலந்துரையாட வருபவர்களுடன் விவாதிக்கும் அரங்காகவும் இதனைப் பயன்படுத்தி வந்தார்.

'வார்தா' என்னும் சிற்றூரில், காந்தியடிகள் ஆசிரமம் அமைத்த பின், அவ்வூர், அறிஞர்கள், அரசியல் தலைவர்கள், அறத்துறை ஞானியர்கள் ஆகியோர் யாத்திரை செய்யும் புனிதத் தலமாக மாறியதை அனைவரும் அறிவர். ஒரு நூற்று இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன், மேட்டுக்குப்பம் 'சித்திவளாகம்' அதே பெருமையைப் பெற்றிருந்தது. அடிகளாரின் உபதேச மொழிகளை நாள்தோறும் கேட்க விரும்பியவர்கள் பலர். அவர்கள், மேட்டுக்குப்பம் அருகே நிலம் வாங்கி, வீடுகட்டிக் குடும்பங்களோடு குடியேறலாயினர்.

'அருட்பெருஞ்சோதி'க்கெனச் சன்மார்க்க சங்கம் கண்ட அடிகளார், அச்சங்கத்திற்கென ஒரு கோயிலையும் காண விரும்பினார். கோயிலும் உருவாயிற்று; அதற்குச் 'சத்திய ஞான சபை' என்று பெயரிட்டார். வடலூருக்கு 'உத்திரஞான சிதம்பரம்' எனும் பெயர் வழங்குவதாயிற்று!

அடிகளார், தம் அகத்தே கண்ட அருட்பெருஞ்சோதியை அனைவருக்கும் வெளிப்பிம்பமாய்க் காட்டியருளவே 'சத்திய ஞான சபை'! சிதம்பரத்தில் உள்ள பொற்சபையும், சிற்சபையும் அமைத்து, அவற்றுடன் ஒரு ஞான சபையையும் அமைத்தார். இஃது எண் கோண வடிவாய் அமைந்துள்ளது. இதன்கண் பன்னிருகால் மண்டபம் ஒன்றும் உண்டு. உள் மண்டபத்தின் நடுவே, அருட்பெருஞ்சோதி ஆண்டவர், பிரதிஷ்டை செய்யப்பட்டார். தீபத்துடன், சுமார் ஐந்தடி உயரமுள்ள கண்ணாடி, சித்திவளாகத்தில் 48 நாட்கள் (அஃதாவது ஒரு மண்டலம்) வழிபாடு ஆன பிறகு, பிரதிஷ்டை செய்யப்பட்டது. நடுச் சோதியை மறைத்தவாறு, வெவ்வேறு நிறங்களில் ஏழு திரைகள் தொங்கின.[2] இந்த ஏழு மாயத்திரைகள் குறித்து அடிகளார், தமது 'அருட்பெருஞ்சோதி அகவலி'ல் விளக்கியுள்ளார்.

வடலூர் ஞானசபை அமைக்கப்பட்டுள்ள அடிப்படைத் தத்துவங்கள் பற்றி அறிஞர்கள் விளக்கியுள்ளனர்.

இந்த ஞானசபையில் நடைபெறும் வழிபாடுகளும், அடிகளாரின் ஞானமுறைப்படியேதான் அமைந்திருந்தன:

1. சபை, எம்மதத்தினருக்கும், எவ்வர்க்கத்தினருக்கும், எத்தேசத்தினருக்கும் புறம்பு இல்லை;
2. ஆனால், ஆன்மநேயத்தை ஒட்டிய ஒரு 'நீக்கல்' இருந்தது. அஃதாவது, உயிர்க்கொலையும், புலைப்புசிப்பும் உடையவர்கள், சபைக்கு வெளியே நின்றுதான் வழிபடவேண்டும்; இவர்கள், வேறு இரு சபைகளிலும் நுழைதலாகாது;
3. புலை, கொலை நீத்தவர்களும், மூவாசையில் பற்றில்லாதவர்களில் ஒருவர், சபையைச் சுத்தப்படுத்துவதற்கும்; விளக்கிற்குத் திரி முதலாயின இடுவதற்கும் தகுதிபெற்றவராவர்;
4. வழிபாட்டிற்கு மத்தளம், தேங்காய், பழம், தீப—தூப—திருநீறுகள் முதலிய நைவேத்திய ஆராதனைப் பிரசாதம் எதுவும் கிடையாது;
5. சபையில், குத்துவிளக்கு, பித்தளைவிளக்கு, குளோப்புவிளக்குக் கூடாது; உட்புறவாயில்களுக்குப் பக்கத்தில் தகரக் கண்ணாடி விளக்குகளே வைக்கவேண்டும்.[3]

அடிகளார், சித்தியடைந்த பின், வழிபாடு தடைப்பட்டிருந்த இச்சபைக்குத் 'திருமுருக' கிருபானந்தவாரியார், திருப்பணி செய்து, 24—4—1950இல், குடமுழுக்கு நடத்தினார் என்பது குறிப்பிடத்தக்கது.

வள்ளலார் அமைத்த இச் 'சித்திவளாகம்', அருள்ஒளி பெற்றுத் திகழ்ந்தது. அடியார்பலர் சூழ்ந்திருந்தனர் என்பது ஒருபுறம் இருக்க, அடிகளாரை ஆட்கொண்ட ஆண்டவனே அந்த ஏழைக்குடிசைக்கு வருகை புரிந்தான் என்றால், அதன் பெருமையை அளவிட்டுரைக்க இயலாது!

*"வானிருக்கும் பிரமர்களும் நாரணரும் பிறரும்*
*மாதவம்,பன் னாள்புரிந்து மணிமாட நடுவே*
*தேனிருக்கும் மலரணைமேல் பளிக்கறையி னூடே*
*திருவடிசேர்த்து அருள்களனச் செப்பி, வருந்திடவும்,*
*நான்இருக்கும் குடிசையிலே வலிந்துநுழைந்து எனக்கே*
*நல்லதிரு அருள் அமுதம் நல்கியது அன்றியும் என்*
*ஊன் இருக்கும் குடிசையிலும் உவந்து நுழைந்து அடியேன்*
*உள்ளம்எனும் சிறுகுடிசை உள்ளும் நுழைந் தனையே!"*[4]

என்பது அடிகளார் திருவாக்கு!

"ஒளி வடிவான் இறைவன், நான் இருக்கும் இச்சித்திவளாகக் குடிசையிலே வலிந்து நுழைந்தான்; எனக்கு அருள் அமுதம் வாரி வழங்கினான்; மேலும், என் உடம்பாகிய குடிசையிலும் உவப்புடன் நுழைந்தான்; அடியேனது உள்ளம் எனும் சிறுகுடிசையினுள்ளும் நுழைந்தனனே? என்னே அவன் கருணை?" என வியந்து பாடுவதை இப்பாடலில் காணலாம்.

வள்ளுவர், "இறைவன், அடியார்களின் மனமாகிய தாமரை மலரில் வீற்றிருப்பவன்" என்னும் பொருள்பட,

*"மலர்மிசை ஏகினான்"*[5]

என்று கூறியது இவண் ஒப்புநோக்கத்தகும்!

*"அடிகளார் சித்திவளாகத்து அமர்ந்து அடியார்க்கு வழங்கிய போதனைகள், புத்தபகவான், போதிமரத்தினடியில் அமர்ந்து தம் சீடர்களுக்கு வழங்கிய உபதேசங்களையே நினைவூட்டுகின்றன. அடிகளாரின் அமுத உரையைப் பருகுங்கால், நம் அகக்கண்களுக்கு அகத்தியர்–வான்மீகி போன்ற முனிவர்களெல்லாம் காட்சியளிக்கின்றனர். . . . தாயுமானவர், பட்டினத்தார், அருணகிரியார் போன்று அருளியலைப் போதிப்பதோடு நின்றாரல்லர் வள்ளலார். அவர், உலகியல் வாழ்க்கையில் கடைப்பிடிக்க வேண்டிய*

*ஒழுக்க நெறிகளையும், தம்மை நாடிவந்த அன்பர்களுக்கு உபதேசித்தார்!'*[6]

என்கின்றார் ம. பொ. சிவஞானம்

அருளியலைப் போதிக்க வந்த அடிகளார், முத்திக்கு முதற்படி எது என்பது குறித்துக் கூறுவதாவது:

> *"நம்முடைய தலைவராகிய கடவுளை நாம் அடைதற்கு, அவர் எழுந்தருளியிருக்கும் கோட்டையின் சாவியாகிய அருள் வேண்டும். இவ் அருள், அன்பினாலல்லது வேறு வகையால் அடைவது அரிது!"*
>
> *"இவ் அன்பு, சீவகாருணியத்தாலல்லது வேறுவகையால் வாராது!"*
>
> *"அன்னிய உயிர்களுக்கு இம்சை உண்டாகாது நடத்தலே சீவகாருணியம் இதுதான் முத்தியடைவதற்கு முதற்படியாயிருக்கிறது!"*
>
> *"ஈசுவர பக்தி என்பது, எல்லா உயிர்களிடத்தும் கடவுள் வியாபித்திருப்பதை அறிதல்"*[7]

—இவற்றால், சமய நல்லிணக்கச் சிந்தனைக்கு அடிப்படை, எல்லா உயிர்களிடத்தும் அன்பு பாராட்டுவதேயாம் என்ற முடிவுக்கு வரலாம்

## *மரணமிலாப் பெருவாழ்வு*

பிறந்தவர் யாவரும் இறப்பது உறுதி. இது, அனுபவ உண்மை. ஆனால், மனிதன், 'மரணமிலாப் பெருவாழ்வு' எய்திடலாம் என்றவர் அடிகளார்.

"மரணம், நமது எச்சரிக்கையின்மையால் விளைவது" என்பது அடிகளார் கூற்று.

> *"சாகாத வித்தைக்கு இலக்கண இலக்கியம் தானாய் இருந்த பரமே!"*

என்று இறைவனைப் பாடுபவர் அடிகளார்.

> *"தேவர் குறளில் முதல் அதிகாரத்தில் 'சாகாத கல்வி' யைக் குறித்துச் சொல்லியிருக்கிறது. அதைத் தக்க ஆசிரியர் மூலமாகத் தெரிந்து கொள்ள வேண்டும்!"*[8]

என்பது அடிகளார் வாக்கு.

திருக்குறள், 'கடவுள் வாழ்த்து' அதிகாரத்தில்,

*"மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்*
*நிலமிசை நீடுவாழ் வார்"*

*"பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க*
*நெறிநின்றார் நீடுவாழ் வார்"*[9]

என்னும் குறட்பாக்களில் வரும், 'நீடுவாழ்வார்' என்பதற்கு,

*"இறவாமல் நித்திய தேகத்துடன் என்றென்றும்*
*வாழ்வார்"*

என்று பொருள் காண்பார் அடிகளார்.

மனிதன், சாகாமலிருக்கச் சுத்த சன்மார்க்கத்தைச் சார்ந்து நிற்றல் வேண்டும் என்பது அடிகளார் கூற்று.

*"சிறந்திடுசன் மார்க்கம் ஒன்றே, பிணிமூப்புமரணம்*
*சேராமல் தவிர்த்திடுங்காண் தெரிந்து வம்மின் இங்கே!"*[10]

என்று கூறும் அடிகளார், "மனிதன் சாவாமலிருக்க, அவன், முதலில், '**ஆன்மநேய ஒருமைப்பாட்டுணர்வைப் பெறவேண்டும்**' என அழுத்தமாகக் கூறுவர்.

மனிதகுலத்தை மரணத்திலிருந்து மீட்கவே ஆண்டவன் தம்மை அனுப்பியதாகவும் கூறுவார் அடிகளார்:

*"பன்னெறிச் சமயங்கள் மதங்கள் என்றிடும்ஓர்*
*பவநெறி இதுவரை பரவியது இதனால்*
*செந்நெறி அறிந்திலர்! இறந்துஇறந்து உலகோர்*
*செறிஇருள் அடைந்தனர் ஆதலின் இனிநீ,*
*புன்னெறி தவிர்த்து, ஒரு பொதுநெறி எனும், வான்*
*புத்தமுது அருள்கின்ற சுத்த சன்மார்க்கத்*
*தன்னெறி செலுத்துக என்ற,என் அரசே!*
*தனிநடராசன்,என் சற்குரு மணியே"*[11]

என்பது அடிகளார் திருவாக்கு.

தம்முடன் சேர்ந்தால், மரணத்தை ஒழித்து வாழமுடியும் என்று உறுதிகூறி அகிலத்தார் அனைவரையும் ஒருங்கே அழைத்தார்!

*"மற்றறிவோம் எனச்சிறிது தாழ்ந்திருப்பீர், ஆனால்*
*மரணம்எனும் பெரும்பாவி வந்திடுமே அந்தோ!*
*சற்றும்அதை நும்மாலே தடுக்கமுடி யாதே!*
*சமரசசன் மார்க்கசங்கத் தவர்கள் அல்லால் அதனை*
*எற்றிநின்று தடுக்கவல்லார் எவ்வுலகில் எவரும்*
*இல்லைகண்டீர்! சத்தியம் ஈது என்மொழிகொண்டு உலகீர்*
*பற்றியபற்று அனைத்தினையும் பற்றற விட்டு அருள்அம்*
*பலப்பற்றே பற்றியினோ என்றும்இற வீரே!"* [12]

என்ற பாடல் மூலம், மரணத்தை ஒழித்து வாழ முடியும் என்று உறுதியுமளித்துள்ளார் அடிகளார்.

தாம் சாவாவரம் பெற்றதைப் பல பாடல்கள் மூலம் அறிவித்துள்ளார் அடிகளார்.

*"இறவா வரம் அளித்து என்னை, மேல்ஏற்றிய*
*அறவாழி ஆம், தனி அருட்பெருஞ் சோதி!"* [13]

என்பது, அப்பாடல்களில் ஒன்று!

1870 அக்டோபர்த் திங்களில் ஒருநாள், அடிகளார், தம் உருவைப் பிறரிடமிருந்து மறைத்துக் கொண்டு, அங்ஙனமே சில நாட்கள் இருந்தார். இது கண்டு, சத்திய தருமச்சாலையில் உள்ளோர் அஞ்சிவிடுவார்களோ என்று எண்ணி, முன்னெச்சரிக்கையும் விடுத்தார். சித்தி வளாகத்தில் தாழிட்டுக் கொண்டு, பல நாட்கள் வெளிப்படவில்லை. பின்பு, அவர், தாமாகவே வெளிவந்தார்.

அடிகளார், தாம் செய்த தவம் பலித்து விட்டது; சித்தி கிட்டி விட்டது என்பதை எண்ணி ஆனந்தக் களிப்புற்றார்:

*"கட்டமும் கழன்றேன்; கவலைவிட் டொழித்தேன்;*
*கலக்கமும் தீர்ந்தனன்; பிறவிச்*
*சட்டமும் கிழித்தேன்; தூக்கமும் துறந்தேன்!*
*சாவையும் நோவையும் தவிர்த்தேன்!*
*சிட்டமும் அடைந்தேன்; சிற்சபை உடையான்*
*செல்வமெய்ப் பிள்ளை என்று ஒருபேர்ப்*
*பட்டமும் தரித்தேன்! எனக்கு இது போதும்!*
*பண்ணிய தவம் பலித்ததுவே!"* [14]

என்பது அடிகளார் திருவாக்கு!

அடிகளார் பாடிய திருவருட்பா ஆறு திருமுறைகளில், முன் ஐந்து,

சமயரீதியாகவும் உருவத் தோத்திரங்களாகவும் அமைய, ஆறாவதுதிருமுறை, சமயாதீதமாகவும், அருவஞானப்பாடல்களாகவும் அமைந்துள்ளன. இத்திருமுறையில்தான் 1596 அடிகள் கொண்ட 'அருட்பெருஞ்சோதி அகவல்' எனும்பகுதி இடம்பெற்றுள்ளது. அடிகளார், தமக்கு அருட்பெருஞ்சோதி அனுபவம் கிட்டியபோது பாடப்பட்டது என்பர் அறிஞர்.

*"சமயம் கடந்த தனிப்பொருள் வெளியாய்*
*அமையும் திருச்சபை அருட்பெருஞ்சோதி!"*

*"சாதியும் மதமும் சமயமும் காணா*
*ஆதி அநாதியாம் அருட்பெருஞ்சோதி!"*

*"சாதியும் மதமும் சமயமும் பொய்என*
*ஆதியில் உணர்த்திய அருட்பெருஞ்சோதி!"*

*"எம்மதம் எம் இறை என்ப, உயிர்த்திரள்*
*அம்மதம் என்றருள் அருட்பெரும்சோதி!"*

*"சமயம் குலமுதல் சார்பெலாம் விடுத்த*
*அமயம் தோன்றிய அருட்பெருஞ் சோதி!"*

*"அருள்நெறி ஒன்றே தெருள்நெறி மற்றெலாம்*
*அருள்நெறி என எனக்கு இயம்பியசிவமே!"*

*"உலகினில் உயிர்களுக்கு உறும் இடையூறு எலாம்*
*விலகநீ அடைந்து விலக்குக மகிழ்க!"*[15]

என்பன, இவ் அகவலில் அடிகளார் தெளிவிக்கும் 'சமய நல்லிணக்கச் சிந்தனைகள்'! "உலகினில் உயிர்கட்குநேரும் இடையூறு விலக வேண்டும்" என இறைவன்பால் வேண்டுவது அடிகளாரின் கருணை உள்ளத்தைக் காட்டுவதாம்! அதனால்தான், ஊரன் அடிகளும்,

*"திருவருட்பாவை ஒரு ஞான உடம்பாகக் கொண்டால், அதன் முகம், ஆறாம் திருமுறை. அதன்கண் 'அருட்பெருஞ்சோதி அகவல்', அக்கண்ணுள் மணியாகத் திகழ்வது, 'அருட்பெருஞ்சோதி' என்னும் மந்திரம்!"*[16]

என்று போற்றுவாராயினர்.

## காப்பிட்டுக் கொளல்

சத்திய தருமச்சாலையில் உள்ளோரின் செயற்பாடுகள், அடிகளார் உள்ளத்தை

*"இந்தச் சாலையால் எனக்கு மிகவும் சலிப்புண்டாகிறது....*

*சன்மார்க்கத்திற்கு ஒத்து, வாயடங்கி, மனமடங்கி இருக்க வேண்டும். என்மேற்பழியில்லை; சொல்லிவிட்டேன்; பின் வந்ததைப் படவேண்டும்!"* [17]

என எச்சரிக்கை விடுத்தார்.

அடிகளார், 1873 நவம்பர்த் திங்களில், தமது அறையிலிருந்த விளக்கை வெளியே வைத்துப் பின்வருமாறு தம் அன்பர்களுக்குக் கட்டளையிட்டார்:

*"இதைத் தடைப்படாது ஆராதியுங்கள். இந்தக் கதவைச் சாத்திவிடப் போகிறேன். இனிக் கொஞ்ச காலம் எல்லோரும், ஆண்டவர் இப்போது, தீப முன்னிலையில் விளங்குகிற படியால், உங்களுடைய காலத்தை வீணிற் கழிக்காமல், 'நினைந்து நினைந்து' என்னும் தொடக்கமுடைய 28 பாசுரம் அடங்கிய பாடலிற் கண்டபடி, தெய்வபாவனையை இந்தத் தீபத்திற் செய்யுங்கள்! நான் இப்போது இந்த உடம்பிலிருக்கின்றேன். இனி எல்லா உடம்பிலும் புகுந்து கொள்வேன்!"* [18]

எனவே, அடிகளார், இறைவனின் வருகையையும், தம் சித்தியையும் எதிர்பார்த்தனர் என்று தெரிகிறது. இக் கட்டளையில் அவர் குறித்துள்ள பாடல் வருமாறு:

*"நினைந்து நினைந்து உணர்ந்து உணர்ந்து நெகிழ்ந்து நெகிழ்ந்து அன்பே*
*நிறைந்து நிறைந்து ஊற்றெழுங்கண் ணீர் அதனால் உடம்பு*
*நனைந்துநனைந்து அருள்அமுதே நன்னிதியே ஞான*
*நடத்தரசே! என்னுரிமை நாயகனே என்று*
*வனைந்து வனைந்து ஏத்துதும் நாம் வம்மின்! உலகியலீர்!*
*மரணமிலாப் பெருவாழ்வில் வாழ்ந்திடலாம் கண்டீர்!*
*புனைந்துரையேன் பொய்புகலேன், சத்தியம் சொல் கின்றேன்!*
*பொற்சபையில் சிற்சபையில் புகுந்தருணம் இதுவே!"* [19]

பொற்சபையில், சிற்சபையில் புகுந்தருணம் பிறர்க்கு வாய்க்காமற் போயிருந்தாலும், அடிகளாருக்கு வாய்த்துவிட்டது!

அடிகளார், அன்று, தமது அறையிலிருந்து எடுத்து, வெளியே வைத்த அத் திருவிளக்கு– அருட்பெருஞ்சோதி விளக்கு, இன்றும் எரிந்து கொண்டிருக்கின்றது! இத்திருவிளக்கும், ஞான சபைத் திருவிளக்கும், இன்றும் மக்களைக் கூவிஅழைக்கின்றன!

தைப்பூசம் வந்தது! 1874 சனவரி –30 வெள்ளிக் கிழமையன்று! அன்பர்களிடம், 'அருட்பெருஞ்சோதி ஆண்டவரை வழிபட்டு உய்திபெறுங்கள்!' என்று கூறிவிட்டுத் தமது அறைக்குள் சென்று கதவைத் தாழிட்டுக் கொண்டவர்தாம்! அருட்பெருஞ்சோதியில்–இறைவன் திருவடியில் இரண்டறக் கலந்து விட்டார்!

## *புகழ்மாலை*

வள்ளல் இராமலிங்க அடிகளாரைக் குறித்துப் பலரும் பல்வேறு கோணங்களில் புகழ்மாலைகள் சூட்டியுள்ளனர். அவற்றுள் சில வருமாறு:

> *"அவர் (அடிகளார்) புத்தர், இராமகிருஷ்ணர் போன்ற ஒளி (தெய்வ) மைந்தர் மாத்திரம் இல்லை! கீட்ஸ், ஷெல்லி, பிளேக், டென்னிசன் போன்ற கவி மைந்தரும் ஆவார்! மேலும் அவர், ஒருமொழியின் உள்ளார்ந்த சாத்தியக் கூறுகளை வெளிப்படுத்தி, அதன் எல்லைகளை விரிவுபடுத்தியுள்ள கவி வல்லவர்களில் ஒருவர்! இந்தியாவிலும், உலகிலும், அடிகள், ஆச்சாரியர்கள், குரவர்கள் பலரின் மொத்தப் படைப்புக்களிடையே ஆங்காங்கே ஒரு சில உயர்வான கவிதைகள் தென்படுகின்றனதான்! ஆனால் இவை எதுவுமே இராமலிங்கரின் திட்டமிட்டுப் புனையப்படாத – ஆனால் நேர்த்தி துலங்குகிற, கவிதை வளத்திற்கு ஈடாகா!"* [20]

என்பர் புரசு. பாலகிருஷ்ணன்.

> *"இராமலிங்கர் மட்டும், வேறு எங்காவது பிறந்திருந்தால், அவர், 'உலக ஆன்மநேயத் தலைவராக'ப் போற்றப்பட்டிருப்பார். அவருடைய பாடல்களைத் தமிழர்கள் பாடிவந்தாலும் அவரைப் பற்றி நீண்ட நாட்களாக உணரவில்லை?"* [21]

என்பது சுத்தானந்த பாரதியார் கூற்று.

தெ. பொ. மீனாட்சிசுந்தரம், ஓர் ஆங்கிலக் கட்டுரையில், அடிகளார் அருளிய 'மரணமிலாப் பெருவாழ்வை' வியந்து போற்றுகின்றார்.[22]

*"ஞானி இராமலிங்கர், பெரிய பக்தர் என்று சொல்வதைக் காட்டிலும் அதைவிட மேலானவர்; அவர் ஒரு பெரிய ஆன்மீக முறையில் கடவுளின் மாயையை அறிய முனைபவர்; பெரிய கவிஞர்; பெரிய தத்துவஞானி, பெரிய, சமுதாய சீர்திருத்தவாதி! இத்துணையும் ஒரு பெரிய மனிதத்தன்மையிடம் குடி கொண்டிருந்தன!"*[23]

என்பர் கா. அப்பாத்துரை.

*"பாரத ஒருமைப்பாட்டின் அடிப்படையில், உலக ஒருமைப்பாட்டை உருவாக்க முயன்ற உத்தமரும், மனிதகுலத்துக்கு வந்தெய்திய சாதி, சமய வேறுபாடுகளாகிய சாபங்களை முறையே 'ஆன்மநேய ஒருமைப்பாடு, சமரச சன்மார்க்க சங்கம்' என்னும் நோன்புகளால் அகற்றி, மரணமிலாப் பெருவாழ்வு வாழச் 'சீவ காருணியம், இறைபக்தி' ஆகிய இரு மார்க்கங்களை வற்புறுத்திய உத்தமரும் ஆகிய இராமலிங்க அடிகளார் . . ."*[24]

என்கின்றார் த. செ. உமாபதி.

*"ஒரே சொல்லால் சொல்வதானால், புத்தர் 'கருணை' என்றார்; இயேசு 'அன்பு' என்றார்; இராமலிங்கர் 'சீவகாருணியம்' என்றார்!"*[25]

என்பது பி. நடராசன் கூற்று.

*"இந்தியாவில் 19ஆம் நூற்றாண்டில் ஏற்பட்ட ஆன்மீக வளர்ச்சியில், குறிப்பிடத்தக்க இடத்தை இராமலிங்கரால் உருவாக்கப்பட்ட சுத்த சன்மார்க்கநெறி பெறுகின்றது!"*[26]

என்பது, 'சமரச சுத்த சன்மார்க்க நெறி' பற்றி ஆய்வு செய்த பா. அருள்செல்வியின் கூற்று.

இவ்வாறு பலரும் பலவிதமாக ஏத்துவர். எனினும், 'வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு' குறித்து விரிவாக ஆராய்ந்து உலகுக்கு எடுத்துரைத்த ம. பொ. சி., கூறுவது சிந்திக்கத் தூண்டுவதாக உள்ளது:

*"இன்றைய பாரத – தமிழக மக்களிடையே பிரிவினை உணர்வு, அரசியல் வடிவத்தில் பிறந்திருக்கிறதென்றால்,*

அதற்கு அடிப்படைக் காரணம், சமுதாய ஒருமைப்பாட்டுணர்வு தொலைந்து, சாதி – சமயப் பிரிவுணர்ச்சி வளர்ந்திருப்பதுதான்! அதுவே மூல நோய்! அந்த மூல நோயினைத் தீர்க்கும் ஒரே மருந்து, 'உலக சமுதாய ஒருமைப்பாட்டுணர்வு'தான்! அதன் மற்றொரு பெயரே, 'ஆன்மநேய ஒருமைப்பாடு!'

"ஆன்ம நேய ஒருமைப்பாடு என்பது உலக சமாதான இயக்கத்தின் கொள்கையாக வேண்டும். அதுவே போர் வெறியிலிருந்து உலகத்தைக் காக்கும் புனித வாசகமாகும்.

"இராமலிங்க அடிகளார், தமிழகத்தில் – தமிழினத்தில் பிறந்திருந்தாலும், தமிழிலே பாடியிருந்தாலும், உலகனைத்துக்கும் அவர் பொதுவானவர்! அவர், உலகனைத்தையும் மரணமிலாப் பெரு வாழ்வினைப் போதிக்க வந்த சித்தர்!

"அந்த மகான் நம்மோடு இன்னமும் வாழ்கின்றார் என்னும் நினைப்பு, நமக்கு அளவற்ற ஆற்றலைத் தருவதாகும். அதனால் இராமலிங்கர் நம்முடைய உயிரிலே, உணர்விலே கலந்து வாழ்கின்றார் என்று நினைப்போமாக! அடிகள் மறையுங்கால், 'இனி நான் எல்லா உடம்பிலும் புகுந்து கொள்வேன்' என்று கூறினாரே, அதன்படி அவர் நம்மில் ஒவ்வொருவர் உடலையும் கோயிலாகக் கொண்டு வாழ்கிறார் என்று நம்புவது, நாம் இகத்தே பரத்தைப் பெற்று வாழ்வதற்கான வழியாகும்!

'மரணமிலாப் பெருவாழ்வு' ஒன்று உண்டென்று நம்பி, அதற்காக முயல்வோமானால், மரணத்தை ஒத்திபோடும் ஆற்றலையேனும் பெறுவதோடு, மீண்டும் பிறவாத பேரின்பத்தையும் அடைவோம். அதனால் மரணமிலாப் பெரு வாழ்வினை நம்பி, அதனைப் போதித்த பெருமானைப் போற்றுவோமாக!

"சாதிகளை ஒழிக்கும் புனிதப் பணியில் ஈடுபடுவோமானால், சாதி உயர்வு–தாழ்வுக்

*கொடுமையையேனும், ஒழித்து, 'எல்லோரும் ஓர் நிறை – எல்லோரும் ஓர் நிலை' என்ற சமத்துவத்தை நிலைநாட்ட இயலும்' அதனால் சாதிகளை ஒழிக்கச் சமரச சன்மார்க்க நெறி போதித்த பெருமானை நெஞ்சில் வைத்து அஞ்சலி செய்வோமாக!"[27]*

## *சீடர் இல்லாக் குறை!*

"உலகில் தோன்றியுள்ள 'சமயங்கள்' எனும் ஆறுகள் எல்லாம், 'கடல்' என்ற ஒரே இடத்தில்தான் சங்கமமாகின்றன. அந்தக் கடலின் கரை காண்டல் அரிதினும் அரிது! எல்லாம் வல்ல இறைவனும் 'கங்குகரை காணமுடியாதவனாக விளங்குகின்றான்'; மக்களுக்குக் 'கதி' யாகவும் உள்ளான்; அவனை வணங்கும் அன்பர்கள் தங்களுக்கு; "அருள்' எனும் தண்ணிழல் தருபவனும் அவனே! அந் நிழல், மூலம், அறியாமை எனும் மயக்கத்தையெல்லாம் நீக்குபவனும் அவனே; ஞானமாகிய குமுத மலர், மலர்வதற்குத் தோன்றும் சந்திரனாக விளங்குபவனும் அவனே! அனைத்தும் செய்ய வல்லவன் அவன் ஒருவனே!"

இப்பொருள்பட இராமலிங்க அடிகளார் பாடும் பாடல் இது:

*"பொங்குபல சமயமெனும் நதிகள் எல்லாம்*
*புகுந்துகலந் திடநிறைவாய்ப் பொங்கி ஓங்கும்*
*கங்குகரை காணாத கடலே! எங்கும்*
*கண்ணாகக் காண்கின்ற கதியே! அன்பர்*
*தங்கநிழல் பரப்பி, மயல் சோடையெல்லாம்*
*தணிக்கின்ற தருவே!பூந் தடமே!ஞானச்*
*செங்குமுதம் மலரவரும் மதியே எல்லாம்*
*செய்யவல்ல கடவுளே தேவ தேவே!"[28]*

அருட்பெருஞ்சோதி இராமலிங்க அடிகளார், (1) சமரச சன்மார்க்க சங்கம்; (2) சத்திய ஞானசபை; (3) சத்திய தருமச்சாலை; (4) 'சித்தி வளாகம்' முதலானவற்றின் மூலம், 'ஆன்ம நேய ஒருமைப்பாட்டுணர்ச்சி'யை உருவாக்கினார்; இவ் உணர்ச்சியே, 'சமய நல்லிணக்கச் சிந்தனைகள்' ஒவ்வொருவர் உள்ளத்திலும் உண்டாவதற்கும், அதனால் உலகத்து மக்களிடம் மட்டுமன்றி, உலகத்து உயிர்களிடத்திலும் அன்பு பாராட்டுவதற்கும் அடிப்படை எனலாம்.

இராமகிருட்டிண பரமஹம்சருக்கு ஒரு விவேகானந்தர் தோன்றியது போல, இராமலிங்க அடிகளாருக்கும் ஒரு சீடர் தோன்றாதது பெருங்குறையே? அப்படி ஒரு 'சீடர் பரம்பரை' வழிவழியாகத் தோன்றியிருக்குமானால், அடிகளாரது திருப்

பெயராலேயே 'பொதுவுடைமைச் சமயம்' தோன்றியிருக்கும் என்பதில் ஐயமில்லை!

எவ்வகையில் நோக்கினாலும், கற்கண்டில் எப்பகுதியைச் சுவைத்தாலும் இனிப்பது போலத் திருவருட்பாவில் எந்த ஒரு பகுதியைப் பார்த்தாலும் 'சமய நல்லிணக்கச் சிந்தனை' மிளிர்வது காணலாம்!

அருட்பா வழி நிற்பதும, சமயக் காழ்ப்புணர்ச்சியின்றி வாழ்வதும் ஒவ்வொருவரின் கடமையாகும்!

வாழ்க வள்ளலார்!

*முடிபுகள்*

இவ் இயல் வாயிலாக அறியத் தகுவன:

1. அடிகளார் உருவாக்கிய 'சமரச சன்மார்க்க சங்கத்'தோடு தொடர்புடையது, 'சித்திவளாகம்';
2. இவ் வளாகத்தில் அடிகளார், இறுதிவரை அதாவது 1874ஆம் ஆண்டுவரை தங்கியிருந்து, சன்மார்க்க நெறிகளைப் போதித்து வந்தார்;
3. 'சத்திய ஞானசபை' என்ற ஒரு கோயிலையும் உருவாக்கினார்; அங்கே அருட்பெருஞ் சோதி ஆண்டவர் பிரதிட்டை செய்யப்பட்டார்; தீபம், கண்ணாடி, ஏழு திரைகள் இடம் பெற்றன.
4. இந்த 'ஞான சபை', எம்மதத்தினர்க்கும், எவ்வர்க்கத்தினர்க்கும், எத்தேசத்தவர்க்கும் புறம்பானதில்லை;
5. இச் சபையில் வழிபாடு எவ்வாறு நிகழ வேண்டும், வழிபாடு செய்ய யார்யார் தகுதியுடையோர் என்பன போன்ற, கண்டிப்பான சில விதிமுறைகளையும் அடிகளார் வகுத்துள்ளார்;
6. இச் 'சித்திவளாக'க் குடிசைக்கு இறைவனே எழுந்தருளினான் என்று கூறியவர் அடிகளார்;
7. 'அன்பு' ஒன்றினால்தான் இறைவனை அடைய முடியும்; அந்த அன்பும், சீவகாருணியத்தால்தான் உண்டாகும் என்பது அடிகளார் கருத்து;
8. 'மரணமிலாப் பெருவாழ்வு வாழ்ந்திடலாம் கண்டீர்' என்று மக்களைக் கூவியழைத்தவர் அடிகளார்;
9. மரணப் பிடியிலிருந்து மக்களை மீட்பதற்காகவே ஆண்டவன் தம்மை

இவ்வுலகுக்கு அனுப்பி வைத்ததாக அடிகளார் கூறினார்;

10. அடிகளார், சிற்சில காலங்களில், தம் அன்பர்களுக்குத் தெரியாதவாறு, திருவுருவை மறைத்துக் கொண்டதும் உண்டு;

11. "உலகினில் உயிர்கட்கு உறும் இடையூறு எலாம் விலக அருள்செய வேண்டும்" என இறைவனிடம் முறையீடு செய்தவர் அடிகளார்;

12. கி. பி. 1874 – சனவரி 30! தைப்பூச நன்னாள்! "அருட்பெருஞ் சோதி ஆண்டவரை வழிபட்டு உய்தி பெறுங்கள்" என்று அடியார்களுக்குக் கூறித் தமது அறையிலிருந்த திருவிளக்கை வெளியே வைத்துவிட்டுத் திருக்கதவம் தாழிட்டுக் கொண்டவர் அடிகளார்! பின்பு வெளியே வரவில்லை! இறைவன் திருவடியில் பூத உடம்போடு இரண்டறக் கலந்து விட்டார்;

13. அடிகளாரைப் பொறுத்தவரை, 'மரணமிலாப் பெரு வாழ்வு' கைவரப் பெற்றவரே;

14. 'சமய நல்லிணக்கச் சிந்தனைகள்' உருவாக இராமலிங்க அடிகளார் காட்டிய நெறி: "ஆன்ம நேய ஒருமைப்பாடு– சீவகாருணிய ஒழுக்கம் – சமரச சன்மார்க்கம்" என்பனவாகும்;

15. இராமகிருட்டிண பரமஹம்சருக்கு ஒரு விவேகானந்தர் தோன்றியது போல், இராமலிங்க அடிகளாருக்கும் ஒருவர் தோன்றியிருந்தால், இன்று உலகம் எங்கும் சாதி, சமயப் பிணக்குகளின்றிச் சமய நல்லிணக்கச் சிந்தனை கொண்டு செயல்படும் நிலை ஏற்பட்டிருக்கும் என்று துணிந்து கூறலாம்;

16. இவ்வகையில், சமய நல்லிணக்கச் சிந்தனைகளுக்கு ஓர் அரிய நூலாக விளங்குவது, இராமலிங்க அடிகளார் அருளிய 'திருவருட்பா' எனலாம்;

17. அருட்பா வழிநின்று, சமயக்காழ்ப்புணர்ச்சியின்றி வாழ வேண்டுவது ஒவ்வொருவரது கடமையாகும்.

## சான்றெண் விளக்கம்

1. சவுந்தரம் கைலாசம், 'இறப்பொழிக்கும் சன்மார்க்கம் வாழ்க', *ச. க. ச. ச. சங்க நூற்றாண்டு விழாமலர்*', (ப. 2)

2. புரசு. பாலகிருஷ்ணன், ஞானக்கவி ராமலிங்கர், பக். 81–82.

3. மேலது, ப. 88.

4. திருவருட்பா, திருவடிப்புகழ்ச்சி,' (ப. 173).

5. திருக்குறள், 3

6. ம. பொ. சி., வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு, ப. 215.

7. ஆதாரம், மேலது, பக். 215, 216.

8. ஆதாரம்; மேலது, பக். 237, 239.

9. திருக்குறள், 3;6.

10. திருவருட்பா, ஆதாரம் : ம.பொ.சி., மு.கா.நூ. ப.240.

11. மேலது, சற்குருமணி மாலை, 2.

12. மேலது, மரணமிலாப் பெருவாழ்வு, 8.

13. மேலது, அருட்பெருஞ்சோதி அகவல், 79.

14. மேலது., சிவ புண்ணியப் பேறு 10, (ப. 231).

15. மேலது, அருட்பெருஞ்சோதி அகவல், 31; 60; 106; 115; 150; 491; 795.

16. ஆதாரம்; புரசு. பாலகிருஷ்ணன், மு. கா. நூ. ப. 97.

17. மேலது, ப. 104.

18. மேலது, பக். 105, 106.

19. திருவருட்பா, மரணமிலாப் பெருவாழ்வு, 1.

20. புரசு. பாலகிருஷ்ணன், மு. கா. நூ. ப. 131.

21. "Ramalinga would have been the World - Spiritual Leader now had he born elsewhere. Tamilians did not understand him for a long time though they sang his hymns with fervour". - Shuddhanandha Bharatiar, 'The Clarion Call of Ramalingam, ச. க. ச. ச. சங்க நூற்றாண்டு விழா மலர், ப. (?).

22. T. P. Meenakshisundaram, 'The Glorius Life without Death", மேலது, ப. (?).

23. "Saint Ramalinga is a great Bhakta, but he far more than that - he is a great Mystic, a great Poet, a great Philosopher and a great Social Reformer, all rolled up into one personality, half

- divine and halfhuman."

- K. Appathurai, "The Great Mystic - cum - Reformer of the Ninteenth Century, Saint Ramalinga, the Apostle of Light", மேலது (மலர்) ப. (?).

24. உமாபதி த. செ., 'குருதரிசனம்', மேலது (மலர்), ப. 121.

25. "In a word, it is what the Buddha called Compassion, Christ called Love and Ramalinga called Jeevakarunyam". - B. Natarajan 'Economic Vision of Sri Ramalinga', – மேலது (மலர்), ப. 89.

26. பா. அருள் செல்வி, சமரச சுத்த சன்மார்க்க நெறி (ஆய்வு), ப.297.

27. ம. பொ. சி., மு. கா. நூ., பக். 404–405.

28. திருவருட்பா, மகா. தேவமாலை, 15.

# 5

# முடிவுரை

இவ் ஆய்வேட்டின் இயல்களில் கூறப்பட்ட முடிபுகள், ஈண்டுத் தொகுத்துத் தரப்படுகின்றன.

இராமலிங்க அடிகளார், 1823இல், மருதூரில் தோன்றினார்; சென்னையில் வாழ்ந்தார்; இளமையிலேயே முருகன் காட்சி கண்டவர்; தமது 9ஆம் வயதிலேயே பாடத் தொடங்கிய அருளாளர்; உறவினர் வற்புறுத்தலுக் கிணங்கத் திருமணம் செய்தாரேனும், இல்லற இன்பத்தில் சிறிதும் நாட்டங் கொள்ளவில்லை. சென்னைவிட்டேகிக் 'கருங்குழி' என்ற ஊரில் ஏறத்தாழ 10 ஆண்டுகள் இருந்தார்; தில்லை நடராசப் பெருமான் மீது பக்திகொண்டு, எண்ணிலாப் பாடல்கள் பாடினார்; தம் பணிகளுக்கு ஏற்ற இடமாக வடலூரைத் தேர்ந்தெடுத்துச் 'சமரச சுத்த சன்மார்க்க சங்கம், சத்திய தருமச்சாலை' முதலாயின நிறுவினார்; 1873 முதல் 'மேட்டுக்குப்பம்' எனும் இடத்தில் 'சித்திவளாகத் திருமாளிகை'யில் தங்கிச் சமரச சன்மார்க்கத் தொண்டு புரிந்தார்; 'மரணமிலாப் பெருவாழ்வு வாழ்ந்திடலாம்' என்றுரைத்தவர், அவ்வாறே சித்திவளாகத்தில் 1874இல் மறைந்து போனார். அவர் ஏற்றி வைத்த சுடர், இன்றும் அணையா விளக்காய் ஒளிவிட்டுத் திகழ்கின்றது!

தமிழகத்தில் 'வாழையடி வாழை' என வந்த அடிகளார் திருக்கூட்டத்தில் ஒருவர் அடிகளார்; அவர் முதன்முதலாகப் பாடியது, 'சென்னைக் கந்தர் தெய்வ மணிமாலை – சரணப்பத்து' என்பதாம்; அடிகளார் பாடிய 'திருவருட்பா' ஆறு திருமுறைகள் கொண்டது; காற்றில் கலந்தது போக, எழுதி வைக்கப் படாதது போகக் கிடைத்த அருட்பாப் பாடல்கள் 5818; இவைதவிர உரைநடைநூல்களும் எழுதியுள்ளார். அருட்பா – ஓர் அமுதக் கடல்! அதனினின்றும் பக்தி, சமரசம், சமய நல்லிணக்கம் முதலான நன்முத்துக்கள் காணலாம்; இறைவனை நோக்கிச் செல்லும் உயிரின் பயணப் படிநிலைகளை அருட்பாவில் காணலாம்.

'சமய நல்லிணக்கச் சிந்தனை'களுக்கு அன்றே அடிகோலியவர் அடிகளார்; பண்டைத் தமிழர்கள், கடவுள் நம்பிக்கை கொண்டவர்கள்; உண்மைச் சமயவாதி, பிறர்க்கோ, பிற உயிர்க்கோ தீங்கு செய்ய எண்ணமாட்டான்; சமயங்கள் பல எனினும் அவை ஒன்று சேரும் இடம் ஒன்றேயாம்! சமயம் வேறு; சமயவாதிகள் வேறு. சமயவாதிகளே, உலகப்போர், சண்டை சச்சரவுகட்குக் காரணமானவர்கள்;

அடிகளாரின் சமயம், சைவம்; எனினும் அவரது உள்ளம் சமரசத்தை நாடியது; அதனாலேயே 'சமரச சன்மார்க்க சங்கம்' முதலானவற்றைத் தோற்றுவித்தார்.

அடிகளார், கருணையின் வடிவம்; பரவாழ்வில் அடையத் தகும் இன்பத்தை இவ்வுலக வாழ்விலேயே பெறவேண்டும் என்ற உயர்நோக்கத்தால் அவர் கண்டது, 'சமரச சன்மார்க்க சங்கம்'. நாடு – மொழி – சமயவெறி – சாதிவெறி இவற்றையெல்லாம் கடந்தது அடிகளார் கண்ட 'சமரசம்'! இது, சமயம் கடந்த சமுதாய அமைப்பாக விளங்கியது; உயிர்க்குலம் அனைத்தும் ஒன்று; 'கொல்லாமை, புலால் உண்ணாமை' சிறந்த அறங்கள்; சாதி, சமய, வருண வேற்றுமைகளை அகற்றி, ஆன்ம நேய ஒருமைப்பாட்டுணர்ச்சியை வளர்த்தல், 'சீவகாருணிய ஒழுக்கத்'தைக் கடைப்பிடித்தல் ஆகியன சங்கத்தின் நோக்கங்கள். 'அருட்பெருஞ்சோதி – தனிப்பெருங் கருணை' என்பது அடிகளார் இவ்வுலகத்திற்கு விட்டுச் சென்ற தாரகமந்திரம்! இவ்வகையில் அடிகளார் – ஒரு சமயப் புரட்சியாளர், சமுதாயப் புரட்சியாளர்!

அடிகளாரின் சமயப் புரட்சிக்கு அடிகோலியது, அவர் அமைத்த 'சத்திய தருமச்சாலை'. பசித்துன்பம் அகற்றுதலே இச்சாலையின் உயரிய நோக்கம். 'பசி' என எவர்வரினும், அவருக்கு உணவளிக்க வேண்டும் என்பது அடிகளாரது ஆணை! உலகம் அமைதி பெற அடிகளார் கண்ட நெறி, 'ஆன்ம நேய ஒருமைப்பாடு' என்னும் பெரு நெறி. இந்நெறி நின்றால் உலகம், இன்பமயமாகும்.

'சித்திவளாகம்' அடிகளார் உருவாக்கிய 'சமரச சன்மார்க்க சங்கத்' தோடு தொடர்புடையது; இவ் வளாகத்தில் அடிகளார் இறுதி (1874) வரை தங்கியிருந்து, சன்மார்க்க நெறிகளைப் போதித்து வந்தார். 'சத்திய ஞான சபை' என்ற கோயிலையும் உருவாக்கி, ஆங்கு 'அருட்பெருஞ் சோதி' ஆண்டவரைப் பிரதிட்டை செய்து, எம்மதத்தினரும், எவ்வர்க்கத்தினரும், எத்தேசத்தவரும் இச்சபை புறம்பானதில்லை என்றார். இங்கு வழிபாடு எவ்வாறு, எத்தகையோரால் நிகழ்த்தப்பட வேண்டும் எனச் சிலவிதிமுறைகளையும் வகுத்துத் தந்தார். 'அன்பு' ஒன்றினால்தான் 'சீவகாருணியத்' தைத் கடைப்பிடிக்க முடியும்; ஆண்டவனையடைய இதுவே வழி; மரணமிலாப் பெருவாழ்வு வாழ்ந்திடலாம்; என்று கூறியவர் அவ்வாறே மரணம் இன்றி இறைவனோடு கலந்தார். அவ்வாறு அவர் இறைவனோடு கலந்த நாள் : 30–1–1874 தைப்பூச நன்னாள். அவர், தம் அடியார்களுக்குக் கூறிய இறுதி அறிவுரை. "அருட்பெருஞ்சோதி ஆண்டவரை வழிபட்டு உய்தி பெறுங்கள்!" என்பதாகும். தம் அறையில் இருந்த திருவிளக்கை வெளியே வைத்துவிட்டுக் கதவைத் தாழிட்டுக் கொண்டவர், திரும்ப வரவே இல்லை! 'சமய நல்லிணக்கச் சிந்தனைகள்' உருவாக வேண்டுமெனில், அடிகளார் மன்பதைக்குக் காட்டிய, 'ஆன்மநேய ஒருமைப்பாடு –

சீவகாருணிய ஒழுக்கம் – சமரச சன்மார்க்கம்' ஆகியவற்றைப் பின்பற்றி நடக்க வேண்டும்! இராம கிருட்டின பரமஹம்சருக்கு ஒரு விவேகானந்தர் கிடைத்தது போல, அடிகளாருக்கும் ஒரு சீடர் உருவாகியிருந்தால், இன்று 'சமரச சன்மார்க்க சங்கமே' ஒரு பெரிய உலக நிறுவனமாகியிருக்கும்; எங்கும் அமைதி தவழ்ந்திருக்கும்!

அடிகளார் ஏற்றி வைத்த திருவிளக்கு இன்றும் ஒளிவிட்டுத் திகழ்கின்றது; சத்திய தருமச்சாலையில் இன்றும் உணவு வழங்கப்பட்டு வருகின்றது! இலட்சக் கணக்கானோர் 'அருட்பெருஞ்சோதி – தனிப்பெருங்கருணை' என முழக்கமிடுகின்றனர்!

இவ்வகையில் இச் 'சிற்றாய்வு' பெரிதும் பயன்படும் எனலாம். இதே தலைப்பில் மேலும் விரித்துக் காணவும், உலகத்துச் சான்றோர்கள் கூறிய கருத்துக்களோடு ஆராய்ந்து பார்க்கவும் வழி உண்டு! அவ்வாறு செய்தால், மன்பதை நன்மை பெறும் என்பது திண்ணம்!

# பின்னிணைப்பு

## (அ) துணைநூற் பட்டியல்

### முதன்மை ஆதாரம்

அருட்பெருஞ்சோதி அச்சகம், திருவருட்பா – ஆறாவது திருமுறை, அருட்பெருஞ்சோதி அச்சகம், சென்னை, 1942.

ஊரன் அடிகள், ந. ரா., (புதுப்பித்தது), திருஅருட்பா – முதல் 5 திருமுறைகள், இராமலிங்கர் பணி மன்றம், சென்னை, 2ஆம் பதிப்பு, 1981.

கிரிதாரி பிரசாத், நா., திருவருட்பா – திருவமுதத்திரட்டு, இராமலிங்கர் பணி மன்றம், சென்னை, 2ஆம் பதிப்பு, 1994.

### துணைமை ஆதாரங்கள்

அருள்செல்வி, பா., சமரச சுத்த சன்மார்க்க நெறி (ஆய்வு), அருள்சோதி பதிப்பகம், சென்னை, 1991.

அன்பழகன், கோ., உலக சமய ஒற்றுமைக்கு வழிகாட்டி, மணிமேகலைப் பிரசுரம், சென்னை 1999.

இராமலிங்க சுவாமிகள், சீவகாருணிய ஒழுக்கம், கழகம், 1923.

________________., மனுமுறை கண்ட வாசகம், கழகம், 1925.

இளமுருகனார், மயிலை கிழார்., தேவாரம் அடங்கன்முறை, திருவருளகம், சென்னை, 1953.

ஊரன், ந. ரா., (ப. ஆ.) சத்திய தருமச் சாலை நூற்றாண்டு விழா – திரு அருட்பா நூற்றாண்டு விழா மலர், திருச்சி மாவட்ட சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கம், திருச்சி, 1967.

., (ப. ஆ.) சன்மார்க்க சங்க நூற்றாண்டு விழா மலர், (1865–1965), திருச்சி மாவட்ட சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கம், திருச்சி, 1965.

கதிரைவேற் பிள்ளை, நா., ஸ்ரீமத் தாயுமான சுவாமிகள் திருப்பாடற்றிரட்டு, பி. இரத்தினநாயகர் சன்ஸ், சென்னை, (ஆ.இ).

கந்தசாமி, எம். ஏ., பாண்டியன், ஆர் (உ. ஆ.) அருட்பா அமுது 600, ஸ்ரீ மாப்பிள்ளை விநாயகர் பதிப்பகம், மதுரை, 1990.

கலியாண சுந்தரனார், திரு. வி., இராமலிங்க சுவாமிகள் திருவுள்ளம், பாரி நிலையம், சென்னை, 6ஆம் பதிப்பு, 1994.

சண்முகனார், குங்கிலியம், பழ., தயவுருவ – அருளாளத் தமிழ் மகனார், வள்ளலார் குருகுலம், சென்னை, 1987.

சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்க நூற்றாண்டுவிழா – சிறப்புமலர், விழாக் குழு, சென்னை, 1965.

சாமிநாதைய்யர், உ. வே., (ப.ஆ.), புறநானூறு மூலமும் பழைய உரையும், உ. வே. சா. நூல் நிலையம், சென்னை, 7ஆம் பதிப்பு, 1971.

சாம்பசிவனார், ச., சமய நல்லிணக்கச் சிந்தனைகள், வளவன் வெளியீடு, மதுரை, 2000.

., சிவனாரின் வள்ளுவர் தெள்ளுரையும் சொல்லடைவும், வளவன் வெளியீடு, மதுரை, 1998.

., நாவலர் சோமசுந்தர பாரதியார், சாகித்திய அகாதெமி, புதுதில்லி, 1999.

சித்தாந்த சாத்திரம் பதினான்கு மூலமும் உரையும், சைவ சித்தாந்தப் பெருமன்றம், சென்னை, 3ஆம் பதிப்பு, 1994.

சித்பவானந்தர், சுவாமி., (வி.உ.), தாயுமானவர் இயற்றிய சின்மயானந்த குரு, ஸ்ரீ இராம கிருஷ்ண தபோவனம், திருப்பராய்த் துறை, 3ஆம் பதிப்பு, 1978.

சிவஞானம், ம. பொ., வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு, இன்ப நிலையம், சென்னை, 4ஆம் பதிப்பு, 1968.

சுப்பிரமணியபிள்ளை, கா., (உ.ஆ.), தனிப்பாடல் திரட்டு, முதல் பாகம், பி. இரத்தினநாயகர் சன்ஸ், சென்னை, 1939.

ஞானசம்பந்தன், அ.ச., பெரியபுராணம் – ஓர் ஆய்வு, த.ப.க. தத்துவ மையம், காஞ்சிபுரம், 1987.

திருவேங்கட நாயடு, க. வ., (உ.ஆ.,), திருவருட்பா இங்கிதமாலை, கலாரத்நாகாயந்திர சாலை, 1904.

துரைசாமி பிள்ளை, ஔவை. சு., (உ.ஆ.), திருவருட்பா மூலமும் உரையும் – 1–570 செய்யுட்கள், அ.ப.க., அண்ணாமலைநகர், 1979.

தொல்காப்பியம்–பொருளதிகாரம், இளம்பூரணர் உரை, கழகம், சென்னை, மறுபதிப்பு, 1967.

நாராயண வேலுப்பிள்ளை, எம்., (உ.ஆ.), திருமந்திரம் மூலமும் தெளிவுரையும், தமிழ்நிலையம், சென்னை, 2ஆம்பதிப்பு, 1995.

., (உ.ஆ.), பதினோராம் திருமுறை, முதல் தொகுதி, மூலமும் தெளிவுரையும், தமிழ் நிலையம், சென்னை, 1995.

பாரதியார் கவிதைகள், பாரதி பதிப்பகம், சென்னை, 5ஆம் பதிப்பு, 1967.

பாலகிருஷ்ணன், புரசு., ஞானக்கவி ராமலிங்கர், நேஷனல் புக் டிரஸ்ட் இந்தியா, புதுதில்லி, 2ஆம் மறுஅச்சு, 1996.

பெரியபுராணம், திருவாவடுதுறை ஆதீனம், திருவாவடுதுறை, 1988.

மலர்விழி மங்கையர்க்கரசி, இராம, ஒப்பியல் சமய நோக்கில் திருவருட்பா, அருவி பதிப்பகம், மதுரை, 1999.

ஸ்ரீ சந்திரன், ஜெ., (உ.ஆ.), ஐம்பெருங் காப்பியங்கள் – மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி மூலமும் தெளிவுரையும், தமிழ்நிலையம், சென்னை, 2ஆம் பதிப்பு, 1998.

Ramanujachari, R., 'Saiva Siddhanta', **Collected Lectures on Saiva Siddhanta**, A.U., Annamalainagar, 1965.

# பிற்சேர்க்கை

## இராமலிங்க அடிகளார் பற்றிய சில குறிப்புகள் *

| | |
|---|---|
| 1. வாழ்ந்த இடங்கள் | : சென்னை – 1825 – 1858.<br>கருங்குழி – 1858 – 1867<br>வடலூர் 1867 – 1870.<br>மேட்டுக்குப்பம் – 1870 – 1874 |
| 2. வெளியிட்ட நூல்கள் | : ஒழிவிலொடுக்கம் – 1851<br>தொண்டமண்டல சதகம் – 1885<br>சின்மய தீபிகை – 1857 |
| 3. இயற்றிய நூல்கள் | : மனுமுறை கண்ட வாசகம்<br>சீவகாருணிய ஒழுக்கம்<br>திருவருட்பா 6 திருமுறைகள், மற்றும் எண்ணற்றவை. |
| 4. நிறுவியன | : சன்மார்க்க சங்கம் – 1865<br>சத்திய தருமச் சாலை – 1867<br>சத்திய ஞானசபை – 1872<br>சித்திவளாகம் – 1870 |
| 5. நிறுவத்திட்டமிட்டவை | : வைத்திய சாலை; சாஸ்திர சாலை;<br>உபகாரச் சாலை;<br>விருத்தி சாலை; உபாசனா சாலை;<br>யோக சாலை; விவகார சாலை;<br>சன்மார்க்க போதினி (1867); சமரச வேத பாடசாலை (1872);<br>சன்மார்க்க விவேக விருத்தி (1867) மாத இதழ். |

| | |
|---|---|
| 6. அற்புதங்கள் | : 5 திங்கள் பருவத்தில், சிதம்பர ரகசியத்தை வெட்ட வெளியாகக் காண்டல்; வடிவுடையம்மமை, அண்ணியார் உருவில் தோன்றிப் பொங்கல் அளித்தல்; தண்ணீர் விளக்கு எரித்தது; கனவு, நனவுகளில் பலசமயங்களில் இறைவன் தோன்றி அருள் செய்தது. |
| 7. அருள் வாழ்க்கை | : 9 ஆம் வயதில் முருகப்பெருமானால் ஆட்கொள்ளப் பெறுதல்; 12 ஆம் வயதில், முதல் முதலாக, ஞான வாழ்க்கை தொடக்கம்;<br>வழிபடு கடவுள் : முருகன்;<br>வழிபடு குரு : திருஞான சம்பந்தர்;<br>வழிபடு நூல் : திருவாசகம்<br>(இளமையில் அமைத்த முறை) |
| 8. கொள்கைகளிற் சில | : கடவுள் ஒருவரே! அவரே அருட்பெருஞ்சோதி ஆண்டவர்! சிறுதெய்வ வழிபாடு கூடா; அத் தெய்வப் பெயரால் உயிர்ப்பலி கூடாது; புலால் உண்ணக்கூடாது; சாதி சமய முதலிய வேறுபாடுகள் கூடா! எவ்வுயிரையும் தம்முயிர்போல் எண்ணும் ஆன்மநேய ஒருமைப்பாட்டுரிமை கடைப்பிடித்தல்; ஏழைகளின் பசி தவிர்த்தல்; சீவகாருணிய ஒழுக்கமே பேரின்ப வீட்டின் திறவுகோல்! |

ஆதாரம் : – சென்னை அருட்பெருஞ்சோதி அச்சகம் வெளியிட்ட திருவருட்பா – 6ஆவது திருமுறை, பிற்சேர்க்கை, பக். 21–23.

# அடிகள் வரலாற்றின் கால அட்டவணை *

| | | |
|---|---|---|
| 1823 | அக்டோபர் 5 | பிறப்பு. தென்னார்க்காடு மாவட்டத்தில் சிதம்பர தலத்திற்கு அருகிலுள்ள மருதூரில். |
| 1824 | மார்ச் | சிதம்பரதரிசனம். பெற்றோர்கள் குழந்தைப் பெருமானைத் தரிசனத்திற்கு இட்டுக்கொண்டு செல்ல, சிதம்பர ரகசியம் அவருடைய மனத்தில் பதிந்து ஒன்றாகி விடுகிறது. |
| | ஏப்ரல் | தந்தை இராமையபிள்ளையின் மரணம். |
| | ஜூன் | செங்கல்பட்டு மாவட்டத்தில், பொன்னேரியில் தாயார் சின்னம்மையின் குடியேற்றம். அங்கிருந்து சீக்கிரமே தம் மூத்த மகன் சபாபதிப் பிள்ளையுடன் உறைய அவர் சென்னைக்குச் செல்லுகிறார். |
| 1828 | | பிள்ளைப் பெருமான் கல்வி பயிலுவதில் ஊக்கம் காட்டாததால், தமையனாரால் உணவு உடைகள் மறுக்கப்பட்டு, சிறிது காலம் பாலத்துறவியாகிறார். பிறகு அண்ணி பார்வதி அம்மாளால் பேணப்பட்டு, தமையனாராலும் ஏற்றுக் கொள்ளப்படுகிறார். |

| | |
|---|---|
| 1832 | கண்ணாடியில் தணிகை முருகனின் தரிசனம் காண்கிறார். அது தொடங்கி இறைவனாட்சியின் உணர்வில் வாழ்கிறார். பாடல்கள் புனையத் தொடங்குகிறார். அவருடைய முதற் பாடல் சென்னை கந்த கோட்டத்தைப் பற்றிய தெய்வ மணிமாலை. |
| 1835 | ஞான வாழ்க்கையின் தொடக்கம். திருவொற்றியூர் தியாகப் பெருமானின் வழிபாடு. பெருமானையும் வடிவுடைய அம்மையையும் பற்றிய பாடல்கள். |
| 1849 | தொழுவூர் வேலாயுத முதலியார் அடிகளின் மாணவராதல். அவர் பிற்காலத்தில் சென்னை மாகாணக் கல்லூரியில் தமிழ்ப் பண்டிதரானார். |
| 1850 | அடிகளின் திருமணம், தமக்கை உண்ணாமுலை அம்மாளின் பெண் தனம்மாளுடன். |
| 1858 | அடிகள் சென்னையை விட்டு நீங்கி, வழியில் சீர்காழி, வைத்தீச்வரன் கோயில் முதலிய தலங்களைத் தரிசித்து,கருங்குழிக்கு வருதல். அங்கு உறைந்து கொண்டிருந்த அடிகளின் தமையனார் பரசுராம பிள்ளை கால மடைதல். அடிகள் கருங்குழியில் வேங்கட ரெட்டியார் வீட்டில் உறையத் தொடங்குதல். அங்கிருந்து அடிக்கடி சிதம்பரம் சென்று வழிபடுதல். |
| 1865 | அடிகள் சமரசவேத சன்மார்க்க சங்கம் நிறுவுதல். |

| | | |
|---|---|---|
| 1967 | ஜனவரி 15 | பெண்ணை நதிக் கரையில் திருப்பாதிரிப்புலியூரின் அருகாமையில் பிரம்ம சமாஜத்துப் பிரமுகர் ஸ்ரீதாஸ்வாமி நாயுடுவுடன் விக்கிரக வழிபாடு பற்றிய விவாதம். |
| | பிப்ரவரி 2 | தருமச்சாலை கட்டுவதற்கு வடலூர் மக்கள் அடிகளுக்கு எண்பது காணி (நூற்றிஎட்டு ஏக்கர்கள்) நிலம் இனாமாகக் கொடுத்தல். |
| | மே 23 | சத்திய தர்மச்சாலையின் திறப்புவிழா. அச்சமயம் வேங்கட சுப்பதீட்சிதர் அடிகளின் ஜீவகாருண்ய ஒழுக்கத்தின் முதற்பாகத்தை வாசிக்கின்றனர். |
| | | அடிகள் சன்மார்க்க போதினி பாடசாலையும் சன்மார்க்க விவேகவிருத்தி பத்திரிக்கையும் தொடங்குவதைத் தெரிவிக்கிறார். ஆனால் அவை செயற்படவில்லை. |
| | | அடிகள் கருங்குழியை விட்டு வடலூரில் உறையத் தொடங்குகின்றார். |
| 1869 | | சபாபதி சிவாச்சாரியார் வடலூருக்கு வந்து அடிகளின் சீடராகிறார். பிறகு அவர் சத்திய ஞான சபையின் முதற் பூசகரானார். அடிகளின் 'அருட்பெருஞ்ஜோதி' அகவலையும் வெளியிட்டார். |
| 1870 | | அடிகள் வடலூரைவிட்டு, அருகில் உள்ள மேட்டுக் குப்பத்தில் சித்திவளாக மாளிகையில் உறையத் தொடங்குகின்றார். |

| | | |
|---|---|---|
| 1871 | ஜூன் | வடலூரில் சமரச சுத்த சன்மார்க்க சத்திய ஞான சபை (சுருக்கப் பெயர், சுத்திய ஞான சபை) கட்டத் தொடங்குகிறார். |
| | | அடிகள் மேட்டுக்குப்பத்திலேயே இருந்துகொண்டு சபை கட்டுவதையும் தருமச் சாலையின் விவகாரங்களையும் பார்வையிடுகிறார். படிப்படியாய் இவற்றிலிருந்து விலகிக் கொண்டு, தீவிர யோக சாதனங்களில் முனைகிறார். |
| 1872 | ஜனவரி 11 | அடிகள் சமரசவேத பாடசாலை தொடங்குவதற்கான அறிவிப்பு விடுகிறார். ஆனால் இது உருவாகவில்லை. |
| | | அடிகள் உரைநடையில் நான்கு சன்மார்க்க விண்ணப்பங்கள் செய்து கொள்கிறார். |
| | ஜனவரி 25 | சத்தியஞான சபையின் தொடக்கம், முதற் பூசவிழா. அடிகள் இது பற்றிய விளம்பரம் வெளியிடுகிறார்கள். |
| | | பல உபதேசங்கள் செய்கின்றனர். இவை பின்னர், 'திருவருள் மெய்ம்மொழி' என்ற தலைப்பில் புத்தகமாக வெளியிடப்படுகின்றன. |
| | மார்ச் 9 | அடிகள் சாலையிலுள்ளோர்க்கு ஒழுக்கக் கட்டளை இடுகிறார். |
| | ஏப்ரல் 18 | 'அருட்பெருஞ்ஜோதி அகவல்' எழுதப் பெற்று முடிகிறது. |

| | | |
|---|---|---|
| | ஜூலை 18 | அடிகள் ஞானசபை வழிபாட்டுக்கான விதிகளை 'ஞானசபை விளக்க விபவப் பத்திரிக்கை' எனப் பிறப்பிக்கிறார்கள். |
| | | நிறுவிய நிலையங்களின் பெயர்களிலிருந்து சமய வாசனையுடைய சொற்களை நீக்கி, சன்மார்க்கப் பெரு நெறியைக் குறிக்கும் வகையில் பெயர் மாற்றம் செய்கிறார். |
| | | அவை பின்வருமாறு: |
| | | 1. முதற்பெயர்: சமரசவேத சன்மார்க்க சங்கம். |
| | | மாற்றுப்பெயர்: சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கம். |
| | | 2. முதற்பெயர்: சமரசவேத தருமச் சாலை. |
| | | மாற்றுப்பெயர்: சமரச சுத்த சன்மார்க்க சத்திய தருமச் சாலை. |
| 1872 | நவம்பர் 25 | சித்தி வளாகத்திலும் தருமச் சாலையிலும் வசிப்பவர்கள் பரஸ்பரம் பழகும் முறைக்கான எச்சரிப்புப் பத்திரிக்கை. |
| 1873 | அக்டோபர் 22 | சன்மார்க்கக் கொடியைச் சித்தி வளாகத்தில் கட்டுதல். அச்சமயம் அருளிய 'பேருபதேசம்', அடிகள் ஞானசபையை மூடி விடுகிறார்கள். |

| | | |
|---|---|---|
| | நவம்பர் | சித்தி வளாகத்தில் திருவிளக்கு வழிபாடு ஏற்படுத்தி, கதவை மூடிக் கொண்டு, பெரும்பாலும் அறைக்குள்ளேயே இருக்கத் தொடங்குகிறார்கள். |
| 1874 | ஜனவரி 30 | சித்தி அடைதல். |

* ஆதாரம் : புரசு. பாலகிருஷ்ணன் எழுதிய 'ஞானக்கவி ராமலிங்கர்', பக். 134–138.1.



**அடிகள் திருவுருவம்**

வடலூர் சத்திய தருமச்சாலையில் வழிபாட்டில் உள்ளவாறு.



**சித்திவளாகம்**

மேட்டுக்குப்பத்திலுள்ளது. 1870 முதல் அடிகள் உறைந்த இடம். அடிகள் 30-1-1874இல் இதனுள் உள்ள ஒரு அறையுட் புகுந்து தமது உருவை மறைத்துக் கொண்டு இறைவனோடிரண்டறக் கலந்தார்கள்.



சத்திய தருமச்சாலை

## முனைவர் ச.சாம்பசிவனார்



| | | |
|---|---|---|
| பிறந்தநாள் | : | 29.9.1929 |
| கல்வித்தகுதி | : | தமிழ் எம்.ஏ.,பிஎச்.டி., பண்டிதம், வித்துவான், பண்டிதப் பயிற்சி. |
| பணி | : | 50 ஆண்டுக் காலம் ஆசிரியப் பணி; சிறப்புநிலைப் பேராசிரியர், மதுரைக் காமராசர் பல்கலைக் கழகம். |
| நூல்கள் | : | 80க்கும் மேற்பட்டவை. |
| ஆய்வுக் கட்டுரைகள் | : | 100க்கும் மேலானவை. |
| கவிதைகள் | : | 300க்கும் மேலானவை. |
| தமிழ்த்தொண்டு | : | மதுரைத் திருவள்ளுவர் கழகம், மதுரைத் தமிழ்ச் சங்கம், தமிழகத் தமிழ்க் கல்லூரி ஆசிரியர் மன்றம், நாவலர் பாரதியார் இலக்கிய மன்றம் ஆகியவற்றில் நீண்டகால ஆக்கப் பணிகள். |
| பெற்ற சிறப்புக்கள் | : | செந்தமிழ்ச் செல்வர், தமிழாகரர், அருந்தமிழ் மாமணி, நல்லாசிரியர், தமிழ்ச்செம்மல் என விருதுகளும் பட்டங்களும். |
| வெளிநாட்டுப் பயணம் | : | மலேசியா, சிங்கப்பூர், மொரீசியசு முதலான நாடுகளில் நடந்த உலகளாவிய மாநாடுகளில் பங்கு ; இலங்கை - சிறப்பு அழைப்பு. |
| இதழாசிரியர் | : | 'தமிழ் மாருதம்' எனும் தரமான-உலகளாவிய திங்கள் இதழின் ஆசிரியர். |
| பிற | : | மதுரை மாநகரில், 'தமிழ்மாருதம் - மனோன்மணி சாம்பசிவனார் நூல்நிலையக் கட்டடம்' உருவாக்கப்பட்டுள்ளது. மாணவர்களின் நன்மதிப்பு ; செந்தமிழ் கற்கச் சிவனார் உரை நூல்கள். |